அனைத்திந்திய நூல்வரிசை

# பசித்தவர்கள்

## குறுநாவலும் சிறுகதைகளும்

தேவனூரு மகாதேவ

கன்னடத்திலிருந்து தமிழில் :
பாவண்ணன்




நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா

# பொருளடக்கம்

# முன்னுரை

1970ஐத் தொடர்ந்த பத்தாண்டுகள் கன்னட இலக்கிய உலகில் முக்கியமான காலமாகும். எழுத்து, வாழ்வு என்கிற இரண்டு நிலைகளிலும் சமூக விழிப்புணர்வு பரவிய காலகட்டம் இது. இவற்றோடு அரசியல் ரீதியான சந்தர்ப்பமும் அமைந்து இதற்கு ஒரு முழுமையைத் தந்தது. மேலும், பண்பாட்டு ரீதியிலான மாற்றத்தையடையவும் சாத்தியமாயிற்று. இதனால் 'தலித் பிரக்ஞை', 'சூத்திரப் பிரக்ஞை', 'சமூகப் பிரக்ஞை' என்கிற பிரிவுகள் நிறுவப்பட்டு நிலைகொண்டன.

1973ல் அமைச்சராக இருந்த பி. பஸவலிங்கப்பா அவர்கள் 'கன்னட இலக்கியம் முழுக்கவும் புண்ணாக்கு' என்று குறிப்பிட்ட காரணத்தால் எங்கும் ஒரு பெரும் எழுச்சி வெடித்தது. அப்போது 'தலித் போராட்டக் குழு' தோன்றி, கர்நாடகத்தின் கிராமங்கள்தோறும் தலையெடுத்து நின்றது. இக்கட்டத்தில் தலித்துகள் அல்லாதவர் தலித்துகளுக்குப் பெரும் காவலாக இருந்தார்கள். முதல் தலைமுறை தலித்துக்களில் சிலர் எழுத்தின் மூலமும் தம்மை வெளிப்படுத்திக் கொண்டிருந்தனர். 'தலித்துகள்', 'தலித் இலக்கியம்' என்பதற்குக் கர்நாடகத்தில் பின்வரும் விதத்தில் பொருள் காண்பதும் கருத்துரைப்பதும் காணக் கிடைக்கக்கூடிய ஒன்றாகும்: "பல நூற்றாண்டுகளாக சமுதாயத்தில் சமூக ரீதியாகவும் அரசியல் ரீதியாகவும் சுரண்டலுக்கு உள்ளாகியவர்கள், சமூகத்தோடு வாழ இயலாமல் ஊருக்கு வெளியே வசித்து, கீழான வேலைகளை நம்பியிருந்து, தம் பெயரையும் வெளிச்சொல்லக் கூச்சம் கொள்கிற, தீண்டாமைக்குள்ளாகிற, வெளித்தள்ளப்பட்ட எல்லாரும் தலித்துகள்."

'தலித்துகள்' என்னும் வார்த்தைக்கு மேற்கண்ட விதத்தில் விளக்கமளிக்கிற போது, 'தலித் இலக்கியம்' என்னும் பிரிவைப் பற்றியும் கச்சிதமான விளக்கம் உண்டு. 'தலித்துகளும் தலித்துகள் அல்லாதோரும் தலித் பிரக்ஞையோடு உருவாக்கும் இலக்கியமே தலித் இலக்கியமாகும்'—என்று குறிப்பிடப்படுவதுண்டு. தலித் இலக்கியத்திற்குள் சில உட்பிரிவுகளை வகுக்கும் முறையும் இருக்கிறது. தலித் அல்லாதவர்கள் தலித் பிரக்ஞையோடு

தலித்துக்களைப் பற்றிப் படைத்த இலக்கியத்தை 'அ-தலித் இலக்கியம்' என்றும், தலித்துகள் தலித் பிரக்ஞையோடு தலித்துகள் குறித்துப் படைத்த இலக்கியம் 'தலித்துகளின் இலக்கியம்' என்றும் குறிப்பிடப்படுகின்றன. அதாவது தலித்துகள் இலக்கியமும் அ-தலித்துகளின் இலக்கியமும் சேர்ந்து தலித் இலக்கியமாகிறது. இப்படிப்பட்ட பிரிவுகள் ஆய்வின் பொருட்டு மட்டுமே செய்யப்பட்டவையாகும்.

தலித் இலக்கியப் போராட்டம் அரசியலை மட்டுமே மையமாகக் கொண்டிருக்கவில்லை. மாறாக, மனிதர்களை மைய மாகக்கொண்டிருந்தது. 'மனிதர்கள் என்றால் சமூகம்—சமூகம் என்றால் மனிதர்கள்' என்று புரிந்துகொண்டிருந்ததால், சேர்ந்து வாழ்வது என்பது தவிர்க்க இயலாதது என்கிற தெளிவுமிருந்தது. மேலும், மனிதர்களின் மனங்களை மாற்றுவதே மிகப் பெரிய புரட்சி என்கிற தெளிவும் இருந்தது. இப்படியாகத் தலித்துகள் அல்லாதவர்களோடு சேர்ந்து ஓர் அமைப்பைக் கட்டியது. தலித்துகளின் படைப்புகளில் நேர்முக எதிர்ப்பு அவ்வளவாக முக்கியமற்றிருப்பதற்கு இதுவே முக்கியக் காரணம். தொடக் கத்தில் உரத்த குரலெழுப்பும் சில படைப்புகளும் வந்துள்ளன.

அரசியல் சிந்தனையை ஒரு பிரிவாகக் கொண்டிருந்த தலித் போராட்டம் தார்மீக, சமூக பண்பாட்டுச் சிந்தனைகளையும் தனக்குள் கொண்டிருந்தது. அ-தலித்துகளின் இலக்கியத்தில் எதிர்ப்புணர்வு முக்கியமானதாக இருந்ததெனில், தலித் இலக் கியம் தலித் வாழ்வின் அடையாளமாக இருக்கிற பண்பாட்டுத் தகவல்கள் நிரம்பிய ஒன்றாக விமர்சகர்கள் கண்களில் பட்டது. சமூக மாற்றத்திற்கான ஆயுதமாகவும் புதிய அசலான அனுபவத் தைத் தரக்கூடியதாகவும் புரிந்து கொள்ளப்பட்டது. மேலும், அசலான புரட்சி இலக்கியம், முற்போக்கு எண்ணங்களும் எழுச்சியும் ஊட்டுகிற பயன்பாட்டு ரீதியிலான இலக்கியம், யதார்த்த இலக்கியம் என்றும்கூட இது கணிக்கப்பட்டது.

மொழியின் தூய்மை, சாதி, பிராமணீயம் முதலியவற்றைப் பற்றித் தலித்துகள் திரிசங்கு நிலையில் இருந்தார்கள். போராட்டமானது தலித் பிரக்ஞையாளர்களுக்குச் சுயமரியாதை யுடன் கூடிய வாழ்வை மேற்கொள்ளச் செய்தது. இக்கால கட்டத்தில் போராட்டத்தில் இலக்கியத்தையும் ஒரு கருவியாய்ப் பயன்படுத்திக்கொண்டார்கள். படிப்பறிவு உள்ளவர்களையும் படிப்பறிவு அற்றவர்களையும் இலக்கியத்தின் மூலம் சென் றடைவதற்குப் பல விதமான முயற்சிகளை மேற்கொண்டார்கள்; வெற்றியடையவும் செய்தார்கள். தம் முரட்டு மொழியையே அல்லது கொச்சை மொழியையே இலக்கியத்திலும் படைத்

தார்கள். வட்டார மொழியின் அமைப்பு மிகவும் வியப்புத் தரக்கூடிய ஒன்றாகும். இம்மொழி சிலருக்கு, 'சிறப்பத்தில் இசையை மீட்டுவது போன்ற மொழியாக' இருந்தது; இன்னும் சிலருக்கு 'மென்று விழுங்க முடியாத கவளமாக' இருந்தது. இம்மொழியைப் பயன்படுத்தும் நோக்கம், இலக்கிய முயற்சியின் வழியாக இலக்கிய வரலாற்றில் இடம் பெறுவது அல்ல. இங்கே மொழியோடு பண்பாடே பேருருக்கொண்டு பொலிகிறது.

மார்க்சியச் சிந்தனை இங்கே பரவலாக இருந்தாலும், டாக்டர் அம்பேத்கர் அவர்களின் சிந்தனைகள் மிகப்பெரிய அளவில் செல்வாக்குப் பெற்றிருப்பது காணக்கிடைக்கக்கூடிய விஷயமே ஆகும். பரம்பரை இலக்கியத்தைப் பற்றி ஆய்வுக் கண்ணோட்டத்துடன் கூடிய மரியாதை இருக்கிறது. அதாவது மரபு இலக்கியத்தைப் படித்துப் பொருள் புரிந்துகொள்ளும் போது, அதில் பயின்று வரும் பேதங்களை அடையாளப் படுத்திப் புரிந்துகொள்ளும் குணமே முக்கியமாக இருக்கிறது. மேலும், பண்பாடு மற்றும் வரலாற்றைக்கட்டும் வேலையிலும் முன்னிலையில் இருக்கிறது. இதற்கு முன்பு குறிப்பிட்டதைப் போல தலித்துகளின் திரிசங்கு நிலையே காரணமாகும்.

தலித்துகளுக்கு முதுகெலும்பாக நிற்பதற்கு தலித் அல்லா தவர்களும் தொடக்கத்தில் மிகப்பெரிய அளவில் முயற்சி செய்தனர். இதனாலேயே தலித்துகளும் முற்போக்காளர்களும் சகோதர உணர்வுள்ளவர்கள் என அழைக்கப்பட்டார்கள். முற்போக்காளர்களின் வர்க்கப் போராட்டம் மற்றும் வர்க்கச்சார்பு, தலித்துகளின் வருண எதிர்ப்பு மற்றும் சாதி எதிர்ப்புப் போர்— என வேறுவேறு நிலைபாடுகளைக்கொண்ட சூழல்களிலும், சில குழப்பமான சிந்தனைகள் மேலோங்கிய காலகட்டத்திலும், இவர்கள் துணிச்சலாகச் செயல்பட்டார்கள். இச்செயல்பாடுகள் வருண பேதங்கள் எல்லை மீறாத வகையில் இருக்கச் செய்தன. மெல்ல மெல்லப் பண்பட்டு வரும் மனங்கள் சிற்சில சமயங்களில் கொதிப்பேறி வெடிக்கவும் செய்கின்றன. தலித்துகளுக்கு பௌதிக சக்தி இல்லை, அவர்களுக்கு நாங்களே மூளையாக இருக்க வேண்டும் என்னும் அ-தலித்து களின் செயல்பாடு தலித்துகளின் சுயமரியாதையைத் தாக்குவதாக இருந்தது. இவை அனைத்தும் இலக்கிய உலகில் விளைவுகளை ஏற்படுத்தாமல் இல்லை.

படித்த தலித் தலைமுறையினரால் முதலில் தொடங்கப் பட்ட தலித் போராட்டம், இலக்கிய உலகில் முதன்முதலில் கவிதை வடிவத்தோடு அடியெடுத்து வைத்தது. விரல்விட்டு எண்ணத் தகுந்த படைப்பாளிகளிடையே பெரும்பாலும் கவிஞர்களே இருந்தார்கள். அதற்கப்புறம்தான் கதைகளும்

நாவல்களும் வெளிவந்தன. எண்ணிக்கையில் குறைவாகவே இருப்பினும், கன்னட இலக்கிய உலகின் அஸ்திவாரத்தையே அசைத்தன. இலக்கிய உலகில் குறிப்பிடத் தகுந்த படைப்பாளிகளின் பெயர்களைச் சொல்ல வேண்டுமெனில் தேவனூரு மகாதேவ, சித்தலிங்கையா, அரவிந்த மாலகத்தி, ம.ந. ஜவரய்யா, முள்ளூரு நாகராஜ், கே.பி. சித்தய்யா, எல். ஹனுமந்தய்யா, எச். கோவிந்தய்யா, வி. முனி வெங்கடப்பா, கே. கோவிந்தராஜு, சோமண்ணா ஹொரங்கள்ளி ஆகியோரைக் குறிப்பிடலாம்.

கன்னடத்தில் தலித்துகளைப் பற்றி இதுவரைக்கும் வந்த கதைகள் அவர்களைக் கருணையோடும் இரக்கத்தோடும் மட்டுமே பார்ப்பதாக இருந்தன. இந்த அறிவும் தலித் பிரக்ஞையோடு கூடிய தேவனூரு மகாதேவ அவர்களின் கதைகள் வெளிவந்த பிறகுதான் தோன்றியது. இவர் 'நவ்ய' காலத்திலேயே எழுதத் தொடங்கியவர். இவருடைய பீடிக்கப்பட்டவர்கள், 'ஒரு தகனத்தின் கதை', 'தத்து', 'விற்றுக்கொண்டவர்கள்' ஆகிய கதைகளில் 'நவ்ய' காலத்து எழுத்து நடை மிகவும் வெளிப்படையாகக் காணப்படுகிறது. மனிதர்களின் ஆழ்மனத்தில் பொதிந்திருக்கிற துடிப்பு, அந்நிய உணர்வு, தனிமை, மற்றும் நான் மற்றவரிடமிருந்து வேறுபட்டவன்-நானே எல்லாம் தெரிந்தவன் என நிறைந்திருக்கும் உணர்வுகள் ஆகியவையும் அதிக அளவில் புலப்படுகின்றன. ஆனால் 'ஒரு தகனத்தின் கதை', 'விற்றுக்கொண்டவர்கள்', 'தாரின் வருகை' ஆகிய கதைகள் முழுக்க முழுக்கத் தூய 'நவ்ய' காலக் கதைகளாக இல்லாமல் இருப்பதற்குக் காரணம் 'எழுத்துக்கு வாழ்வனுபவம் வேண்டும்' என்கிற 'நவ்ய' காலத்தின் முக்கிய நிலைபாடே காரணமாகும். இந்த நிலைபாடு மனித அனுபவம் என்னும் நிலையிலிருந்து தலித் வாழ்வின் அனுபவமாக மாறும் வண்ணம் செய்திருக்கிறது. 'நவ்ய' காலத்திற்கு முன்பேயே எழுந்த முற்போக்கு இலக்கியம், 'நவ்ய' காலத்திறகப்புறமும் மீண்டும் தலையெடுத்தது. இதன் செல்வாக்கால் 'பீடிக்கப்பட்டவர்கள்' போன்ற கதைகள் உருவாக முடிந்தது. இத்தோடு ஒரு தகனத்தின் கதையையும் கவனித்துப் பார்த்தால், இவை இரண்டிலும் முக்கிய கதாபாத்திரத்தின் மொழியிலேயே கதை வளர்த்தெடுக்கப்பட்டிருப்பது புலப்படும்.

மேற்கண்ட சாத்தியப்பாடுகளால் புதிய தலைமுறையைச் சேர்ந்த தலித் முற்போக்கு எழுத்தாளர்களைக் காட்டிலும் வேறுபட்ட முறையில் எழுதத் தேவனூரு மகாதேவ அவர்களால் முடிந்திருக்கிறது. 'நவ்ய' இலக்கியத்தின் முக்கிய அம்சமாகிய கற்பனையும், தலித்—முற்போக்கு இலக்கியத்தின் முக்கிய அம்சங்களாகிய சமூக உணர்வு மற்றும் கரு இரண்டையும்

சரியான விகிதத்தில் கலந்த எழுத்துமுறை இருப்பதாலேயே இவர் படைப்புகள் வெற்றி பெறுகின்றன. அது மட்டுமின்றி ஆக்ரோஷம், உத்வேகம், கோபம், கோஷம் ஆகியவற்றிலிருந்து விடுபட்ட கதைகளென்று விமர்சகர்களால் சொல்லப் படுகின்றன. 'அமைதியாகப் புலம்பும்' கதைகளென்றும் சுட்டப் படுகின்றன. உள், வெளி இரண்டு நிலைகளிலிருந்தும் மனிதனை ஆய்வு செய்யும் படைப்புகளாக வெளிப்படுவதால் வாசகனின் உள், வெளி மனத்திற்கும் அவை பிடிபட்டு விடுகின்றன. கன்னட இலக்கிய உலகின் 'நவ்ய' காலத்துக் கதைகளோடு இவருடைய சில கதைகளை ஒப்பிட்டால் அவ்வளவாகச் சிறப்பானவை என்று தோன்றாவிட்டாலும்கூட, இன்னும் சில கதைகள் மொழிநடை மற்றும் கதைக்கருவின் பின்னணியில் சிறப்பான அளவில் தனித்தன்மையைக் காப்பாற்றிக் கொள்கின்றன.

மனிதனின் சார்பு வாழ்க்கையாது மனிதனைப் பாழாக் குவதோடன்றி அவன் குடும்ப வாழ்வையே பாழாக்குகிறது என்று 'விற்றுக்கொண்டவர்கள்' கதை நேரிடையாகவே சொல்லிவிடுகிறது. பொருளியல் ரீதியாக வெற்றி பெற்ற மனிதர்கள் வெளிப்பார்வைக்கு மனித உழைப்பை மட்டுமே சுரண்டுபவர்களாக இருக்கிறார்கள். ஆனால் மறைமுகமாக பெண்ணின் கற்பு, மனிதனின் மான அவமானங்கள் அனைத் தையும் அவர்களுக்குப் பிறர் அர்ப்பணித்து வாழ வேண்டிய சூழலை உருவாக்கிக் கொள்கிறார்கள். மகாதேவரின் கதைகள், பலவீனமானவர்கள் எல்லாவற்றையும் அர்ப்பணித்து விட்டு, எல்லாம் தெரிந்திருந்தும் எதுவும் தெரியாதது போல வாழும் கட்டாயங்கள் எப்படி ஏற்படுகின்றன என்பதையும் மிகவும் சாமர்த்தியமாகப் புரிய வைக்கின்றன. படேலின் வீட்டுக்கு வந்த ஆள் தன் மனைவியைப் பற்றி அவதூறு பேசும்போது பீரன் அடிக்கச் செல்கிறான். ஆனால் கிட்டப்பன்—லச்சுமியின் மறைமுக உறவைப் பற்றித் தெரிந்தும்கூட குடித்திருக்கும்போது மட்டுமே சொல்லிப் புலம்புகிறான். கிட்டப்பா எதிரில் வரும் போது வெறுமனே சிரித்துவிட்டு ஒதுங்கும் குணம் பீரனுக்கு ஏன் வந்ததென்றால் பீரனுக்குக் கிட்டப்பா கட்டிக்கொடுத்த வீடும் போர்வையும்தான் காரணங்களாகின்றன.

'விற்றுக்கொண்டவர்கள்' கதை வழக்கமான உறவை அடை யாளப்படுத்துவதாக இருக்க, 'ஒரு தகனத்தின் கதை' மறைமுக உறவை அடையாளப்படுத்தி யோசிக்கத் தூண்டுகிறது. ஒரு புதிரைப்போலத் தொடங்கும் இக்கதையில் செயல்படும் கதை நுட்பம் கவனத்தைக் கவருகிறது. பீரனின் வாழ்வு மக்களிடையே சாம்பல்பூத்த நெருப்பாகக் கனன்று கொண்டிருக்கும்போது, 'ஒரு

தகனத்தின் கதை'யில் நாயகனுடைய வாழ்வு சமூகப் பிரச்சினையின் திசையை நோக்கித் திரும்புகிறது. பாட்டியின் சவ அடக்கத்தின்போது பிரச்சினை மீண்டும் தலையெடுத்து நிற்கிறது. ஊர்க்காரர்களின் தீர்மானம் வெளித்தெரியாமல் போன சூழலில் இதன் நாயகன் தானாக எடுக்கும் முடிவு அவனுடைய இருப்பைப் புலப்படுத்துகிறது. கூடவே, அவன் எடுத்த முடிவானது மிகப் பெரிய முடிவானாலும் சற்றே அச்சம் கலந்ததாகவும் இருக்கிறது. மேலும், நாயகன் இறுதியில் ஓடிப்போவது என்பது 'நவ்ய' காலத்தின் இந்தியப் பாத்திரங்கள் எடுத்த முடிவையே ஒத்திருந்தாலும், இக்கதையின் களம் 'சாதி'யோடு வளர்ந்து தேசத்தின் இருப்பிலிருந்து வேறுபட்ட ஒன்றாக மாறிவிடுகிறது.

இக்கதையில் வரும் தலித் பாத்திரங்களாகட்டும், அல்லது ஊர்ப்பாத்திரங்களாகட்டும், அனைத்துமே உண்மையில் சம்பிரதாயமான அமைப்பை ஒத்துக்கொண்டு செல்லும் தன்மையுடையவை. அதிலேயே தம் உண்மையான வாழ்வு அடங்கி இருக்கிறது என்று நினைக்கக் கூடியவையாகும். இது இந்த ஒரு கதையில் மட்டும்தான் எனச் சொல்ல முடியாது. 'மூடல சீமையில் கொலைகிலை முதலியன' என்கிற ஒரு கதையைத் தவிர ஏனைய கதைகளில் இது ஒரு இயல்பாகவே பயின்று வந்திருக்கிறது. இதற்கு மாறான குணத்தைக்கொண்ட 'மூடல சீமையில் கொலைகிலை முதலியன' என்னும் கதையில் கதைத் தலைவனே அமைப்புக்குக் கட்டுப்பட்டிருக்கிறான்; அல்லது தன் மூடத்தனத்தால் ஒத்துப்போகிறவனாக இருக்கிறான். ஆனால் மொத்த ஊரே உண்மைச் செய்தியை அறிந்திருக்கிறது. அபூர்வமாக அமைந்து விட்ட இக்கதை 'விற்றுக்கொண்டவர்கள்' கதையில் இருப்பதைப் போல பிரச்சினை மற்றும் தீர்வு இரண்டையும் ஒரே சமயத்தில் முன் வைக்கின்றன.

படித்த தலித் ஆசிரியர், தீண்டப்படாதவர்கள் போலவே வேதனையை அனுபவிக்கும் படிப்பறிவற்ற கிறிஸ்துவ நர்ஸ் ஆகிய இருவரின் வாழ்வோடு ரங்கப்பனின் குடும்ப வாழ்வையும் ஒரே தராசில் வைத்து மூடல சீமை எடை போடுகிறது. ரங்கப்பனின் வேதனை மிகுந்த வாழ்வுக்குப் படிப்பறிவு இன்மையே காரணம் என்று கூறப்படுகிறது. இப்படி ஒரே சமயத்தில் எழும் பிரக்ஞை மிகவும் கவனத்திற்குரியதாகும். இங்கு ஆசிரியரின் கதை சொல்லும் திறமையைப் பற்றி மிகவும் பெருமை கொள்ளத் தோன்றுகிறது. 'ஒரு தகனத்தின் கதை'யில் சாதி முக்கியமான விஷயம்; இங்கு 'தீண்டாமை' முக்கியமானதாகிறது. தலைப்பில் உள்ள 'கொலை கிலை' என்னும் சொல்லின் பயன்பாடு ஒரு விலகிய நிலையில் அதைக் குறிப்பதாகவே கொள்ளலாம்.

"கோயில்கள் வேண்டாம். நவீன யுகத்தில் பள்ளிகளே கோயில்கள்" என்னும் எண்ணம் போராட்ட சமயத்தில் உருக் கொண்டது. இதைத் 'தாரின் வருகை' கதை பயன்படுத்துகிறது. மேலும், பொருளற்ற அமைப்பை நிராகரித்திருக்கிறது. கோயில் களைப் பழுது பார்ப்பதிலிருந்து நிராகரிப்பது வரை கதை வளர்கிறது. ஆனால் நிராகரிப்புக்குப் போதிய காரணங்களின்றி எதார்த்த அளவில் சொன்ன புகார்கள் மட்டுமே எஞ்சியுள்ளன. ஆனால் நவீன யுகத்தின் வருகையால் உருவான வாழ்வு மற்றும் பொருளால்தான் இக்கதை உயிருள்ளதாகிறது.

யதார்த்த அமைப்பில், கௌடர் அல்லது வசதிக்காரர் களின் வீடுகளில் தலித்துகள் பலியாகுவது நிரந்தரமான விஷயம் என்று சொல்வதற்காக ஆட்டுக்காரய்யா மற்றும் அம்மாசியின் பாத்திரங்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இறந்த காலத்தில் ஆட்டுக்காரய்யா பலிகிடாவாக ஆக்கப்பட்டான் என்றால் நிகழ் காலத்தில் பலிகிடாவாக மாற அம்மாசி தயாராக இருக்கிறான் என்று நிறுவுவதே கதையின் விளைவாகும். அதிலும் அம்மன் திருவிழாவில் ஆட்டுக்கிடாவைப் பலிகொடுக்கும் சூழலை மையமாய்க்கொண்டு ஆட்டுக்காரய்யா மற்றும் அம்மாசியின் வாழ்க்கைப் பகுதிகளைத் தொகுத்துச் சொல்வது பொருள் பொதிந்ததாக இருக்கிறது. 'விற்றுக்கொண்டவர்கள்' கதையைப் போலவே 'அம்மாசி'யும் ஒரு வலிமையான கதை. இக்கதையில் வரும் கேங்க்மேன் சித்தப்பா குடித்துவிட்டு ஆடும் காட்சி மொத்தக் கதையின் போக்கிலிருந்து தனிப்பட்டதைப்போலத் தோன்றினாலும் தலித் வாழ்விலிருந்து முற்றிலும் அந்நியமான தல்ல. குடிபோதையில் இல்லாததையும் பொல்லாததையும் புலம்புவது பொதுவான சங்கதிதான். தன்னைக் கொடுமைப் படுத்தி வேலைவாங்கும் அதிகாரிகளைக் குடிபோதையில்தான் மறைமுகமாக எதிர்க்க முடியும் என்பது இயல்பாக வெளிப் பட்டிருக்கிறது. சிரிப்புக்கு இடம் தரக்கூடிய ஒன்றைக்கூட கதைசொல்லி தன் திறமையால் மிகவும் பொருள் தரக் கூடிய ஒன்றாக மாற்றிக்கொடுத்திருக்கிறார். தன் மன உணர்வுகளையும் அப்பாத்திரத்தின் வாய்வழியே பேசவைத்திருப்பது நுட்ப அளவிலும் சமூக உணர்வின் அளவிலும் கவனத்தைக் கவர்வது.

தேவனூரு மகாதேவ அவர்களின் முக்கியமான படைப்பு 'உடலாழம்' (பசித்தவர்கள்). கன்னட மொழியின் மிகச் சிறந்த படைப்புகளின் வரிசையில் ஒன்றாகக் கருதப்படுகிற இந்தக் குறுநாவல் நாவல் இலக்கியத்தில் ஒரு புதிய பரப்பையே உருவாக்கித் தந்துள்ளது. மனிதனுக்கிருக்கும் 'பசி' நாவலின் மையம் ஆகும். இப்பசிக்காகத் தலித் குடும்பத்தில் நிகழும்

குற்றங்களை சமூகத்தின் முன் நிகழ்த்தப் பெறும எதிர்வினை என்று கொள்ளலாமா? சமூக ரீதியில் இதைக் கேள்விக்குள் ளாக்கலாமா? என்னும் பிரக்ஞையை மனத்தில் வைத்துக் கொண்டு இக்கதை வளர்கிறது. மனிதனுள்ளிருக்கும் மனிதாபி மானத்தை இது கட்டுப்படுத்துகிறது. முக்கியமானதாக, 'பசியால் செய்த திருட்டு திருட்டாகுமா?' என்னும் கேள்வி ஒரு பக்கமும், மொத்த தலித் வாழ்வின் பின்னணியில் மனிதனின் சிறுமை முக்கியமானது என்கிற விஷயம் இன்னொரு பக்கமும் முன்வைக்கப்படுகின்றன. இவ்விரண்டு விஷயங்களும் கதையில் பின்னிப்பிணைந்து இறுதிவரை நீள்கின்றன.

'நவ்ய' கால எழுத்தாளர்கள் இன்னும் மனித இருப்பைப் பற்றிய யோசனை, காமம் பற்றிய குழப்பத்திற்குள் ஆழ்ந்திருக்கும் போது, அவர்களைக் காட்டிலும் வேறுபட்ட வகையில் இவர் தம் எழுத்து முயற்சியை மேற்கொண்டார் என்பதை இதற்கு முன்பேயே பார்த்திருக்கிறோம். இப்படைப்பு 'காமம்' என்னும் கருப்பொருள் இல்லாமலேயே வாழ்வின் வேதனைகள் மிகுந்த சந்தர்ப்பத்தையே மையமாகக் கொண்டிருக்கிறது. கதை வளரும் போக்கில் தனித்தன்மை மிக்க பாதையில் நடைபோடத் தொடங்கி விடுகிறது. இதனால் கன்னடமொழியின் முக்கியப் படைப்பு என்னும் தகுதியைப் பெற்றது.

பணமும் அந்தஸ்தும் அதிகாரமும் உள்ளவர்கள் வெறும் வாய்க்கட்டளைகள் வழியாக நடத்தும் சூட்சுமமான பகல் கொள்ளை, வருத்தத்தின் சாயல் தெரிய விவரிக்கப்பட்டுள்ளது. இதற்கு முந்தைய கதைகளில் வெளிப்பட்டதைக் காட்டிலும் இப்படைப்பில் எதிர் எதிர் பாத்திரங்கள் சந்தித்துக்கொள்ளும் காட்சிகளை வைத்து பரஸ்பரம் எதிர்கொள்ளும் சூழல் மிகத் திறமையாக விவரிக்கப்பட்டிருக்கிறது. வேலை கிடைக்காத சாக்கவ்வாவின் மூத்த மகன் காளண்ணன் அச்சமூகத்தின் பெரிய மனிதனாவான். நியாயவானும் கூட. சாப்பாட்டுக்காக மிராசுதாரர் எத்தப்பன் வீட்டுக் கொல்லையிலிருந்து மணிலாக் கொட்டைகளைத் திருடி வந்து பசியைத் தணித்துக்கொள்ள முயற்சி செய்பவனும் அவனே. முதலிலேயே திருட்டைத் தடுக்க மிராசுதாரர் போலீஸை ஏற்பாடு செய்திருந்தாலும், போலீஸ் காரர்களின் கண்காணிப்பையும் மீறி, திருட்டிலும் தேர்ச்சி பெற்றுவிடுவது எல்லாருக்கும் ஆச்சரியத்தைக் கொடுக்கும். கூடவே துயரத்தையும் பொங்கச் செய்யும். காளண்ணன்தான் திருடன் என்று போலீஸ்காரர்களுக்குத் தெரிந்தாலும் சாட்சி எதுவும் கிட்டாமல் கைதுசெய்ய வழி எதுவுமின்றித் தவித்து அவமானத்துக்குள்ளாகும் சட்டம் மிக விரிவாக இருக்கிறது.

மிராசுதாரரின் 'ஒரு மூட்டை வேர்க்கடலை' களவு போன சம்பவத்துக்கு இணையாக சாக்கவ்வாவின் கோழி களவாடப் பட்ட சம்பவம் முன்வைக்கப்படுகிறது. இந்த இரண்டு சம்பவங் களையும் முன்வைத்து நாவல் எழுப்பும் கேள்வி எதுவெனில், வேர்க்கடலை மூட்டை காணாமல் போனதற்காக சோதனை செய்ய வந்ததைப்போல, போலீஸ்காரர்கள் சாக்கவ்வாவின் கோழியைக் கண்டு பிடிக்க ஏன் சோதனை செய்ய முன்வர வில்லை என்பதுதான். மேலும், போலீஸ்காரர்கள் அவளுடைய இன்னொரு கோழியையும் அபகரித்துக்கொண்டு செல்வது சட்டத்தைக் காப்பாற்றுபவர்கள் பாரபட்சம் காட்டுவதை வெளிப்படுத்துகிறது. இந்தச் சட்ட அமைப்பு ஜமீன்தார்களோடு இணைந்து செயல்படுவதையும் இந்நாவல் வெளிப்படுத்துகிறது.

கவனத்துக்குரிய இன்னொரு விஷயம் என்னவெனில், சாக்கவ்வா போலீஸ்காரர்களைக் காட்டிலும் தீவிரமாக தானே சென்று கோழியின் இறக்கை முதல், குழம்பு ருசி வரை சோதித்துப் பார்க்கிறாள். அரசுத்தரப்பில் தர்க்கபூர்வமாக மேற் கொள்ளப்படும் சோதனைகளை, வாழ்வனுபவத்தோடு சாக்கவ்வா செய்யும் சோதனை கேலி செய்வதுபோல உள்ளது. இப்படியாக எதிர் எதிர் சம்பவங்களை முன்வைப்பதன் மூலம் கிட்டும் அர்த்தமும் பதிலும் ஆச்சரியம் தருகின்றன.

தலித்துகள் பற்றிய விவரங்கள், அவர்களின் வாழும் சூழல், துன்பங்களிடையே வாழும் அவலம், அவர்களிடையே இருக்கும் கூட்டு வாழ்வு முறை, களங்கமற்ற மனம் அனைத்துமே தலித் பண்பாட்டை எடுத்தியம்ப உதவும் கண்ணாடிகளாக இருக் கின்றன. தலித்துகளின் உள்மன விழைவுகளையும் குறியீட்டு நிலையில் சுட்டுகின்றன. சாக்கவ்வா பேரன் சிவுவின் பொருட்டு வாதாடும் காட்சி; 'என் பேரன் ராஜ்ஜியத்த ஆளணும்' என்னும் அவளுடைய கனவு நிகழ்கால அனைத்துத் தலித்துகளின் கனவாக இருக்கிறது. சுவர்களின் மீது கால்களை எழுதுவதன் மூலம் மயில்களின் படங்களை வரையத் தொடங்கும் சின்ன கௌரி, தோகை விரித்தாடுவதைப் போல வாழ்வும் அழகாக அமையவேண்டும் என எண்ணுகிற அவள் மனம்— இத்தகைய குறியீட்டு அம்சங்கள் நாவலின் மதிப்பை உயர்த்துகின்றன.

தலித் மற்றும் முற்போக்குப் பார்வைகளின் பின்னணியில் மட்டுமன்றி மொத்த கன்னட இலக்கியச் சூழலிலேயே பசித்தவர்கள், விற்றுக்கொண்டவர்கள், ஒரு தகனத்தின் கதை ஆகியவை விவாதிக்க வேண்டிய முக்கியமான கதைகளாகும். இவருடைய கதைகளின் முக்கிய குணம் என்னவெனில் கதையின் கருப்பொருளைவிட தலித் வாழ்வின் பருண்மையான

அனுபவ விவரங்களுக்கு முக்கியத்துவத்தை அளிப்பதாகும். இதுவரைக்குமான கன்னட இலக்கியத்தில் தலித் வாழ்வு என்பது குடிப்பது, ஆடுவது, அசிங்கங்கள் எனப் புரிந்து கொண்டிருந்த பிரமையை இக்கதைகள் கிழித்தெறிகின்றன. பிராமணப் பண்பாட்டுக்கெதிராக குவெம்பு போன்றவர்கள் சூத்திரப் பண்பாட்டை உயர்த்த நிறுத்த முயற்சி செய்ததைப் போல, இக்கதைகள் தலித்துகளின் பண்பாட்டை எழுத்தில் நிறுவுவதற்காக எழுந்தவையாக உள்ளன. இதனாலேயே இவருடைய எழுத்தில், முழக்கமிடும் வாக்கியங்களோ அல்லது சொற்பொழிவுகளோ காணப்படுவதில்லை. மாறாக, வாழ்வின் அனுபவங்களை முன்வைத்துவிட்டு, விளக்கவுரைகள் அனைத்தும் பின்தங்கிவிடுகின்றன. இதனால் கூடிவரும் சூழல் கதையின் உயிர்த் தன்மைக்கு மேலும் வலிவூட்டுகிறது.

மகாதேவ கதைகளில் பயன்படுத்தியிருக்கும் மொழியைப் பற்றிச் சொல்லாமல் இருக்க இயலாது. இங்கு பயன்படுத்தப் படும் மொழி கன்னடமே எனினும், இலக்கணப் புத்தகங்களில் காணும் கன்னடமோ, பேச்சுக் கன்னடமோ அல்ல. பிரக்ஞை பூர்வமாக பேச்சுமொழியிலேயே கொஞ்சம் கொஞ்சமாக கதையை வளர்த்துச் சென்று காவிய நயமிக்க மொழியைக் கைவசப்படுத்தி விடுகிறார். சொல்வதை நேரிடையாய்ச் சொல்லாமல் தொனிப்பொருளாக உணர்த்தும் வகையில் எழுதுகிறார். இதனால்தான் இவருடைய மொழி அழகு நம்மைப் பெரிதும் கவர்கிறது. பாத்திரங்களின் உரையாடல் மற்றும் கதையை நகர்த்தும் மொழி இரண்டும் ஒன்றாகவே இருக் கின்றன. நாட்டுப்புறக் கதைகளின் சொல்முறையால் இவர் பாதிக்கப்பட்டிருப்பது நன்றாகத் தெரிகிறது. அங்கங்கே முதல் வாசிப்பில் பொருள் புரியாத வார்த்தைகள் மீண்டும் வாசிக்கும் படிச் செய்கின்றன. அப்படியும் பொருள் புரியாமல் போன வார்த்தைகள் விமர்சகர்களையும் தடுமாற வைத்திருக்கின்றன. ஒரு கதையில் காணப்படும் உவமைகள் வேறொரு சூழலில் காண நேரும்போது சற்று நேரம் படைப்பில் இருந்து விலகி யோசனையில் மூழ்க வைக்கின்றன. இந்த மொழி கன்னட இலக்கியத்தின்மீது மிகப்பெரும் செல்வாக்கை உண்டாக்கி யுள்ளது. கன்னட மொழியின் மூத்த படைப்பாளிகள் கூட இதனால் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். உரைநடையில் கலை நயத்தோடு மொழியைக் கையாளும் முறையில் தேவனூரு மகாதேவரின் எழுத்துக்கள் கவனிக்கத்தக்க சாதனைகள்.

டாக்டர். அரவிந்த மாலகத்தி

# விற்றுக்கொண்டவர்கள்

சாயங்கால வேளையில் சிவந்த வானத்தைப் பார்த்தபடி உட்கார்ந்திருந்த பீரனின் மனசை கிட்டப்பனைப்பற்றிய நினைவுகள் குழப்பின. கிட்டப்பன் கல்யாணத்திற்கு ஒத்துக் கொண்டு சாகக்கிடந்த அப்பாவுக்கு நிம்மதியைக் கொடுக்க வில்லை. அவனுக்கு அவனுடைய பிடிவாதமே முக்கியமாக இருந்தது. காலேஜில் படிக்கிற காலத்தில் பழக்கமான ஒரு பெண்ணின் பின்னால் சுற்றி, பெயிலாகி, கிராமத்திற்குத் திரும்பி வந்தபிறகும்கூட அவள்மீதிருந்த பைத்தியம் விடவில்லை. வாரத் துக்கு ஒரு தரமோ, பதினைந்து நாள்களுக்கு ஒரு தரமோ மைசூருக்குச் செல்கிற வேலை மட்டும் நிற்கவில்லை. கௌடர் சொல்வதெல்லாம் சொல்லிப்பார்த்தார். திட்டிப்பார்த்தார். அவன் கேட்கவில்லை. வயசுக்கு வந்த பிள்ளை. சமீபகாலமாக கிட்டப்பன் என்ன செய்தாலும் கௌடர் கேட்பதே இல்லை. "நான் சாகற வரைக்குமாச்சும் சும்மா இருடா பொறுக்கின்னா கூட கேக்க மாட்டேங்கறான். வேற நான் என்ன செய்ய முடியும்? வீட்ட வித்தாலும் கவல இல்ல. எப்படியாவது போகட்டும். ஏர்க்கலப்பைய கையில குடுத்திருக்கணும். அதவிட்டுட்டு படிக்க அனுப்புனம் பாரு. அது என் தப்பு. என் தப்புக்கு அவனக்கொற சொல்றதுன்னா..." சொல்ல வந்ததை முழுசாகச் சொல்லி முடிக்காமல் முகத்தில் கசப்புப்படர வேதனையுடன் சிரித்துக் கொள்வார். உட்கார்ந்து சாப்பிட்டால்கூடக் கரையாத சொத்துக் குரிய கிட்டப்பன் எப்படி இருக்க வேண்டும்? அதைவிட்டு இந்தக் குடிசைக்கு வந்து எத்தனை நாட்கள் குடித்துவிட்டு விழுந்து கிடந்திருக்கிறான்? தொடர்ந்து இரண்டு வாரங்களாக இப்படியே செய்து வருகிறான். எவ்வளவுதான் எடுத்துச் சொன் னாலும் எடுத்துக்கொள்ளவில்லை. ஓர் எல்லைக்குமேல் வற்புறுத்தி பேசவும் முடியவில்லை. சோறு போடுகிற முதலாளி...

வருகிற வருஷப்பிறப்போடு இங்கே வந்து ஒரு வருஷம் முடியப்போகிறது. என்ன செய்வது எங்கே போவது என்று எதுவும் புரியாமல் மூட்டை கட்டிக்கொண்டு லட்சுமியோடு புறப்பட்டபோது கையில் ஒரு பைசாக்கூட இல்லை. ராத்திரி

ரயிலில் எறி கடைசிப் பெட்டியில் உட்கார்ந்து மைசூர் சேர்ந்த போது நடுராத்திரியாகிவிட்டிருந்தது. ஸ்டேஷனிலேயே படுத்திருந்துவிட்டு காலையில் குழாயில் முகம் கழுவிக்கொண்டு என்ன செய்வது என்று புரியாமல் தலைமேல் கைவைத்தபடி உட்கார்ந்தபோது லட்சுமிதான் “நஞ்சன்கூடு பக்கம் போகலாம்” என்றாள். சரியென்று கிளம்பிக்கொண்டிருந்த ரயிலில் ஏறி உட்கார்ந்து, டிக்கெட் கேட்டு வந்து பரிசோதகரிடம் அகப்பட்டுக் கொண்டனர். அப்போது அங்கிருந்த கௌடர் டிக்கட் பரிசோதகரை அனுப்பிவைத்த பின்னர் அவர்களின் ஊர் பேர் விவரங்களைக் கேட்டுத் தெரிந்துகொண்டார். வேலைதேடி ஊரைவிட்டு வந்திருக்கிற விஷயத்தைத் தெரிந்துகொண்டார். சிறிதுநேரம் யோசித்துவிட்டு, “என் தோட்டத்துல நம்பிக்கையா வேலை செய்ய ரெண்டுபேரு வேணும். அங்கயே வீடு எல்லாம் இருக்குது. தங்கிக்கலாம்...” என்று சொன்னார். அவர்களுக்கு கௌடர் கடவுளைப் போலக் காணப்பட்டார்.

ஊர் இருந்த திசையில் பீரன் திரும்பிப் பார்த்தான். பொழுது இருட்டிக்கொண்டு வந்தது. இந்த நேரத்துக்கெல்லாம் கிட்டப்பன் வந்திருக்க வேண்டுமே என்று நினைத்தவண்ணம் பீடியைப் பற்றவைத்துக்கொண்டான். தொலைவிலிருந்து பேட்டரி விளக்கு வெளிச்சம் மெல்ல மெல்ல நெருங்கி வருவது தெரிந்தது. இருட்டைக் கிழித்துக்கொண்டு நெருங்கிக் கொண்டிருந்த வெளிச்சத்தைப் பார்த்தபடியே இருந்தபோது மில்லில் வேலை செய்யும் பையன் பாஷா வந்துநின்றான்.

வந்ததுமே, ‘‘மோட்டாரு காய்லு கெட்டுப்போச்சு, கிட்டப்பன் ஐயா எடுத்துக்கிட்டு மைசூர்க்குப் போய்ருக்காரு. வர முடியாதுன்னு சொல்லச்சொன்னாரு” என்றான்.

“அப்படியா?” என்று பீரன் கேட்டான்.

பாஷா தலையை அசைத்தான் “ஆமாண்ணே.. நா வரட்டுமா” என்று புறப்பட்டான்.

“வாடா சாய்பு... சாப்பிட்டுட்டு போலாம்” என்று பீரன் இடைமறித்தான்.

“இல்லண்ணே. நெறய ஜனங்க மில்லில காத்திட்டிருக்காங்க. சின்ன மில்தான் ஓடிட்டிருக்குது. போய்சொல்லிட்டு வான்னு அனுப்பினாரு. அதான் சொல்லிட்டு போகலாம்னு வந்தேன்” சொல்லிக் கொண்டே சரசரவென்று நடக்கத் தொடங்கினான்.

பற்ற வைத்திருந்த பீடி கையில் சுட்டதும், இருமிக் கொண்டே அதை வீசிய பீரன் மற்றொரு பீடியை எடுத்துப் பற்ற வைத்தபடியே குடிசைக்குள் நுழைந்தான்.

லட்சுமி நினைத்துக்கொண்டாள். ‘வரவர குளிர ஜாஸ்தியா

இருக்குது. உள்ளயே இவ்வளவு குளிர்னா, வெளிய எவ்வளவு குளிரும்..? அப்பன் வீட்டு ஆஸ்தி போயிடப்போவுதுன்னு எப்பப் பார்த்தாலும் பீரன் அந்தக் கல்லு மேலேயே உக்காந்துட்டிருக்கான். வெளியே போய் சும்மா வேணுமின்னே இருமிக் காட்டுனப்போகூட ஆளு திரும்பிகூடப் பாக்கலை.' கொதித்துக் கொண்டிருந்த குழம்பில் உப்பை அள்ளிப்போட்டாள். கம்மென்ற வாசனை குடிசை முழுக்க நிரம்பியது. வாசல்பக்கம் ஏதோ சத்தம் கேட்டுத் திரும்பினாள். பீரன்தான் வந்தான். கிட்டப்பனைக் காணோம்.

"இன்னைக்கி கிட்டப்பன் வரமாட்டானாம். மைசூர்க்குப் போயிருக்கானாம். பாஷா சொல்லிட்டுப் போனான்.." சொல்லிக் கொண்டே சாராய பாட்டில் இருந்த இடத்தை நோக்கி நடந்தான். இன்று கிட்டப்பன் வராவிட்டால் இருக்கிற சாராயத்தையெல்லாம் குடித்துவிட்டு இவன் என்னவெல்லாம் செய்வானோ என்று நினைத்துக்கொண்டாள் லட்சுமி. பிறகு அவன் என்ன சொன்னாலும் அது உடனே தனக்கு மனப்பாடமாகப் பதிந்து விடுவதை நினைத்து அவளுக்கு ஆச்சரியமாக இருந்தது; சிரிப்பாகவும் இருந்தது.

இன்னொரு பக்கத்தில் சாராய பாட்டில்களின் அருகில் சென்ற பீரன், பாட்டில்களின் மூடிகளைக் கழற்றிப் பக்கத்தில் வைத்துக்கொண்டான்.

தட்டில் களியை எடுத்துக்கொண்டு வந்த லட்சுமிக்குச் சிரிப்பு வந்தது. "சீ... தரித்திரம் புடிச்ச உன் ஆசையில் மண் விழ... கொஞ்சமா குடி" என்று சொன்னாள்.

கடகட வென்று சிரித்த பீரன், "இன்னிக்கு வயிறு முட்ட குடிச்சு தின்னுட்டு உன்ன ரெண்டுல ஒண்ணு பாத்துடணுமின்னுதான்..." என்றான்.

குளிர் தாங்க முடியாமல் உள்ளே திரும்பிய லட்சுமி அடுப்பைக் கிளறி நெருப்புத் துண்டுகளின் முன்னே கையை நீட்டிச் சூடேற்றத் தொடங்கினாள். பீரன் ஒரேமூச்சில் கடகட வென்று குடிக்கும் சத்தம் கேட்டது. "இன்னம் கொஞ்சம் எடுத்துவா" என்றபோது லட்சுமிக்கு ஆச்சரியம். 'அட... இன்னும் எவ்வளவுதான் தின்னுவான் இவன்.. பேய் புடிச்சவன் மாதிரி முழுங்கறானே...' என்று சின்னப்பாத்திரமொன்றில் மாமிசத் துண்டுகளை நிரப்பி எடுத்துக்கொண்டு வந்தாள். பீரனைச் சுற்றிலும் எலும்புத் துண்டுகள் வகைவகையாக விழுந்து கிடந்தன. ஒன்றரை பாட்டில் சாராயம் காலியாகி இருந்தது.

"என்னய்யா நீ... இன்னைக்கு இப்படி தின்னறே" என்று திட்டவேண்டும் போலத் தோன்றினாலும் குடித்திருக்கிறானே

என்று அமைதியடைந்து பாத்திரத்தில் இருந்ததை தட்டில் கொட்டினாள். பீரனைச் சுற்றிலும் ஒரே துர்நாற்றமாக இருந்தது. லட்சுமிக்குத் தலைசுற்றி வாந்தி வருவதுபோல இருந்தது. சட்டென முந்தானையைச் சுருட்டி வாய்க்குள் வைத்துக் கொண்டு சமையல் கட்டுக்கு ஓடிவந்துவிட்டாள்.

வரவர பீரன் மிகவும் மாறிவிட்டான். குடிப்பதும் அதற்கப் புறம் மூச்சுவிடச் சிரமப்பட்டாலும் பீடி புகைத்துக் கொண்டிருப் பதுமாக ஆள் மாறிப்போனான். முதலில் இருந்த முகக்களையே இல்லை. எவ்வளவுதான் எடுத்துச்சொன்னாலும் எடுத்துக்கொள் வதில்லை. மல்லிப்புரத்தைச் சேர்ந்த மிராசுதாரர் குடித்துக் குடித்து இதயம் வெடித்து இறந்துபோன சங்கதியைச் சொல்லிச் சிறிது நேரம் கழிந்தபின் "யார்தான் நிரந்தரமா இருக்கப் போறாங்க, சொல்லு..." என்று சொல்லிவிட்டு ஒரு மாதிரியாகச் சிரிப்பான். "குடிக்கற நிறுத்தறதால எது முழுவிடப்போவுது..?" என்று சொன்னபோது மீண்டும் ஒரு மாதிரியாகச் சிரித்து "நான்.." என்று சொல்ல வந்ததை விழுங்கினான்.

குனிந்து பார்த்தபோது பீரன் கால்நீட்டி விழுந்து கிடந்தது தெரிந்தது. சாராயத்தில் கொஞ்சம்கூட மிச்சம் வைக்கவில்லை. தட்டில் மட்டும் இரண்டு கறித்துண்டுகள் இருந்தன. "தூ... இவனுக்கு இதுவே வேல" என்று முனகியபடி வெளியே வந்து சுற்றிலும் சிதறியிருந்த எலும்புகளை வாரியெடுத்துத் தட்டில் போட்டாள். கண்கள் பாதி மூடிய நிலையில் கிடந்த பீரன் முழுக்கவும் கண்களைத் திறந்தபோது அவை நெருப்புத்துண்டு களைப்போல இருந்தன.

ஒன்றிரண்டு முறை 'ஆ..ஊ..' என்றபிறகு "யார்டா அவன் என்ன எதிர்க்க வர வீரன்?" என்றான்.

லட்சுமி காரமான குரலில் "சும்மா படுத்துக்கெட" என்று அதட்டினாள்.

"ஏ... என் லட்சுமி... வாடி என் தங்கமே வா... நா யாருன்னு ஒனக்குக் காட்டறேன்" என்றான். மேலும் ஏதோ பேச முயற்சி செய்து, பேசமுடியாமல் கண்களை மூடிக்கொண்டான். 'லட்சுமி.. லட்சுமி..' என்று அவன் வாய் முணுமுணுத்துக் கொண்டிருந்தது. வீட்டின் ஒரு மூலையில் பாயை விரித்த லட்சுமி சுவர் பக்கமாய்த் திரும்பிப் படுத்துக்கொண்டாள். போர்வையை இழுத்து முகத்தையும் மூடிக்கொண்டு விளக்கணைத்தாள்.

"எங்க சூரியனைப் புடுங்கிப்போனவன் யாருடா" என்று போதையில் பொறுமினான் பீரன். லட்சுமியால் அதைத் தாங்கிக் கொள்ள இயலவில்லை. சிரிப்பு வந்தது. "சிரிக்கறயா, சிரி... சிரி... நீ ராத்திரி சித்திரியா இருக்கணும்" அதைக்கேட்டும் லட்சுமி

சிரித்தாள். "நீ எங்க போனாலும் விடமாட்டன்.. பார்த்துக்கோ... மரியாதையா ஒரு வார்த்தைக்கே உட்டுடு. இல்லன்னா..."

உரக்கச் சத்தம் போட்டதால் அதைக்கேட்டு லட்சுமிக்குக் கோபம் வந்தது. "சும்மா படுத்துங்கெடய்யா.. ஏன் இன்னும் உயிர எடுக்கற" என்றாள்.

சிறிது நேரம் பீரன் அமைதியாக இருந்தான். குரலை அடையாளம் கண்டவனைப் போலச் சிரித்து, "யேய்... இப்ப தெரிஞ்சிட்டுது. என் லட்சுமி... என் தங்கக்குட்டி லட்சுமி..." என்றான். லட்சுமி வாயைத் திறக்கவில்லை. "இன்னும் வெக்கமா ஒனக்கு! இத்தனநாள் ஆனப்பறமும்... வான்னா வந்துரணும்" லட்சுமி இப்போதும் எதுவும் பேசவில்லை. சின்னப்பிள்ளையைப்போலச் சிரித்தாள்.

பீரனுக்குக்கோபம் தலைக்கு ஏறியது. "நான் கூப்புட்டாக் கூட நீ வரமாட்டியா?"

அதைக் கேட்டதும் கோபமான குரலில் லட்சுமி, "சும்மா படுத்துக்கெடய்யா" என்றாள்.

"எவ்ளோ திமிருடி ஒனக்கு. இப்படியெல்லாம் கூப்புட்டா நீ வந்துருவியா" என்று கத்தினான். லட்சுமி எதையோ சொல்லி முனகினாள்.

"நீ பேசமாட்டயா? என் கூடவெல்லாம் பேசுவியா நீ? கிட்டப்பன் கூடத்தான் பேசுவே. என்னதான் இருந்தாலும் அவன் ஒன் கள்ளப்புருஷன்தானே..." என்றான்.

லட்சுமிக்கு வானமே இடிந்து தலைமேல் விழுந்ததைப்போல இருந்தது. உடம்பும் கைகால்களும் நடுங்கின. மெல்லத் துணிச்சலைத் திரட்டிக்கொண்டு, "நீ யாருயா அதக் கேக்கறதுக்கு?" என்று சொல்லிவிட்டுப் பதிலுக்காகக் காதுகளை நிமிர்த்திக் கொண்டு காத்திருந்தாள்.

"அதக்கேக்க நா யாருன்னா கேக்கற? குரங்கு கண்ண மூடிக்கிட்டுப் பால் குடிச்சா யாருக்கும் தெரியாதுன்னு நெனச்சிக்குமாம். ஹி...ஹி...ஹி.. எல்லாத்துக்கும் ஒரு முடிவு கட்டறேண்டி தங்கம்.. வெடியட்டும். நீயும் இல்ல. அவனும் இல்லன்னு செஞ்சி காட்டறன். என்னய கையாலாகாத ஆளுன்னு நெனச்சிட்டிங்க, இல்ல! என்ன ஆய்டுச்சு இப்ப உடு... வெடியாமயா போய்டும்? இல்ல நாளைக்கு அவன்தான் வராம போய்டுவானா? வப்பாட்டி மூஞ்சிய பாக்கறதுக்கு வந்துதான ஆவணும்..." ஹே ஹே என்று இடைவிடாமல் சிரித்து, இடைவிடாமல் இருமி, அங்கேயே துப்பி, எச்சிலைக்கூட்டி விழுங்கினான். "அங்கேயே ஓரமா கோடாலி தயாரா இருக்குது பாரு" எனச் சத்தமாகச் சொன்னான். தரையில் கையை ஊன்றிக்

கொண்டு உட்கார்ந்தான். சிரித்தான். இருமினான். "உஸ்.. அப்பா" என்றான். காறித் துப்பினான். சிறிது நேரம் சத்தமே இல்லை.

லட்சுமி உட்கார்ந்தே இருந்தாள். தொடைகள் நடுங்கின. தலை சுற்றியது. இதயம் டப்டப்பென்று அடித்துக்கொண்டது. சிறிது நேரத்திற்குப்பிறகு குறட்டைச் சத்தம் கேட்டது.

லட்சுமி அதிர்ச்சியால் உறைந்திருந்தாள். குடித்துவிட்டு உளறுகிறான் என்று பொருட்படுத்தாமல் இருக்க முடியாது. சிறிதும் விஷயம் தெரிய வராமல் இவ்வளவு தூரம் எப்படிப் பேசமுடியும்? குடித்துவிட்டுப் பேசினாலும்...? பீரனுக்கு எல்லாம் தெரிந்திருக்கிறது. 'என்ன செய்றது கடவுளே, அவன் ஆட்டத்த இன்னைக்கு ஒண்ணும் புதுசாப் பாக்கல. எட்டு வருசமாயில்ல பாத்துக்கிட்டு இருக்கேன்.'

ஆஸ்டலில் சாப்பாட்டு மணி அடித்து ரொம்ப நேரம் ஆகிறது. இது அநேகமாக நள்ளிரவாக இருக்க வேண்டும். குடிசை முழுக்கக் குறட்டைச் சத்தம் கேட்டது. சாராய நாற்றம் குப் பென்று வீசியது. பீரன் புரண்டு படுத்தான். சிறிது நேரம் தொடர்ந்து இருமினான். அப்புறம் மீண்டும் குறட்டைச்சத்தம். லட்சுமிக்குத் தூங்கவேண்டும்போல இருந்தது. கொட்டாவி விட்டாள். முட்டிக்கால்களுக்கு நடுவே தலையைக் கவிழ்ந்து கண்களை மூடினாள்.

...தோட்டத்தில் அடியெடுத்து வைத்த மறுநாளே கிட்டப்பன் வந்தான். பீரன், "நம்ம மொதலாளி மகன்" என்று சொன்னான். கிட்டப்பன் என்னையே ஒருமாதிரி பார்த்தான். பீரன் இருமினான். நான் கழுத்தத் திருப்பி கிணற்றங்கரைப் பக்கம் பார்த்தேன். அதற்குள் உடம்பு வியர்த்து விட்டது. தொடர்ந்து நிற்கவும் முடியாமல் 'பெருக்கணும்' என்று சொல்லிவிட்டு உள்ளே நடந்தேன். கிட்டப்பன் வெளியே இருந்தாலும் இன்னும் என்னையே பார்த்துக் கொண்டிருக்கிறானோ என்று தோன்றியது. போகிற வரைக்கும், போனபிறகும்....

ஒருநாள் சிரித்துக்கொண்டே சாராய பாட்டில்களைப் பீரனே எடுத்துவந்தான். அன்று கறிக்குழம்பும் தேவைக்கு அதிகமாகவே இருந்தது. "இன்னைக்குக் கிட்டப்பன் வருவாரு" என்றான். அதற்கு நான் எதுவும் பதில் சொல்லவில்லை. எல்லா ஏற்பாடுகளையும் செய்துகொடுத்தேன். இருட்டிக்கொஞ்ச நேரத்துக்கப்புறம் கிட்டப்பன் வந்தான். ரொம்பவும் விறைப்பாக இருந்தான். "ஏதாவது பொண்ணு பாக்க வந்தீங்களா கிட்டப்பா?" என்று சிரித்துக்கொண்டே பீரன் கேட்டபோது கிட்டப்பனும்

சிரித்தான். பிறக்கும்போதே சிரித்துக்கொண்டு பிறந்தானோ என்னமோ...

இருவரும் சேர்ந்து தின்றார்கள். குடித்தார்கள். பீரன்தான் அதிக அளவில் ஊற்றிக் கொண்டான். அப்புறம் கால்நீட்டி விழுந்தார்கள். ரொம்ப நேரமான பிறகும்கூட கிட்டப்பன் எழுந்து போகவே இல்லை. நான் எனது அறைக்குள் சென்றேன். கிட்டப்பன் இருமிக்கொண்டே நாங்கள் வருவதற்கு முன்பிருந்தே அங்கு இருந்த கயிற்றுக் கட்டிலொன்றில் உட்கார்ந்தான். சிறிது நேரம் உட்கார்ந்திருந்துவிட்டு அதற்கப்புறம் அங்கேயே படுத்துக்கொண்டான். உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு அறைக்குள் கம்பளியைப் போர்த்திக்கொண்டு விளக்கை நிறுத்தினேன். இருட்டிவிட்டது. கண்களை மூடினாலும் தூக்கம் வருகிற வழியாய் இல்லை. என்னென்னமோ ஊரைப்பற்றிய நினைவுகள்...

கொஞ்சம் தூக்க மயக்கம். திண்ணையில் பீரனின் குறட்டைச் சத்தம் பலமாய்க் கேட்டது. கிட்டப்பனின் இருமல் சத்தமும் கேட்டது. புரண்டுபடுத்தபோது சரசரவென்ற சத்தம் கேட்டது. பீடியைப் பற்றவைக்க தீக்குச்சியை உரசும் சத்தம். மீண்டும் பீரனின் குறட்டைச் சத்தம். எதையும் பார்க்க முடியாத படி எல்லா இடங்களையும் இருட்டு ஆக்கிரமித்துக் கொண் டிருந்தது! கண்களை இறுக்கமாய் மூடிக்கொண்டாலும் தூக்கம் வருகிற வழியைக் காணோம். இருமுவதும் கஷ்டம். எச்சிலைக் கூட்டி விழுங்கவும் இயலவில்லை. விழுங்கினால் எங்கே ஏதேனும் சத்தம் உண்டாகிவிடுமோ என்று அச்சமாக இருந்தது. சுற்றிலும் எந்தவிதமான சத்தமும் இல்லை. அதுவே பெரிய சத்தம்போலக் கேட்டது. பீரன் குறட்டை விட்டுக் கொண்டிருந்தான். கிட்டப்பன் இன்னும் கண்மூடவில்லை என்று தோன்றியது. பீடி பற்றவைப்பதும் இருமுவதுமாகவே இருந்தான். களையெடுப் பதற்கு வந்த புட்டி கிட்டப்பனின் சரித்திரத்தையே புட்டுப்புட்டு வைத்துவிட்டுப் போயிருந்தாள். எனக்கும் தூக்கமே இல்லை. தெரிந்துவிட்டால்...? தூ.

“லட்சுமி-” மெதுவான குரலில் அழைத்து உடலைத்தொட்டு அசைத்தபோது சட்டென விழிப்பு வந்து உடம்பு வேர்த்துக் கொட்டியது. யோசனைகளுக்கும் அச்சத்துக்கும் நடுவே எப்போது தூக்கம் வந்ததோ தெரியவில்லை. குடிசையே பறந்து போகிற அளவுக்கு இதயத் துடிப்பு அதிகரிக்கத் தொடங்கியது. மெல்ல மெல்ல உடலைத் தடவிக் கொடுத்தான். மூச்சு முட்டியது. ஒரு கையைத் தொடையின்மீது வைத்து இன்னொரு கையால் கழுத்தை நிமிர்த்தி அசைத்தான். இன்னும் கண்மூடிக்

கொண்டு படுத்திருப்பது சரியில்லை என்று வியர்த்துக்கொட்ட "யாரு?" என்று கேட்டபோது "நானு... கிட்டப்பா" என்றான். பீரனின் குறட்டைச்சத்தம் கேட்டபோது உடல் நடுங்கியது. கிட்டப்பனின் கை தொடையைத் தடவியது. என்ன செய்வது என்று ஒன்றும் புரியாமல் "பீரன் தூங்கறான்" என்று சொன்ன போது கிட்டப்பன் சொன்னான். "ஆமாமாம்... குடிச்சுட்டு விழுந்து கெடக்கறான்."

அதிகாலையில் விழித்தெழுந்தபோது உடல் லேசாக இருப்பதைப் போலத் தோன்றியது. இருந்தாலும் பீரனுக்கு இன்னும் கொஞ்சம் ராத்திரி மயக்கம் இருந்தது. இரண்டு கைகளையும் பரபரவென்று தேய்த்துக்கொண்டு முகத்துக்கெதிரில் உள்ளங்கைகளைத் தந்து பார்த்தபடி மெதுவாக "லச்சுமி..." என்று கூப்பிட்டபோது எந்தப் பதிலும் வரவில்லை. இவ்வளவு நேரமாகி விட்டது.. ஒரு பெண்ணுக்கு அவ்வளவு தூக்கமா என நினைத்தபடி வலது பக்கம் உருண்டு கம்பளியை உதறிவிட்டு அறையின் பக்கம் பார்த்தபோது முகத்தைப் போர்வையால் இழுத்துப்போர்த்திய படி அவள் உறங்குவது தெரிந்தது. அவள் போர்த்திக்கொண் டிருந்த பட்டைக் கோடுகள் போட்ட போர்வையில் அவன் பார்வை பதிந்தது. போன திங்கட்கிழமையன்று இந்தப் போர்வை யைக் கிட்டப்பன் கொண்டு வந்து கொடுத்துவிட்டு "இந்தா எடுத்துக்கடா பீரா... குளிர்காலம் வருது" என்று சொல்லிக் கொடுத்தான். அன்று இரவு படுக்கப்போகும்போது மனசுக் குள்ளேயே சிரித்தபடி, அந்தப் போர்வையைத் தன்பக்கம் இழுத்துக் கொண்டாள். "இது எனக்குத்தான் வேணும்" என்று சொன்னபடி எடுத்துக்கொண்டாள். அவளையே தாவிக் கட்டிப் பிடித்துக்கொண்டு "போவட்டும் விடு. அதை நீயே எடுத்துக்க... எனக்கு நீதான் வேணும். போர்வையைவிட நீதான் ரொம்ப கதகதப்பா இருக்கே" என்று சொன்னபோது அவள் சிரித்தாள். இப்போது அவளுக்குக் கதகதப்பாக இருக்க வேண்டும்.

கிட்டப்பன் கொடுத்த போர்வை லட்சுமியைப் போர்த்திக் கொண்டிருந்தது. என்மேல் கிடந்தால் பரவாயில்லை.. லட்சுமி யின் மீது என்றால்.. "படேல் ஊட்டுக்கு பேண்ட் மாட்டிக்கினு வந்தவன் லட்சுமிய கணக்குப் பண்ணானாம்" என்று பேசும் பேச்சு காதில் விழுந்ததுமே, திண்ணைமேலே கால்மேல் கால் போட்டுக்கொண்டு உட்கார்ந்திருந்தவனின் கழுத்துப்பட்டியைப் பிடித்து இழுத்து, "உன் மிராசுத்தனத்தை உன் வீட்டோட வச்சுக்கோ... எனக்கு காட்டறவேல வச்சுக்காத" என்று கொதித்

தெழுந்தான். அதற்குள் படேல் நடுவில் புகுந்து கையெடுத்துக் கும்பிட்டு "வேற ஊரு ஆளு... யாருன்னு தெரியாம..." என்று சொல்லி அமைதிப்படுத்தினார். குடிசைக்குத் திரும்பியதும் லட்சுமி மார்போடு கட்டிக்கொண்டாள்.

இடது கையால் வயிற்றைத் தடவியபடி, உள்சுருங்குமாறு மூச்சுக்கட்டினான். நெஞ்சுக்குள் கொஞ்சம் வலி பரவியது. "குடிக்காதன்னு எத்தனதரம் சொன்னாலும் கேக்கல. மல்லிப் புரத்து மிராசுதாரு குடிச்சுக் குடிச்சே இதயம் வெடிச்சு செத்துப் போய்ட்டாராம். குடிச்சா குடல் முழுக்க தின்னு அரிச்சிடுமாம்." அந்த மிராசுதார்க்கு நேர்ந்த கதி எனக்கும் ஆகி விட்டால் லட்சுமியின் கதி என்ன ஆகும்? ஏன்... எப்படி எப்படியோ ஆகத் தொடங்கிவிட்டது. பீடி புகைக்க வேண்டும் என்று தோன்றியது. தலையணைக்குக் கீழே தேடியபோது பீடி இல்லை. வெளியே பனி கொட்டியது. நல்ல குளிர் வேறு. பீடியும் இல்லை. வெயில் வருகிற வரைக்கும் இப்படியே இருக்க வேண்டும்.

"வெடியப் போகுது. இன்னும் சின்னப்புள்ள மாதிரி தூங்குது பாரு. உன் மூஞ்சிக்கு கொஞ்சம்கூட வெக்கம் வேணாம்." இவ்வளவு காலையில் கிட்டப்பனா? கம்பளியை மேலே போர்த்தியபடி எழுந்துபோய் அறைப்பக்கம் பார்த்தான். இன்னும் லட்சுமி தூங்கிக்கொணடிருந்தாள். எழுப்ப வேண்டும் என்று தோன்றினாலும் அதற்கு மனம் ஒப்பவில்லை. வலது பக்கம் தொங்க விட்டிருந்த சாமுண்டி அம்மனின் படத்தைப் பார்த்துக் கையெடுத்துக் கும்பிட்ட பின்னர் கதவைத் திறந்ததும், கிழக்குத் திசையைப் பார்த்த குடிசையாதலால் உள்ளே வெளிச்சம் பரவியது. பார்த்தால் கிட்டப்பன் நின்றிருந்தான்.

லட்சுமி எழுந்து கணநேரத்திற்குள் சமாளித்துக் கொண டாலும் மயக்கம் தீரவில்லை. இரவின் நினைவுகள் உடலைத் தாக்கின. தொலைவாகக் கண்பார்வையைச் செலுத்தியபோது கோடாலி அங்கேயே இருந்தது. வெளியே குனிந்து பார்த்தாள். பீரன் எழுந்து வெளியே யாருடனோ பேசிக்கொண்டிருப்பது கேட்டது. சத்தம் காட்டாமல் மெல்ல எழுந்து வந்து கதவுச் சந்து வழியாகப் பார்த்தபோது ஆச்சர்யம் உண்டானது. கிட்டப்பன் நின்றிருந்தான்.

எதற்கோ கிட்டப்பன் சிரித்தான்
பீரனும் சிரித்தான்.

# பீடிக்கப்பட்டவர்கள்

இப்படியே யோசித்த வண்ணம் உட்கார்ந்திருந்தால் பூமியிலேயே புதைந்துபோய்விடுவோமோ என்ற பயம் உண்டானது. முன்னும் பின்னும் பார்க்காமல் மேலே எழுந்துநிற்கிற கதையையும் காணோம். அங்கே தொங்கிக் கொண்டிருந்த லாந்தர் விளக்கின் வெளிச்சத்தில் நிழல்கள் பெரிதாவதும், குறைவதும், திடுமென இல்லாமல் போவதுமாகக் குழப்பமாயிருந்தது. சுற்றிலும் பார்த்த போது எதிர்ப்புறச்சுவரில் பஸவண்ணன், தவக்கோலத்தில் இருக்கும் சிவன், பெரிதாக்கப்பட்ட அப்பாவின் படம் எல்லாம் கண்களில் விழுந்தன. அடுத்து இருந்த அறையைத் தாண்டிப் பார்வை செல்லவில்லை. அம்மா தூங்கிக்கொண்டிருக்க வேண்டும். இல்லாவிட்டால் கௌடரின் வீட்டுக்குப் போகட்டுமா வேண்டாமா என்று கேட்டிருப்பாள். அறை வாசலில் சென்று நின்றேன். கழுத்துவரை போர்வையைப் போர்த்திக் கொண்டு சுவர்ப்பக்கம் திரும்பி அம்மா படுத்திருந்தாள். லாந்தர் விளக்கு வெளிச்சம் அறைக்குள் பரவி தன்னால் முடிந்த வரைக்கும் எல்லாவற்றையும் புலப்படுத்தியது.

அம்மா எழுந்து நடமாடியதெல்லாம் மறந்துபோகும் அளவுக்கு ரொம்ப நாட்கள் ஆகிவிட்டன. சோம்பியிருந்த வீட்டின் நிலைமையோடு அம்மாவின் இதயத்துடிப்பும் சேர்ந்து கொண்டது நினைத்துப் பார்க்கவே இயலாததாக இருந்தது. வீட்டு வாசலுக்கு வந்து நின்ற கௌடர் அகங்காரத்தோடு திட்டத் தொடங்கியபோது அம்மாவின் உயிர் எழுந்திருக்கவும் முடியாமல் உட்கார்ந்திருக்கவும் முடியாமல் தவித்திருக்க வேண்டும். ஒரு கணம் மூச்சைக் கட்டிக்கொண்டு சொன்னாள்: "கௌடர்தான் ஏதேதோ திட்டறாரு. நீ அவருக்கு எதிரா நடக்கறதுன்னா என்ன அர்த்தம்? என்னதான் இருந்தாலும் அவரு பெரியவரு." அம்மாவின் வார்த்தைகளைக்கேட்டு கௌடர் வேகமாகப் பேசினார். ஒரு கையில் சிகரெட்டு, இன்னொரு கையை அசைத்தசைத்துப் பேசினார். "என்னமோ யோக்கியமான புள்ளைன்னு ஆயிரம் ரூபா வரைக்கும் கடன் கொடுத்தேன். ஸ்வாமி கால்ல விழுந்து வேல வாங்கிக்

கொடுத்தவன் நான். இப்ப ஆளு எப்படிப்பட்டவன்னு புரியுதா இவளே. நா சொல்றது இவ்வளவுதான். அசலயும் வட்டியயும் சேர்த்துக் கடனத் திருப்பி அடைக்கச் சொல்லு. இல்லன்னா, என்ன நடக்கும்னு ஒனக்கே தெரியும். ஒரு சாண் நெலம்கூட மிச்சமிருக்காது." இதைக்கேட்டதும் அம்மாவுக்கு வார்த்தையே நின்றுபோய்விட்டது. ரொம்பவும் கம்பீரமாக நடைபோட்டபடி வெளியேறினார் கௌடர்.

கல்லைப்போல ஒரேயடியாக நிற்க முடியவில்லை. 'அம்மா' என்று கூப்பிட்டால் கண்களைத் திறக்கக் கூடும். கண்களிலேயே உயிரைத் தேக்கிக்கொண்டு என்னை முழுக்கவும் பார்க்கக் கூடும். நிற்க முடியவில்லை. வாசல்கதவைத் திறந்துகொண்டு பெரியம்மா உள்ளே வந்தாள்.

"எப்படி இருட்டிக்கெடக்குது பாரு" என்றாள் அவள்.

பெரியம்மாவை உற்றுப் பார்த்தேன். பார்க்க இயலாத அளவுக்கு நலிந்திருந்தாள். இரவும் பகலும் வேலை வேலை என்றே இருந்தாள். இதெல்லாம் எதற்காக என்று தோன்றியது.

"டீ வேணும்னா வைக்கட்டுமா?" என்று கேட்ட போது "சரி" என்றேன். ஏதாவது பேசக்கூடும் என்று நினைத்து அறைக்குள் சென்று பலகை போட்டு உட்கார்ந்து கொண்டேன். ஒரு நிமிஷத்தில் அடுப்புப் பற்றவைத்த பெரியம்மா வேலையை ஆரம்பித்து விட்டாள். அடுப்புப் பக்கத்தில் இருந்து என் பக்கம் முகம் திருப்பிய பெரியம்மா, "நீ ஒரு கல்யாணத்த பண்ணிக்காம எனக்கு இப்படி ஒரு கஷ்டத்தக் கொடுக்கற பாரு. ரெட்ட வேல எனக்கு" என்றாள்.

"என்ன பெரியம்மா?" என்றேன்.

"இன்னும் நீ கொழந்தைடா" என்று அவள் சொன்ன விதத்தில் அக்கறை தெரிந்தது. நெருப்பிலேயே கரைந்து விடுபவளைப்போல பக்கத்திலேயே உட்கார்ந்திருந்தாள். ரொம்ப நேரத்திற்கப்புறம் "கல்யாணம்னு சொன்னா உனக்கு ஏன் பேச்சே வரமாட்டேங்குது" என்றாள்.

...புல்மேயும் மானைப்போல அவளுடைய நினைவுகள் உடைத்துக்கொண்டு வரத்தொடங்கின. பெரிய பெரிய இரண்டு கண்கள். பெரிய நெற்றி. அகன்ற மார்பு. நானே அவள் மார்பில் சாய்ந்து கொள்ளலாம் என்னும் அளவுக்கு அகன்ற மார்பு. இரவு முழுக்க சிகரெட் புகைத்துவிட்டு, காலையில் நேரம் கழித்து எழுந்து அவளிடம் திட்டு வாங்கியதை நினைத்துக்கொண்ட போதெல்லாம் சிரிப்பு வந்தது. அடக்கிக் கொண்டு பெரியம்மாவின் பக்கம் பார்த்தேன். பெரியம்மா சிரித்தபடியே "என்ன..?" என்று கேட்டாள்

"எதுவோ ஞாபகத்துக்கு வந்திச்சு" என்றேன். "எல்லாம் எனக்குத் தெரியும். ஆகாததயெல்லாம் மனசுல நெனச்சுக்கிட்டு அல்லாடற நீ" என்று அடிக்கிற மாதிரி சொல்லிவிட்டு டீயை வடிகட்டிய பிறகு அறைக்குள் கொண்டு வந்துவைத்துவிட்டு அங்கேயே உட்கார்ந்தாள். நானும் அறைக்குள் சென்று டீயைக் குடித்தபடியே பெரியம்மாவின் பக்கம் பார்த்தேன். எரியும் நெருப்பின் அலை அவள் முகத்தில் நிழலாடியது.

எழுந்து "கௌடரைப்போய்ப் பார்த்துட்டு வரேன்" என்று சொல்லிவிட்டு வெளியே வந்தேன். வரவர இரவு நேரம் அதிகமானதைப்போலத் தோன்றியது. வெளுத்த முகங்களுடன் அம்மாவும் பெரியம்மாவும் முதுகுக்குப் பின்னால் தொடர்ந்து வருவது போலத் தோன்றியதால் பின்னால் உடனே திரும்பிப் பார்க்கவேண்டும் என்று தோன்றியது. பலமுறை அப்படித்தான். செல்லரித்து நிற்கிற வீட்டுச் சுவர்போல அம்மா இருந்தாள். அசைவற்றுப் படுத்துக் கிடப்பதும் கண்திறந்தால் அறைக்குள் எல்லா இடங்களையும் சுற்றிப் பார்ப்பதுமாக இருந்தாள். அதற்குப் பின்னர் என்னை நினைத்துக்கொண்டு குலதெய்வத்தை நினைத்துக் கொள்வாள். வீட்டு வேலைகளையெல்லாம் முடித்து விட்டு பெரியம்மா வந்து பக்கத்தில் உட்கார்ந்ததும் "கடுதாசி எதாச்சி எழுதி இருக்கானா? எப்ப வரானாம்?" என்று கேட்பாள். இது அம்மாவின் கதை.

பெரியம்மாவோ கழனி வேலைக்கும் வீட்டு வேலைக்கும் நடுவே உழைத்து உழைத்துத் தேய்ந்தபடியிருந்தாள். அம்மாவுக்கு இரண்டு வேளை கஞ்சி கொடுத்து விடுவதும் அவள்தான். என்னைப் பற்றி யாராவது அப்படி இப்படிப் பேசினால் கோபத் துடன் எழுவதும் அவள்தான். இவர்களின் இந்த அக்கறை என் இருப்பையே இல்லாமல் ஆக்கிவிடுகிறதே என்று தோன்றியது. காசநோயுடன் உடல் வெளுத்த உடலோடு ஊரெல்லாம் அம்மா திரிந்ததை எண்ணிக் கொண்டேன். இருட்டில் ஊருக்கு முன்னால் நிற்கிற மரங்கள் தேமே என்று நின்றிருந்தன. வீட்டு ஜன்னல் வழியாக வெளியே வந்த வெளிச்சம், வெளியே விழுந் ததுமே இருட்டோடு கரைந்து போனது. சாலையைப் பார்த்தபடி நின்ற கௌடரின் பெரிய வீடு இருளில் மூழ்கியிருந்தது.

இரண்டு முறை கதவைத் தட்டிய பிறகு கதவைத் திறந்து கொண்டு நாகவ்வா வந்தாள். "எப்ப வந்தே" என்று கேட்டுவிட்டு உள்ளே சென்றாள்.

திண்ணையில் போடப்பட்டிருந்த கட்டிலின் முன்னால் லாந்தர் விளக்கை வைத்திருந்த கௌடர் பத்திரங்களைத் தேடிக்கொண்டு உட்கார்ந்திருந்தார். ஒருவழியாக நிமிர்ந்து

பார்த்து, "வாடா" என்றார்.

நான் போய் மாட்டுக் கொட்டகையில் வரிசையாகக் கட்டப்பட்டிருந்த மாடுகளையும் கன்றுகளையும் பார்த்தேன். யார் யார் வீட்டைச் சேர்ந்த மாடுகள் எவை எவை என்று கண்டுபிடிக்க எந்த அடையாளமும் இல்லை.

கௌடர் "இவளே, டீ போடு" என்றார்.

நான் "எதுவும் வேணாம்" என்றேன்.

கௌடர், "பரவாயில்ல" என்று சொன்னபடி தலை நிமிர்ந்து "உன் பத்திரத்தத்தான் எடுத்துப் பாத்துட்டிருந்தேன்" என்றார்.

பேசுவதற்கு ஆரம்பமாக எச்சிலைக் கூட்டி விழுங்கிவிட்டு, "கொஞ்சம் பொறுமையாகவே பாத்திருக்கலாமே" என்றேன்.

சிகரெட்டை எடுத்துப் பற்றவைத்துப் புகையை இழுத்து மேலே விட்டபடி, "இப்படியும் நடக்குமா சொல்லு..." என்றார். அதற்குப்பிறகு கொஞ்சநேரம் என் பக்கம் திரும்பவே இல்லை. நாகவ்வா டீ எடுத்துக்கொண்டு வந்து வைத்துவிட்டு உள்ளே சென்றாள். "இப்ப எங்கேருந்து கொண்டு வரட்டும் சொல்லு. வேலய விட்டு வந்த விஷயம்தான் எல்லாருக்கும் தெரிஞ் சிட்டுது..." கௌடர் என்னை ஆழம் பார்ப்பதுபோலப் பார்த்தார். பிறகு, "சரி... நீ என்னமோ வேலய விட்டுட்டே.... வாங்கிக் கொடுத்தவங்க மானம் என்னாகறது?" என்று தனக்கே உரிய சிரிப்பை முகத்தில் தேக்கிக்கொண்டு சொன்னபோது என்ன சொல்வது என்றே புரியவில்லை.

"அப்படியெல்லாம் இல்ல. அது உங்களுக்குப் புரியாது" என்றேன்.

தைத்ததுபோல நிமிர்ந்து உட்கார்ந்தார். "என்ன சொன்னே?" என்று உரத்த குரலில் சத்தமாய்க் கேட்டார். "எனக்கு எப்படிய்யா தெரியும்? சுவாமிக்கு முன்னால நீ எந்த அளவுக்கு சமமாவாய்? சுவாமிங்க எல்லாரும் அப்படி இப்படின்னு மேடையில பேசறது வேற கேடு ஒனக்கு.. இப்ப எதுக்குப் பஞ்சாயத்து? எனக்கும் உனக்கும் இருந்த விவகாரம் முடிஞ்சி போச்சு. அசலயும் வட்டி யையும் கொண்டாந்து குடுத்துட்டு உன் வழிய நீ பார்த்துக்கோ" என்று சொல்லிவிட்டு ஓய்ந்துபோய் உட்கார்ந்தார்.

வெறுமனே உட்கார முடியவில்லை. "அப்படியெல்லாம் இல்ல கௌடரே..." என்றேன். அவர் என்னைப் பார்த்தார். "சொன்னா ஒங்களுக்குப் புரியாது..." என்று சொல்லத் தயாரானேன்.

பேச்சைத் துண்டிப்பதுபோல "எல்லாம் இப்பத் தெரியும்" என்று சொல்லிவிட்டு வெட்டிக்கிழித்துவிடுவதைப் போலப் பார்த்தார். நானும் சட்டென்று "சரி– வரேன்" என்று சொல்லி

விட்டுத் திரும்பிக்கூடப் பார்க்காமல் வெளியே வந்தேன். தலை கிர்ரென்று சுற்றியது. சூழ்ந்திருந்த இருளில் வழி தெரியா ததைப்போல ஆனது.

பெரியம்மா கதவைத் திறந்து வைத்துக்கொண்டு நின்றாள். என்னைப் பார்த்ததுமே, "ஏன் இவ்வளவு நேரம்?" என்றாள்.

"நேரமாய்டுச்சு" என்றேன்.

"உன்கூட இவ்வளவு நேரம் பேசிட்டிருந்தாரா?" என்றாள். நான் சிரிக்க முயற்சி செய்தேன்.

"ரொம்ப நேரமாய்டுச்சு. அந்த வீட்டுலயும் ஏதாவது செய்யணுமே... நா கெளம்பறேன்" என்றாள். ஒன்றிரண்டு அடி வைத்துச் சென்றவள் மீண்டும் திரும்பி, "அம்மாவுக்கு நீயே கஞ்சி குடுத்துடு" என்று சொல்லிவிட்டுச் சரசரவென்று நடந்து போனாள்.

திறந்திருந்த கதவு வழியே விழுந்த வெளிச்சம் தெரியும் மட்டும் பெரியம்மா உருவம் தெரிந்தது. அதற்கப்புறம் காண வில்லை. நீண்டநேரம் அங்கேயே நின்றேன். காற்று வேகமாக வீசியது. அங்கொன்றும் இங்கொன்றுமாக மழைத்துளிகள் விழுந்ததும் உள்ளே சென்றேன்.

சாப்பிடப் பிடிக்கவில்லை. "சாப்பாடு எடுத்துட்டு வரட்டு மாம்மா" என்று கேட்டேன். அறையிலிருந்து "ரயில் போயி டுச்சா?" என்று கேட்பது கேட்டது.

"போயிருக்கும். இன்னும் போகாம இருக்குமா?" என்றேன்.

"இன்னும் கொஞ்சம் நேரமாகட்டும்" என்று சொன்ன அம்மாவின் குரலோடு உஸ்ஸென்று வீசிய காற்றின் சத்தமும் கேட்டது.

சிறிது நேரம் கழித்து "மழை வந்துச்சா" என்று கேட்டாள்.

"வந்தாலும் வரும்" என்றேன்.

"வெயில் காலத்துலயே இந்தக் கூரையச் சரிப் படுத்துன்னு அடிச்சுகிட்டேன். இப்ப எல்லா எடத்துலயும் ஒழுகும்..." அம்மா குரலை உயர்த்திப் பேசியது கோபத்தை மூட்டியது. கட்டுப் படுத்திக்கொண்டு சரியாக உட்கார்ந்தேன்.

...சிகரெட்டைப் பற்றவைத்து வேகமாகப் புகையை இழுத்து, புகையோடு அவளைப் பற்றிய நினைவுகளையும் வெளியேவிட நினைத்தேன். நடுங்க வைக்கும் குளிரில் உட்கார்ந்தபடி, "எனக்கும் கல்யாணத்துக்கும் ரொம்ப தூரம்" என்றாள். "எவ்வளவு தூரம்?" என்று கேட்க நினைத்து அப்படிக் கேட்க முடியாமல் அவள் நினைவுகளையே மனசில் நிறைத்துக் கொண்டபடி உட்கார்ந் தேன். ரொம்பவும் கவர்ச்சியாகத் தெரிந்தாள். என்னவோ தெரியவில்லை. எனக்குத் துயரமுண்டாகும் போதெல்லாம் நீ

வேண்டும் என்று நினைப்பது பைத்தியக்காரத்தனம் எனத் தோன்றியது. சொன்னால் எல்லாமே வெறும் வார்த்தைகளாக எஞ்சிவிடும். இருப்பதெல்லாம் பொய் என்று தோன்றியது. நீயே எல்லாம் எனத் தோன்றியது. அம்மா, அக்கா, தங்கை, குழந்தை, தோழி, மனைவி எல்லாமாகவும்... வழக்கத்துக்கு மாறாகவே இருந்திருக்கும். அவளுக்குள் என்ன மாதிரியான எண்ணங்கள் ஓடும் என்கிற சந்தேகம் வந்தது. "இப்படி அடிக்கடி பாக்காதீங்க. ஒரு மாதிரியா இருக்குது" என்றாள். வராத சிரிப்பைக்கூட வரவழைத்துக்கொண்டு சிரிக்க வேண்டும். அவள், அவளுடைய தாய் தந்தை, துண்டித்து வைத்திருக்கிற சாதி, சுற்றத்தார் இவற்றிற்கு இடையே நானும் அவளும் பருந்துகளுக்கு எறியப் பட்ட பிணங்களைப் போலத்தான். எழுந்து நின்று "வரட்டுமா?" என்றேன்...

வேகமாக வீசிய காற்றில் கதவு பாதி திறந்துமூடிக் கொண்டது. திடுமென உள்ளே வீசிய காற்றில் லாந்தர் விளக்கின் திரி கிசுகிசு மூட்டப்பட்டவனைப்போல ஆடியது. திடுமென ஞாபகம் வந்தவளைப்போல அம்மா "கௌடர் வீட்டுக்குப் போய்ட்டு வந்தியா?" என்று கேட்டாள்.

நானும் பொறுமையாகவே, "போனேன்" என்றேன்.

"என்ன சொன்னாரு" என்று கேட்டாள்.

என்ன பதில் சொல்வது என்று புரியவில்லை. அம்மா மீண்டும் அதே கேள்வியைக் கேட்டபோது "வேற என்ன சொல்லப் போறாரு, எல்லாம் பழைய கதைதான்" என்றேன்.

"பழைய கதைன்னா என்ன?" என்றாள்.

என்ன பதில் சொல்வது என்று புரியாமல் சகித்துக்கொள்ள முடியாத நிலைமைக்கு ஆளானேன். "சும்மா படுத்துத் தூங்கும்மா" என்றேன்.

"என்னுடைய பேச்சுன்னா உனக்கு ஏன் இப்படி ஆவுது, சொல்லு" என்று மூச்சைக் கட்டிக்கொண்டு குரலை உயர்த்திக் கேட்டாள்.

அவள் குரலும் கேள்வியும் வீட்டுக்குள் நாலா பக்கமும் அலைந்தன. கோபத்துடன் வேகமாக எழுந்து போய் அவள் அறையின் முன்னால் நின்று "என்ன கேக்கணும் கேளு" என்றேன். அவள் அப்படியே படுத்திருந்தாள். வழக்கத்தை விடவும் அதிகமாக அவள் முகம் வெளுத்ததைப்போலக் காணப்பட்டது. கண்கள் திறந்தே இருந்தன. மூச்சு வாங்கியதில் மார்பு மேலேறித் தாழ்ந்தது.

"வா... உக்காரு" என்றாள். போய் அவள் படுக்கைக்குப் பக்கத்தில் உட்கார்ந்து எப்படிச் சொல்வது என்று தவித்தேன்.

"சொல்லு" என்று அவள் திரும்பிப் பார்த்தாள்.

எவ்வளவோ நேரம் சும்மா இருந்து, பிறகு அப்படியும் இருக்க இயலாமல், "எனக்குச் சரின்னு பட்டத சொல்றது தப்பா?" என்றேன்.

"சரி" என்றாள்.

"எனக்கு சரின்னு பட்டுது. மதம், வினை, மடம், சுவாமிகள் எல்லாமே வேஷம்னு சொன்னேன்..."

அம்மா என்னையே உற்றுப் பார்த்தாள். "எதுவுமே வேணாம். இருக்க வீடும் நெலமும் இருந்தா போதும்னு இங்க வந்தா, யாரோ கௌடருக்கு குத்தி விட்டிருக்காங்க..." என்று சொல்லிவிட்டுப் பார்த்தேன். மிகவும் நொந்து போயிருந்தாள். வெறுமனே பார்த்தபடி இருந்தேன். வேகமாக மூச்சு வாங்கிய பின்னர் நெற்றியில் அடித்துக் கொண்டாள். சிறிது நேரம் வேறு எங்கோ பார்த்திருந்துவிட்டு அம்மாவை மீண்டும் பார்த்தபோது அவள் உதடுகளைக் கடித்துக் கொண்டிருப்பது தெரிந்தது. கண்களிலிருந்து பொல பொலவென்று கண்ணீர் தளும்பியது. சிறிது நேரத்திற்கப்புறம் கடுமையான குரலில், "இப்பவே போய் தப்பாய்ட்டுதுன்னு சொல்லி மன்னிப்பு கேட்டுக்கோ. கடவுள் மாதிரி இருக்கறவங்ககிட்ட ஒனக்கு எதுக்குப் பகை. இதெல்லாம் என் தலையெழுத்து. இப்பவே போ..." என்றாள்.

"யார்கிட்டயும் மன்னிப்பு கேக்க வேண்டிய அவசியம் ஒண்ணும் இல்ல" என்று இரண்டு கைகளாலும் தலையைப் பிடித்துக்கொண்டு அமைதிகொள்ள முயற்சி செய்தேன். இருவருக்குமிடையே நீண்ட நேரம் மௌனம் நிலவியது.

பிறகு மெதுவாக அம்மாவே, "அப்படின்னா நாம பொழைக்கறது...?" என்றாள்.

அவள் சத்தத்தைக் கேட்கவே முடியவில்லை. அவளையே உற்றுப் பார்த்து, "இப்ப மட்டும் நாம வாழறமா?" என்று கேட்டேன். அம்மாவின் கழுத்து நரம்புகள் புடைத்துக்கொண்டு மேலெழுந்தன. எழுந்து விடுவிடுவென்று கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்து இருட்டில் தட்டுத்தடுமாறி திண்ணையில் தூணைப் பிடித்தபடி தளர்ந்து ரொம்ப நேரம் நின்றிருந்தேன்.

# ஒரு தகனத்தின் கதை

தெறந்த கண்ணு தெறந்தபடியே படுத்துக் கெடந்தேன். செவுத்து மேலே குறுக்கும் நெடுக்குமா இருந்த கோடுங்க மேல பார்வை பட்டுது. மங்கலா எரிஞ்சிட்டிருந்த லாந்தர் வெளக்கு வெளிச் சத்துல அந்தக் கோடுங்ககூட மங்கலாத் தெரிஞ்சிது. பாத்துட் டிருக்கும்போதே அந்தக் கோடுங்களுக்கு உருவம் வந்திச்சு. அந்த உருவத்த எங்கயோ பாத்த மாதிரி இருந்திச்சு. எப்பவும் இல்லாத அளவுக்கு அந்த உருவத்துக்கு ஆவேசம் வந்தமாதிரி இருந்திச்சு. பயந்து கண்ண மூடுனா, பயங்கரமா பெரிசாகி, ஊடு முழுக்க நெறஞ்சி ஆட்டம் போட்டுது. அப்படியே வாசலுக்குத் தாவி அங்க எரிஞ்சிக்கிட்டிருந்த வெறகுக்கட்டைய இழுத்து மறுபடியும் ஆடத் தொடங்கிச்சு. அப்ப அதச்சுத்தி அதைப்போலவே இன்னும் நாலஞ்சு உருவங்க... கண்ணு கபகபன்னு எரிஞ்ச மாதிரி இருந்தது. பயத்துல கண்ணைத் தெறந்தா செவுத்துமேல இருந்த கோடுங்க தான் மறுபடியும் கண்ணுல பட்டுது.

ஏன் இப்படி? கதகதப்பா கம்பளிய போத்திக்கிட்டு படுக்க வச்சு தட்டிக்கொடுத்துக்கிட்டே ஆயா சொன்ன காட்டுக் கதையில திசைதப்பிப்போற மாதிரி. வீடு பூராவும் வாசல் பூராவும் அந்தக் குரல் நெறஞ்ச மாதிரி. துர்நாத்தம் போகட்டு மின்னு கட்டுக்கட்டா வாங்கிப் பத்தவச்ச ஊதுவத்தி வாசனயால வாந்தி வரமாதிரி இருந்திச்சு. வாசல்வழியா வர வெறகுக் கட்டைப் பொகையால மூச்சு திணறிப் போச்சு. எந்திரிச்சு நின்னாலும்கூட ஏதோ ஒரு மாதிரி படபடப்பு. ஒடம்பு பூரா ஒரே நடுக்கம். வெளியே போயி அனல் கக்குற நெருப்பப் பாத்தபடி, இல்லன்னா சுருண்டு போயி திண்ணயில சில்லுனு கெடக்குற ஆயாவோட பொணத்தப் பார்த்தபடி உக்காந்திருக் கணுமின்னு தோணிச்சு. மனசுல அப்படித் தோணினாலும்கூட அப்படிச் செய்ய முடியல. இங்கயே, இந்தக் கட்டில் மேலயே ஒட்டிவச்ச மாதிரி தோணுது. செவுத்துமேல இருந்த கோடுங்க, வெளியே போகவிடாம ஆளப்புடிச்சு வச்சுருக்கற மாதிரி தோணுது. பன்னெண்டு வருஷமா மக்கி மண்ணாப் போயிருக்கற ஊடு தனக்குள்ளயே ஒரு காட்ட உருவாக்கி வச்சுட்டிருக்குது.

அந்தக் காலத்திலேருந்து இன்னைக்கு வரைக்கும் முன்னோர்கள் செஞ்ச பாவத்தப் போல மூலையில என் உயரத்துக்கு ரெண்டு மூணு எருக்கஞ் செடிங்க இருந்தது. அதுக்குப் பக்கத்துல ஒரு பெரிய புத்து. ஊடு பூரா வல பின்னியிருக்கற செலந்திங்க. மேலேயிருந்து கீழ ஏதோ ஒண்ணு கருப்பா கயிறு மாதிரி தொங்கிச்சு. தொட்டிக்குப் பக்கத்தில மக்கி உழுந்தது போக அரையும் கொறயுமா நிக்கற தூணுங்க. அக்கம் பக்கம் எல்லா இடத்திலயும் ஒடைஞ்சு கெடக்கற ஓடுங்க. அதும்மேல நல்லா கை அகலத்துக்குப் புழுதி அப்பிக் கெடந்தது. புழுத்துப்போயி மஞ்சள் தூள உதிர்த்தபடி வெறுமனே நுனியில மட்டும் ஒட்டிட்டிருக்குதுங்க கதவுக் கம்பங்க. ஊடு பூராவும் எலி வளதோண்டி வளதோண்டி வெளியே தள்ளுன மண்ணுக் குவியல். நான் பொறந்து வளர்ந்த ஊடு என் கண்ணு முன்னாலயே வீணாப் போயி, இது அதுதானாங்கற சந்தேகத்தக் கௌப்பிச்சு. வெளிய தமுக்கடிக்கற சத்தம். "பஞ்சாயத்துக்கு வாங்க... எல்லாரும் வந்து கூடறாங்க"ன்னு சொல்லிக்கிட்டே தமுக்குக்காரன் போறான். ஜன்னலத் தெறந்து பார்த்திருந்தா ஆளப் பாத்திருக்கலாம்.

...மூஞ்சில வேல கெடைச்ச சந்தோஷத்தோட ஊருக்கு வந்தா, கண்ணச் சுருக்கிக்கிட்டுப் பாக்கறாரு பெரியப்பா. உள்ளுக்குள்ள பொறாம. ஆச்சரியப்படற மாதிரி ஆயா வாய மூடிக்கிட்டு உக்காந்திருந்தா. "வேல என்னமோ கெடைச்சுட்டுது. ஆனா ரொம்ப தூரம்..."னு சொன்னேன். யாரும் எதுவும் பேசல. அவங்க பார்த்த பார்வையச் சகிச்சுக்கவே முடியல. எரிஞ்சி உழற மாதிரி "என்னாச்சு உங்களுக்கெல்லாம்"னு கேட்டேன். கண்ண எடுக்காமயே பெரியப்பா ரொம்ப சாதாரண குரல்ல "நல்லாத்தா இருக்கோம்"னு சொன்னாரு. மூச்சு முட்டத் தொடங்கி பெருமூச்சு வாங்கிச்சு அவருக்கு. பொட்டி மேல ஒக்காந்துக்கிட்டே, "வந்து..."ன்னு இழுத்தாரு. அப்ப திரும்பி அவரயே பாத்தப்போ இருமிக்கிட்டே, "கடவுள் மாதிரி அபூர்வமா ஊருக்கு வர்றவன், இன்னைக்குன்னுதான் பாத்து வரணுமா"ன்னு கேட்டாரு.

என்னாச்சு இப்ப.. எல்லார் மூஞ்சியையும் வீட்டயும் நல்லா சுத்திப்பாத்துட்டு மறுபடியும் பெரியப்பா பக்கம் பார்த்தேன். "நாங்க எல்லாரும் தலநிமுந்து நடக்க முடியாம பண்ணிட்டியே. அப்பா அம்மா இல்லாத அனாதைன்னு உனக்காக அத்தைக் காரிங்கள்லாம் உயிர எடுத்தாங்களேன்னு நானும் என்னால முடிஞ்ச அளவுக்கு உதவி செஞ்சதுக்கு நல்ல பதில் மரியாதை செஞ்சிட்டே! இனிமே என்ன... நீ இங்க இருக்கப் போறதில்ல... இருந்து அனுபவிக்கப் போறவங்க நாங்கதான.." கொங்கணத்தைச்

சுற்றிக்கொண்டு மைலாரத்துக்கு வருகிற வார்த்தைகளையும் அருவருப்பையும் மனசிலேயே விழுங்கிக்கிட்டு அப்படியே உக்காந்தேன்.

அவ்வளவு நேரம் வெளியே போயிருந்த பெரியம்மாவும் அக்காவும் நாகியும் ஒவ்வொருத்தரா உள்ள வந்தாங்க. என்னப் பார்த்ததுமே பெரியம்மா, "இப்பதான் வந்தியா"ன்னு கேட்டா. மங்கலா எரிஞ்சிட்டிருந்த வெளக்க சரியா ஏத்தப்போனா. என் பக்கமா பாத்த நாகி திடீர்னு வேற பக்கம் திரும்பி சாமி அறை வாசல்கதவு பக்கத்துல உக்காந்து திரிய பெரிசா ஏத்திட்டிருந்த பெரியம்மாவைப் பார்த்தா. இவுங்க எல்லாரும் ஏன் இப்படி நடந்துக்கறாங்கன்னு எனக்குப் புரியவேயில்ல. பெரியம்மாதான் பேச ஆரம்பிச்சா. "இன்னைக்குத்தான் பஞ்சாயத்து"ன்னு சொன்னா. நான் எதுவும் சொல்லாம அவளப் பாத்தேன். ஆனா அதுக்கு மேல அவ எதுவும் பேசல. அதனால நான் அவளப் பாத்து, "எதுக்காகப் பஞ்சாயத்து?"ன்னு கேட்டேன்.

"எதுக்கா... எதுக்குன்னு வேற கேக்கறயா நீ? நீ செஞ்ச ஈனத்தனத்துக்கு... நா மட்டும் இல்லாம இருந்திருந்தா உன் மானமும் போயிருக்கும். என் மானமும் போயிருக்கும். அந்த உன் கமலி புள்ளத்தாச்சியா இருக்கறா. சாதிய விட்டு சாதி.... நீ படிச்சவன். அறிவில்லாதவன் மாதிரி... சீச்சீ..."ன்னு சொல்லிட்டு களச்சுப்போன மாதிரி மூச்சு வாங்கிக்கிட்டே மேலயும் கீழயும் பார்த்துட்டு, கடைசியா வாசல் கதவு வழியா தெரியுற ஆகாயத்த பாத்துக்கிட்டே ஒக்காந்துட்டாரு.

எனக்கு ரொம்ப கொழப்பமாய்ட்டுது. கொழப்பத்துல என்னால அங்க ஒக்காந்திருக்க முடியலை. எழுந்துபோய் சிகரெட்டு புடிக்கணுமின்னு தோணிச்சு. எந்திருக்கும்போது பெரியப்பா என் பக்கம் பாத்து, "இப்ப ஒண்ணும் நடக்கலன்னு வச்சுக்கோ. அவுங்க சாதியிலயே ஒருத்தன்தான் அதுக்குக் காரணமின்னு சொல்லி ஒத்துக்க வச்சிருக்கேன். அவளுக்கு தண்டனப் பணம் கட்டறதுக்காக எரநூறு ரூபா கொடுத்தா போதும். அதோட இந்தப் பிரச்சனை தீந்துரும்" கொஞ்ச நேரம் பேச்ச நிறுத்திட்டு மறுபடியும் ஆரம்பிச்சாரு. "அது கெடக்கட்டும். வேளயும்கூடி வந்திருக்குது. எப்படியோ எல்லாரும் ஒத்துக் கிட்டிருக்காங்க. நீ கல்யாணம் செஞ்சிக்கோ. என் ஆஸ்தியெல் லாம் வேற யாருக்கு. எல்லாம் உனக்குத்தான, சொல்லு. எங்களுக்கு வேற ஆம்பளப் புள்ளயா இருக்குது? என்னதான் ஆனாலும் வீணாப்போக விட முடியுமா சொல்லு..."ன்னு சொல்லிவிட்டு அவரு என்னப் பாத்தப்போ என் உடம்பே நடுங்கிச்சு. கண்ணெல்லாம் இருண்டு வந்த மாதிரி இருந்திச்சு—

தட்டுத்தடுமாறி வெளியே வந்தேன். வத்திக்குச்சி கிழிச்சு சிகரெட்டுப் பத்த வச்சேன். அந்த வெளிச்சத்துலயே என் மூஞ்சிய பாத்துக்கணும்னு தோணிச்சு...

எந்தப் பக்கம் பொரண்டாலும் கோடுங்கதான். பாத்துக்கிட்டிருக்கும்போதே உருவமா மாறக்கூடிய, உயிர்வரக்கூடிய கோடுங்க. இதுக்கு ஒரு முடிவே இல்ல போல. வேற பக்கம் திரும்பிப் படுத்தேன். ஒடம்பு பொணம் மாதிரி கனக்குது. சக்தி எல்லாம் எங்கயோ பொதஞ்சிபோக, ஒடம்புக்குள்ள வலி புகுந்து மறஞ்சிட்டிருக்கற மாதிரி. அந்தப் பக்கமும் இந்தப்பக்கமுமா மாறிமாறிப் படுத்து நேரத்தக் கடத்தறதுக்குப் பதில் வெளியே போயி உக்காந்துடணுமின்னு தோணிச்சு. திண்ணைக்கு வந்தேன். மாட்டுக் கொட்டாப்பக்கம் படபடன்னு றெக்கைய அடிச்சுக்கிட்டு பறவைங்க பறக்கற சத்தம் கேட்டுது. திண்ணையில தொங்கிட்டிருக்கற லாந்தர் வெளக்குக் கண்ணாடி புகை படிஞ்சி புகை படிஞ்சி கருத்துப்போக, வெளிச்சம்கூட கருப்பாவே விழுறதக் கண்டு பயமாய்டுச்சு. புற்றும் எருக்கஞ்செடிகளும் இருந்த பக்கத்தைப் பார்க்கப் பயமாக இருந்துச்சு. ஒண்ணுரண்டு பறவைங்க பக்கத்துலயே பறந்து போனதால பயமாச்சு. சட்டுனு லாந்தர் வெளக்குத் திரிய பெரிசாக்குனேன். கபகபன்னு பொக வந்திச்சு. தொங்குன எடத்துலேருந்து லாந்தர எடுத்துக்கிட்டு வெளிய வந்தேன். வாசல்ல எரிஞ்சுட்டிருந்த வெறகுக் கட்டைங்க சுத்தி அனலப் பரப்பி வாசலயே செவப்பாக்கிரிச்சு. திண்ண மேல மொழம் நீளத்துக்கு தலை மட்டும் தெரியற மாதிரி போத்தியிருந்த வெள்ளத் துணிக்குள்ள ஆயாவோட ஒடம்பு கெடந்தது. தலமாட்டுல வச்சிருந்த அகல்வெளக்கு காத்துல எரியறதுக்குப் போராடிட்டிருந்திச்சு. விளக்குக்குப் பக்கத்தில ஏழெட்டு ஊதுவத்திக் குழாய்ங்க. எரிஞ்சி எரிஞ்சி நெறய சாம்பல் கீழ கெடந்திச்சு. அதப்பாக்க முடியாம மேல அண்ணாந்து பாத்தேன். சாக்கடையில நெளியற புழுங்க மாதிரி நட்சத்திரங்க தெரிஞ்சிது.

காத்து குளுமையா வீசி அடங்கிச்சு. சாவடியில என்னமோ கலவரம். யாரோ ஒருத்தன் கீச்சுக் கொரல்ல படபடன்னு பேசிட்டிருந்தான். காது குடுத்து கேட்டாக்கூட யாருடைய குரல் அதுன்னு தெரியலை. கொஞ்சதூரம் நடந்துபோயி காது குடுத்துக் கேட்டேன். “நடந்து போனது எதுவும் திரும்பி வரப்போறதில்ல. என்னமோ நடந்து போச்சு... தப்ப ஒத்துக்குவோம். செத்த பொணத்த முன்னால வச்சுக்கிட்டு நாம வைராக்கியம் காட்டக் கூடாது”ன்னு ஒருத்தர் சொல்லிக்கிட்டிருந்தாரு. அதற்குப் பதிலா ஒரே நேரத்தில் நாலைந்து பேர் பதில் சொன்னாங்க.

கலாட்டாவுல என்ன சொன்னாங்கன்னு எதுவுமே கேக்கலை. நடக்கப்போறது நடந்துதான் தீரும். எதுக்காக இப்படியே நிக்கணும்னு திரும்பி வந்து லாந்தர் வெளக்குக் கண்ணாடிக் கறைய தொடைச்சேன். வத்திக்குச்சி கிழிச்சு லாந்தர் வெளக்க ஏத்திட்டு அதுலயே சிகரெட்டயும் பத்த வச்சுக்கிட்டேன். லாந்தர் பளபளன்னு மின்னுச்சு. பெரியப்பா சொன்ன யோசனை ஞாபகத்துக்கு வந்திச்சு.

...ஒலகத்தயே ஜெயிச்சவனப்போல கால்வீசி நடந்து வந்த பெரியப்பா, "எல்லாம் முடிஞ்சுபோச்சு, கடவுள் புண்ணியத் தால"ன்னு சொன்னாரு. சங்கடமா இருந்திச்சு. "கமலி ஒத்துக் கிட்டாளா?"ன்னு கேட்டேன். பொறைக்கேறும் அளவுக்கு சிரிச்ச பெரியப்பா "ஒத்துக்காம? அவ்வளவுக்கு நா என்ன ஏமாளியா? மொதல்லயே எல்லாத்தயும் சொல்லிக் கொடுத்திருந்தமில்ல? எப்படியோ ஒத்துக்கிட்டாங்க. அவுங்களுக்கும் அது அவமானம் பாரு"ன்னு சுலபமா சொல்லிட்டு உள்ளே போனாரு. வாசப் படியிலயே நின்னுட்டிருந்த பெரியம்மாவும் சட்டுனு உள்ள போனா. சாமிக்கு நெய் வெளக்கு ஏத்தப்போயிருக்கலாம். பூமி வெடிச்ச மாதிரி இருந்திச்சு எனக்கு. ரொம்ப நேரம் அப்படியே இருந்திச்சு. "குளிர்ல எதுக்காக உக்காந்திருக்கே? உள்ள வா"ன்னு சொல்லிக்கிட்டே மறுபடியும் வந்தாரு பெரியப்பா. சொல்லிட்டு படுக்கப் போய்ட்டாரு. கொஞ்சம் கொஞ்சமா தூறத் தொடங் கிச்சு. கண்ணக் குருடாக்கற இருட்டுல கால வச்சேன். ஒரு கண்டத்திலேருந்து தப்பிச்ச மாதிரி வீடே நிம்மதியா படுத்திட்டிருந்திச்சு...

கமலி பாத்ததுமே மூஞ்சிய மூடிக்கிட்டா. ரொம்ப நேரம் தேம்பிக்கிட்டேயிருந்தப்பறம் நிமுந்து உத்துப்பாத்தா. ஆவேசம் வந்த மாதிரி "போங்க... போங்க... வரவேணாம்"னு சீறினா. தலமுடி கண்டமேனிக்கு கலஞ்சி கெடந்தது. அழுது அழுது செவந்த கண்ணுல பொலபொலன்னு கண்ணீரு தளும்பி நின்னுது. மெதுவா "கமலி"ன்னு கூப்புட்டேன். உதட்டுல சின்னதா ஒரு சிரிப்ப தேக்கி, "நான் பொழச்சிருக்கறனான்னு பாக்க வந்தீங்களா"ன்னு கேட்டா. "உஷ்"னு கையக் காட்டினேன் நானு. "சும்மா எனக்கு பைத்தியம் புடிக்க வைக்காதீங்க. உங்க ளுக்குப் புண்ணியமாப் போகும். இங்கிருந்து போய்டுங்க"ன்னு கேட்டுக்கிட்டே காலப்புடிக்க வந்தா. அவ கையப் பத்திரமா புடிச்சுக்கிட்டேன். அவ பரிதாபமா என்னப் பாத்தா. என் நெஞ்சோட அவ கைய வச்சுக்கிட்டு, "வா, போயிடலாம்"னு சொன்னேன். பதறிப்போயி கைய இழுத்துக்கிட்டா. என்னயே துருதுருன்னு பாத்தா. அவ நாக்கும் உதடும் துடிச்சுது. "நான்

இருக்கற எடத்துலயே என்னோட நீயும் இருப்பே. வேற எதுவும் பேசவேணாம்"னு சொல்லிக்கிட்டே அவ கைகள கெட்டியா புடிச்சுட்டு வெளிய வந்தேன். இருட்டு வெலகி வழி குடுக்கற மாதிரி இருந்திச்சு. எப்படியோ தட்டுத்தடுமாறி தார்ரோட்டுக்கு வந்துட்டோம். எங்க அதிர்ஷ்டம். ஒரு டாக்சி கெடைச்சுது. காரு வெளிச்சத்துல தெரிஞ்ச கருப்புத் தார்ரோட்டுலயே பார்வைய பதியவச்சபடி அசையாம உக்காந்திருந்தா கமலி. ரோடு நெடுக்க வானத்தையே மறைக்கற அளவுக்கு உயரமான மரங்கள். ஏதோ கொகைக்குள்ள போற மாதிரி இருந்திச்சு. "பயமா இருக்குதா கமலி"ன்னு கேட்டேன். திரும்பி என் கண்ணயே பாத்தா. "நீ என்னதான் சொன்னாலும் சரி. நான் செஞ்சது சரின்னுதான் படுது"ன்னு சொன்னேன். எதுவுமே பேசாம என்னயே பாத்தா...

...குளிரத் தொடங்கிச்சு. சலனம் எதுவும் இல்லாத ஆயா வுடைய உடம்பைப் பார்த்தேன். அப்படியே மரக்கட்டையைப் போல. கொஞ்சம்கூட மாறல. ஊதுவத்தியெல்லாம் எரிஞ்சு முடிஞ்சிருந்திச்சு. நெருப்புக்கட்டை மேல சாம்பல் மூடியிருந்திச்சு. வாசல்ல இன்னும் இருட்டு. எழுந்துபோய் நெருப்பக் கெளறி விட்டு, இன்னும் கொஞ்சம் கட்டைய பொளந்து போட்டுட்டு திரும்பி வந்து உக்காந்தேன். பஞ்சாயத்து இன்னும் முடிஞ்ச மாதிரித் தெரியல. பொகைய கக்கிட்டிருந்த கட்டைங்க பத்தி எரியறதப் பாக்க ஆரம்பிச்சேன்.

...ஒரு வாரம் முடியறதுக்குள்ள ஆயாகிட்டேயிருந்து கடுதாசி வந்திச்சு. "நீ செஞ்ச வேலைக்கி இங்க பஞ்சாயத்துகூடி எனக்கு ஊர்க்கட்டுப்பாடு விதிச்சிருக்காங்க. இப்ப தண்ணிக்கும் நெருப்புக்கும் ரொம்பக் கஷ்டம். கண் சரியா தெரியாத எனக்கு ரொம்பவும் சிரமமா இருக்குது. நா என்ன செய்யறது? உன் பெரியப்பாவோ நெருப்பக் கக்கறான். கொடுக்க வேண்டிய கடனுக்காக உனக்குச் சொந்தமான நெலத்த உழுதுக்குவானாம். தன் பேத்திக்குக் கல்யாணம் ஆகலையேன்னு அவனுக்கு வயித் தெரிச்சல். இந்த வயித்தெரிச்சல் புடிச்சவங்க நடுவுல நா எப்படி இருக்க முடியும், சொல்லு. சாகற காலத்துல..." கடுதாசி முழுக்க இப்படி என்னென்னமோ எழுதி இருந்திச்சு. ஆயாவ ஊருக்கே கூப்பிட்டுக்கிட்டு போகலாமின்னு வந்தா, ஊரே கோபத்தோட மொறைச்சுப் பாத்து வாய்ப்பேச்சுகூடப் பேசாம போகறதப் பாத்து சிரிப்பு வந்திச்சு...

மேல இருக்கற நட்சத்திரங்களயாவது பாக்கலாம். ஆனா பயம். பாழாப்போன சாக்கடைப் புழுங்கதான் ஞாபகத்துக்கு வருது- கொசகொசன்னு நெளியுதுங்க. கொழப்புதுங்க. மூச்ச முட்டவைக்குதுங்க. கூடவே பெரியப்பா சொன்ன யோசனைங்

களும் ஞாபகம் வருது. பொறுக்க முடியாம ஆயா உடம்பு கெடந்த பக்கம் பாத்தேன். ஐயோ பாவம்னு தோணிச்சு. என்னபத்தித்தான் நெனச்சுக்கிட்டேனோ, இல்ல ஆயாவப் பத்தித்தான் அப்படி நெனச்சேனோ... ஆயா இப்படி செஞ் சிருக்கக் கூடாது. பன்னெண்டு வருஷமா கமலிகூட பழகி உறவாடி வாழ்ந்தவ. சாகற காலத்துல 'செத்தா என் மண்ணுல தான் சாவேன்'னு அடம் புடிச்சிருக்கக் கூடாது. சாப்பாடு, தண்ணி இல்லாம, தெரியாத கண்ணால மனசுக்குள்ள எதை எதையோ பாத்துக்கிட்டு ஒக்காந்திருக்கறதப் பாத்துட்டு, கமலி தானும் எதயும் தொடாம "கடைசி ஆசை... கூட்டிக்கிட்டு போங்க"ன்னு ஒத்தக்கால்ல நின்னா. பன்னெண்டு வருஷத்துக் கட்டுப்பாட்டை உட்டுக்குடுக்க முடியாதுன்னு அடம் புடிச் சிருக்கணும். பெரியப்பனோட பேச்சு தோரணை எப்பிடி இருக்குமின்னு தெரிஞ்சிக்க ஆர்வமா இருந்திச்சு. 'இது ஒரு முடிவேயில்லாத ஊர்ப் பிரச்சனையாய்டுச்சின்னா..."ன்னு ஒரு சின்னக் கவலயும் வந்திச்சு. குளிருக்கு கை கால்களை உதறிக் கிட்டு லாந்தர் விளக்குல திரிய ஏத்திட்டு திண்ணைக்கு வந்தேன். வீட்டுக்குள்ள ஒரு காட்டடயே அந்த லாந்தர் வெளக்கு உருவாக்கிச்சு. அதப் பாக்கறதுக்கு முடியாம லாந்தர் விளக்க கம்பி கொக்கில மாட்டிட்டு அறைக்குள்ள படுக்கப் போனேன். மறுபடியும் நினைவுகள் புடுங்கித்தின்ன ஆரம்பிச்சுது.

...ஊரு நெருங்க நெருங்க ஊரு பத்தின ஞாபகங்கள். ஆயாவோட தலை என் தோள்மேலே விழுந்து ஊஞ்சல் ஆடிட்டிருந்தது- சின்னப்புள்ள மாதிரி ஆயா சம்பந்தமில்லா எதைஎதையோ பெனாத்திக்கிட்டிருந்தா. ஊர்சேர இன்னும் ஒரு மைல் தூரம் இருக்கற சமயத்தில ஆயோவோட தலை தளக்குனு கலசம் உழுந்த மாதிரி என் மடியில உழுந்திடுச்சு. எனக்குத் தூக்கி வாரிப்போட்டுது. ஆயா ஒடம்பு குளுந்துகிட்டே வந்திச்சு. அப்படியே காரத் திருப்பச் சொல்லிடலாமான்னு ஒரு யோசன வந்திச்சு. சொல்றதுக்கு என்னமோ ஒரு தயக்கம். காரு மெது வாத்தான் போய்ட்டிருந்திச்சு. ஊரு முன்னால போனதும் அங்கயே நின்னுட்டிருந்த நமுக்கு சிக்கண்ணன்கிட்ட யாரு என்னன்னு அடையாளம் சொல்ல வேண்டியிருந்திச்சு. வயசாகிப் பழுத்த பழமா இருந்த அவனுக்கு என் பேரக் கேட்டதும் ரொம்பச் சந்தோஷம். குதிக்காதது ஒண்ணுதான் பாக்கி. விஷயம் கேள்விப்பட்டு அதிர்ச்சியில ஒண்ணும் புரியாம நின்னான். ஆயா அப்படி இப்படின்னு பெரும பேசுனவனத் தடுத்து பெரியப்பாவுக்கு விஷயத்தத் தெரியப்படுத்தச் சொல்லி அனுப்புனேன். ஒறவுக்காரங்க ரொம்ப வருஷங்களா ஒருத்தர

ஒருத்தர் பாக்காம இருந்தா பூச பண்ணிட்டு, எண்ணெய்லதான் மொதல்ல மூஞ்சியப் பாக்கணுமின்னான். மொதல்ல போய் விஷயத்தச் சொல்லிட்டு வான்னு அவன அனுப்புனேன்.

வெளியே யாரோ இருமிக்கிட்டே நடந்து வர்ர மாதிரி இருந்திச்சு. பஞ்சாயத்து முடிஞ்சிருக்கணும். என்ன விஷயமோ, தெரியல. பரபரப்புல சட்டுனு எழுந்து உக்காந்தேன். வந்தவரு வெளிய இருந்தபடியே "இங்க பாருப்பா..."ன்னார். வெளிய வந்தபோது ஊர் எஜமான் சித்தப்பா நின்னுட்டிருந்தாரு. பயத்தோட "என்னாச்சுங்க?"ன்னு கேட்டேன். "நானும் என்னால முடிஞ்சவரக்கும் முயற்சி செஞ்சு பாத்துட்டேன். ஒண்ணும் எடுபடல. ஊரு மானத்தயே எடுத்தவன் அவன். விஷப்பாம்ப யாராவதுகூட சேத்துக்குவாங்களான்னு கறாரா கேக்கறாங்க. உன் பெரியப்பா என்னடான்னா பஞ்சாயத்து முடியறவரக்கும் குண்டு கல்லு மாதிரி வாயே தெறக்காம ஒக்காந்திருந்தான். அதுக்கு மேல என்னால எதுவும் பேச முடியலை"ன்னு சொல்லிட்டு செத்துக்கிடந்த ஆயாவையும் எரிஞ்சிட்டிருந்த நெருப்பயும் அதுக்கப்புறம் மேலயும் பாத்தாரு. "நீங்கள்ளாம் மனுசங்கதானா? போய்த் தொலைங்க இங்கேருந்து" என்று சீறினேன். சித்தப்பா கண்ண அகலமாத் தெறந்து மேலேருந்து கீழவரிக்கும் பாத்துட்டு "யாரு தொலையணும்"ன்னு கண்ணுல நெருப்புப்பொறி பறக்கக் கேட்டாரு. அதுக்கப்புறம் நிதானமா மூச்சுவாங்கிக்கிட்டு மெதுவா சிரிச்சுகிட்டே விடுவிடுன்னு கௌம்பிப் போனாரு. கண்ண அகலமா விரிச்சுட்டு ஒண்ணும் தெரியலைன்னாலும் அப்படியே நின்னுட்டேன்.

இப்படியே நேரம் போய்க் கிட்டேருந்தா எப்படி? ஆயா பக்கம் பாத்தேன். வாசல்ல நெருப்பு வெளிச்சம். அந்த அளவு மட்டும் விட்டுட்டு ஊரயே இருட்டு மூடிட்டிருக்குது. வாசல்ல கண்ட மேனிக்கு எறைஞ்சி கெடக்கற வெறகுக் கட்டைங்களை யெல்லாம் எடுத்து நெருப்பு மேல அடுக்குனேன். திண்ணைக்கு வந்து எல்லாத்தயும் மனசுல வாங்கிக்கற மாதிரி ஒருதரம் நல்லா பாத்தேன். நேரா எறவாணத்துக்கு வந்து அதும்மேல ஏறி உயிர கையில புடிச்சுகிட்டு சுருக்கு மாட்டிக்கிட்டு தொங்கிக்கிட்டிருந்த கழி, கம்புங்கள எல்லாம் பிரிச்சு பிரிச்சுக் கீழ தள்ளுனேன். போதும்ன்னு தோணுனதும் கீழ எறங்கி கம்புங்களயெல்லாம் சின்னச் சின்னக் கட்டா கட்டுனேன். நாலஞ்சிதரமா நடந்து எல்லாத்தயும் உள்ளேயிருந்து வெளிய கொண்டாந்து போடற துக்குள்ள ஒடம்பு வேர்த்து விறுவிறுத்துப்போச்சு. கை, கால், உடம்பு முழுக்க ஒட்டடை புடிச்சு கன்னங்கருப்பாய்டுச்சு. ஆயா, நெருப்பு, எல்லாம் அப்படியேதான்.

எந்தத் திசையையும் பாக்கிவிடாம எல்லாத் திசைலயும் எரிஞ்சிட்டிருந்த நெருப்பு மேல அந்தக் கழி-கம்புகள அடுக்கி வச்சேன். அதுலயும் நெருப்புப் புடிச்சு பாக்கவே பயம் கொடுக்கற அளவு நெருப்பு எரிஞ்சு ஒரே வெளிச்சமாச்சு. ஆயா பக்கமா மெதுவா அடியெடுத்து வச்சேன். ஒரு கணம் நின்னு, அப்பறமா ஆயா தலைக்கு மேல இருந்தா போர்வைய எடுத்தேன். கொஞ்சம் கொஞ்சமா தோல் சுருக்கங்களாலயே ஆனமாதிரி... மெதுவா மொதல்ல இருந்த மாதிரியே போர்வைய இழுத்து மூடிட்டு இன்னும் கொஞ்சம் பக்கத்துல போயி, குளிர்ல விறைச்சுப் போயிருந்த ஆயாவின் உடம்ப சுத்திக் கைகளைப்போட்டு இறுக்கமா புடிச்சு மேல தூக்குனேன். தூக்க முடியாத அளவுக்கு கனமா இருந்திச்சு. கையும் காலும் கடகடன்னு நடுங்கிச்சு. கொஞ்ச நேரம்தான் அப்படி இருந்திச்சு. அப்புறம் ஆவேசம் வந்த மாதிரி கண்ண மூடிக்கிட்டே மேல தூக்கிட்டேன். ஆயாவோட ஒடம்பு என் நெஞ்சுமேல சாஞ்சிட்டுது- எப்படியோ தட்டுத் தடுமாறி நெருப்புக்குப் பக்கத்தில கொண்டாந்து கைப்பிடிய தளர்த்துனதும் பயமா இருந்துச்சு. பூமியே ஒரு தரம் 'கிர்'னு சுத்திட்டு சட்டுனு நின்னமாதிரி. தலைக்குள்ளயும் கண்ணுக்குள்ளயும் வெளிச்சம் நெறஞ்சது மாதிரி இருந்திச்சு. நெருப்பே என்னையும் இழுத்து உள்ள சேத்துக்கும் போல இருந்துச்சு. எப்படியோ சமாளிச்சுட்டு பின்னால போயி நெலகொலஞ்சி ஒக்காந்தேன். கண்ணுல இருட்டு படிஞ்ச மாதிரி இருந்திச்சு. கண் தெறந்தா ஆயாவத் தழுவிக்கிட்ட நெருப்பு நாக்க நீட்டி எம்பக்கத்தில வர மாதிரி இருந்திச்சு. இன்னும் கொஞ்சம் பின்னால நவுந்து நின்னேன். சுத்தியும் இன்னும் கொஞ்சம் கழி, கம்புங்க விழுந்து கெடந்திச்சு. அதயெல்லாம் ஒன்னொன்னா ஆள் உயரத்துக்கு எரிஞ்சிட்டிருந்த நெருப்புல எடுத்து எடுத்துப் போட்டேன். கொஞ்சம் கொஞ்சமா நெருப்பு தணியத் தொடங்கிச்சு. தணிஞ்சு தணிஞ்சு.... அங்க நிக்க முடியல. தட்டுத் தடுமாறி ஓடுனேன். ஊரே என் பின்னால துரத்திக்கிட்டு வரமாதிரி இருந்திச்சு. கொஞ்சநஞ்சம் இருந்த சக்திய திரட்டி வேகவேகமா ஓடுனேன். கால் களச்சுப்போகற வரைக்கும் ஓடுனேன். கண்ணுல இருட்டுப்படியற வரைக்கும் ஓடுனேன். சுத்தியும் கன்னங்கரேல்னு இருந்த இருட்டு காணாம போற வரைக்கும் ஓடுனேன்...

# தத்து

பாதை இரண்டாகப் பிரிந்ததால் ஆனந்தன் உட்கார வேண்டிய தாயிற்று. எந்தப்பக்கம் பார்த்தாலும் ஒரு மனிதமுகம்கூடத் தென்படவில்லை. ஒசூரில் வழிகேட்டதற்கு நேராகப் போகும்படி சொன்னதைக்கேட்டு நடந்து வந்திருந்தான். கொண்டு வந்திருந்த பை அளவு மீறிக் கனத்தது. வலதுகை வலிப்பது போலத் தோன்றியது. கொஞ்சம் பச்சைப் பசேல் என்ற இருந்த இடத்திற்குச் சென்று உட்கார்ந்தான். ஊரிலிருந்து ஸ்டேஷனுக்கு யாரும் வராதது விசித்திரமாக இருந்தது. சிகரெட் ஞாபகம் வந்து பற்ற வைத்துக்கொண்டு சுற்றிலும் பார்த்தான்.

குறுக்கும் நெடுக்குமாய் வளர்ந்து நின்ற மரங்களுக்கு நடுவே வாய்க்கால் மாதிரித் தோன்றும் பாதை, இருபக்கமும் வளைந்து நிற்கிற வேலிகள், புதுவிதமான ஆகாயம். பாழாய்ப் போய்க் கிடக்கிற நிலம்—எல்லாமே புதுசு. அப்பா எழுதி இருந்தது கூட இப்படித்தான். "எல்லாமே புதுசாகத் தோன்றியிருக்கிறது என்று நினைத்துக்கொண்டு வா."

பெற்ற உறவு என்பதற்குப் பொருளே இல்லையோ என்று மீண்டும் யோசனை எழுந்தது. தத்துக் கொடுக்கும்போது ஏழு வயதுச் சிறுவனாம். ஊரை நினைத்துக்கொள்ளும்போது ஒருசில முகங்கள் மட்டும் பேச்சின்றி வெகுதொலைவில் நிற்பதுபோலத் தோன்றும். அதற்கப்புறம் எவ்வளவு முயற்சி செய்தாலும் எதுவும் ஞாபகத்தில் இல்லை. அப்பாவின் கடிதத்தைப் படித்த பிறகு எல்லாரையும் ஞாபகப்படுத்திக்கொள்ள முயற்சி செய்தான். மகனே மகனேயென்று அம்மா புலம்பித் தவிக்கிறாள்... தம்பியின் மனைவி பிரசவத்திற்காகத் தாய் வீட்டுக்குச் சென்றிருக்கிறாள்... தங்கை வயசுக்கு வந்து திருமணத்திற்காகக் காத்திருக்கிறாள்... நான்காவது படிக்கிற இன்னொரு தம்பி படிப்பில் மிகவும் கெட்டி... அப்பாவுக்குப் பணத்தொல்லை. பதினாறு வருஷ காலம் தன்னை மறந்திருந்தவர்கள் இப்படி உருகுவதைக் காண சந்தேகத்தைத்தான் கொடுத்தது. மொத்தத்தில் இப்போது எல்லாவற்றையும் மறக்க வேண்டும். போய் அந்தக் குடும்பத்தோடு ஒன்றிணைந்துகொள்ள வேண்டும். ஊர் முனையைச் சேர்வதற்கு

முன்னால் தன் பழமையனைத்தும் இல்லாமல் போகவேண்டும். கண்திறந்து அவர்களை அப்பா அம்மா என்று எண்ணிக் கொண்டு வளர வேண்டும். வளர வேண்டும் என்று கெட்டியாக மூச்சை இழுத்த வண்ணம் உறுதியாய்ச் சொல்லிக்கொள்ள வேண்டும். சிகரெட்டைத் தூரமாக விசிறியெறிந்துவிட்டு இரண்டு பக்கமும் விரிந்திருந்த பாதைகளை மாறி மாறிப் பார்த்தான். இடதுபக்கப் பாதையில் தொலைவில் ஒரு வண்டி தன் பக்கம் வருவதுபோலத் தெரிந்தது. வண்டிக்காரனின் கவனத்தைத் தன்பக்கம் கவர்பவனைப்போல உற்றுப்பார்த்தபடி நின்றான் ஆனந்தன். வண்டி பக்கத்தில் வந்தது.

வண்டிச் சக்கரங்களின் தடத்தையே பார்த்தபடி உட்கார்ந்து வந்த அனந்துவிடம் வண்டிக்காரன் "அங்க பாருங்க... ஊரு தெரியுது..." என்று சொன்னான். அந்த வார்த்தை அவனை நிமிர்ந்து பார்க்கத் தூண்டியது. வெகுதூரம் வரைக்கும் நீண்டு செல்லும்பாதை, வானத்தைத் தொட்டு நின்ற உயரமான அரச மரங்கள், கண்டும் காணாமல் ஒருசில வீடுகள். ஒரே பார்வையில் அனைத்தையும் உள்வாங்கிக் கொள்பவனைப்போலப் பார்த் தாலும் தெரிந்தது அவ்வளவுதான். ஊர்போய்ச் சேர்ந்ததும் அங்கிருக்கிற மாரியம்மன் கோயிலில் படைத்த பிறகு அப்பா, அம்மா, தங்கை, தம்பிகளின் முகங்களை எண்ணெயில் பார்க்க வேண்டும். அப்புறம்தான் நேரிடையாக அனைவரையும் பார்க்க வேண்டுமாம். இதையெல்லாம் ஒத்துக் கொள்ளத்தான் வேண்டுமா என்று தோன்றியது. "என்னால அதெல்லாம் செய்ய முடியாது" என்றபோது, "எங்கயாவது இப்படிச் சொல்வாங்களா சாமி... பன்னெண்டு வருசமா பாத்துக்கிடாதவங்க மொதல்ல எண்ணெய்ல பாத்தப்பறம்தான் எல்லாமே" என்றான் வண்டிக் காரன். அதற்கப்புறம் எந்தப் பேச்சும் இல்லை. அறுபட்டுக் கொண்டு வரும்யோசனைகளில் மூழ்கியபடி உட்கார்ந்தான்.

...நள்ளிரவு ஒன்று ஒன்றரை மணியளவில் வீட்டை அடைந்தபோது கண்ணீர் சிந்தியபடி உட்கார்ந்திருந்த அம்மா என்னைக் கண்டு கிளர்ந்தெழுந்தாள். 'நல்லது கெட்டதுக்குத் துணையாக இருக்க வேண்டியவன் நீ.. குடித்துத் திரிந்து வெட்கம் கெட்டவன்...' அப்பா செத்ததுக்குக்கூட ஒரு வார்த்தையும் பதில் இல்லை. பதினைந்துநாள் கழித்து வீட்டுக்குத் திரும்பியபோது எல்லா விஷயங்களும் பிடித்தாட்டிவிட்டன. திடுமென இருந்தாற் போலிருந்து அம்மா முகத்தைச் சுருக்கிக்கொண்டு அழுதாள். ஒரு வார்த்தையும் பேசவில்லை. ஒருநாள், "எல்லாத்துக்கும் தடையா இருந்துட்டேன். படிப்ப நிறுத்தியாச்சு. அது போனா போகுதுன்னா, எல்லாத்தயும் விட்டுட்டுக் குடிக்கறது. எங்க

எங்கயோ போறது... அப்பா திதிக்கு நீ இல்லன்னு சொன்னா...” என்று அழத் தொடங்கினாள். அதற்கு அடுத்த நாளே குடித்து விட்டுப் பயந்தவண்ணம் வீட்டுக்கு வந்தேன். வழக்கம்போல அம்மா படுத்திருந்தாள். எழுப்பினாலும் எழுந்திருக்கவில்லை. இதெல்லாம் என்ன என்று தோன்றியது. குழந்தை இல்லாததால் இவர்கள் என்னை மகனாகத் தத்தெடுத்துக்கொண்டது. தத்துக் கொடுத்த அப்பா அம்மா என் பிறப்புக்குக் காரணமாக மட்டும் இருந்துவிட்டு என்னை இல்லை என்று நினைத்துக் கொண்டது...

“எறங்குங்க” என்று சொன்னது காதில் கேட்டாலும்கூட ஆனந்தன் புதையுண்டவனைப்போல உட்கார்ந்துவிட்டான். உடல் முழுக்கப் புழுதியும் வேர்வையும். பயத்தோடு பார்க்கும் போது அரசமரங்கள் பேய்களைப் போல நின்றிருந்தன. வந்த வழி மீண்டும் அதே குகையைப்போலத் தோன்றியது. இந்த மரங்களைத் தொடர்ந்தே ஊர்போய்ச் சேர்ந்து விடலாம். மரங்களின் இடையில் நீளும் பாதை ஊருக்குள் பல முனைகளில் சென்று முடிகிறது. அக்கம்பக்கத்தில் அங்கங்கே சில வீடுகள். மூச்சு வாங்கிக் கொண்டு ஆனந்தன் கீழே இறங்கினான். அரச மரத்தடியில் உட்கார்ந்திருந்தவர்கள் பக்கத்தில் வந்து சுற்றிச் சூழ்ந்து கொண்டதும் மூச்சே நின்றுவிடும்போல இருந்தது. ஒருவர் கையைப் பிடித்து அழைத்துச் சென்று ஒரு மாரியம்மன் கோயிலின் அருகில் உட்காரவைத்தார். கோயில் சுவர்களில் மெழுகிய சாணத்தின் மணம் மூக்கைத் துளைத்தது. சுற்றிலும் ஆட்கள் நிற்பதால் உடல் வியர்த்தது. எங்கும் பீடிப்புகை. ஊது வத்தியின் புகை. குசுகுசுக்கப்படும் பேச்சு. இருமல். மணியடிக்கும் சத்தம் கேட்டது. ‘பூஜை’ என்று பக்கத்தில் உட்கார்ந்திருந்தவன் சொன்னான். ஆனந்தனுக்கு வேர்த்தபடியே இருந்தது.

...அம்மா இறந்தபோது வந்திருந்த நாலைந்து பேர் திவசம் கொடுத்தே ஆகவேண்டும் என்று பிடிவாதம் பிடித்தார்கள். என்னால் அது முடியாது என்றதும் அவர்கள் முகம் திருப்பிக் கொண்டு சென்றார்கள்...

தலையைப் பிடித்துக்கொண்டு உட்கார்ந்த ஆனந்தன் எதிரே பார்த்தான். இடுப்புத் துண்டோடு கருத்திருந்த ஒருவன் வந்து தண்ணீரை வைத்துவிட்டு என்னையே பார்த்தான். உடல் சிலிர்த்தது. உதறிக்கொண்டு முதலில் அமர்ந்திருந்தபடியே உட்கார்ந்தேன். தட்டு நிறைய நெருப்பை எடுத்துவந்து முகத்தின் அருகில் காட்டினான். பல்லைக்கடித்துக்கொண்டு அவன் வேறு பக்கம் திரும்பிக் கொண்டான்.சட்டென அந்தப் பக்கம் ஒருவனும் இந்தப் பக்கம் ஒருவனு மாக நின்று “ம்... திற” என்று கூவினார்கள். மனசுக்குள் கலவரம் படிந்தது. அதற்கு நடுவில்

எண்ணெய் நிரம்பிய பாத்திரம் ஒன்றைக் கொண்டுவந்து வைத்தார்கள். வேகமாக வைத்ததால் பாத்திரத்திற்குள் வைக்கப் பட்ட எண்ணெய் தளும்பித்தளும்பி அடங்கியது. சுற்றிலும் நிறைந்திருந்த ஜனங்களின் மூச்சுக் காற்று மேலே பட்டது. சட்டென்று அனைவரின் பேச்சும் அடங்கியது. தொலைவில் பேசப்படும் பேச்சும் கூடக் கேட்கும் அளவுக்கு அமைதி இருந்தது. என் மூச்சு ஏறித் தாழ்ந்தது.

எண்ணெய்க்குள் மெல்ல மெல்ல ஒரு முகத்தின் நிழல் தெரிந்தது. "உன் அப்பா" என்றார்கள். "என் அப்பா" என்று சொல்லிக்கொண்டேன். "உன் முகத்தையும் காட்டு" என்று சொன்னதும் கேட்டது. முன்புறம் குனிந்து முகத்தைக் காட்டி விட்டு நிமிர்ந்தேன். அதற்கப்புறம் சரக் சரக்கென்று சத்தம் கேட்டது. எண்ணெய்ப் பரப்பில் முகத்தின் நிழல் தெரியத் தொடங்கியதும் "உன் அம்மா" என்றார்கள். உற்றுப்பார்த்து "என் அம்மா" என்று சொல்லிக் கொண்டேன். "உன் முகத்தையும் காட்டு" என்று சொன்னது காதில் விழுந்தது. அம்மாவின் தலையில் நீண்ட கூந்தல் இருந்தது. அதற்கப்புறம் அந்த முகம் மறைந்து வேறொரு முகம். "தம்பி". உருண்ட முகக்காரன். சிறிது நேரம் கழித்து இன்னொரு முகம் தெரிந்தபோது "தங்கை" என்றார்கள். அவள் உதடுகள் துடிப்பதை நிழலில் பார்க்க முடிந்தது. இன்னொரு இளைய முகம். எல்லாருக்கும் ஒருமுறை முகத்தைக் காட்டி நிமிர்த்திக் கொண்டேன். இவ்வளவுக்கப்புறம் திரைவிலக்கிக் கொள்ளப் பட்டது. திரை விலகியதுமே ஒரு வயது முதிர்ந்த பெண் ஒருத்தி கண்ணீர்க் கோலத்துடன் நின்றிருந்தாள். "என் செல்லமே" என்று அவள் ஓடிவந்து என்னைக் கட்டிப் பிடித்துக் கொண்டாள். அம்மா... தலை நிமிர்ந்து பார்த்தேன். கண்ணீர் சொரியும் கண்களைச் சந்தித்தபடி ஒருபுறம் இருந்த அப்பா, தங்கை, தம்பிகளை அடையாளம் கண்டு பிடித்திருக்கக் கூடும். சின்னத்தம்பி ஓடோடி வந்தான். "கூப்புட்டுக்கிட்டுப் போங்க" என்று முக்கியஸ்தராக இருந்தவர் சொன்னார். எந்தப் பக்கத்தில் பார்த்தாலும் சின்னதும் பெரியதுமான முகங்கள். மேலே எழச் செய்து அழைத்துக் கொண்டு போனார்கள். வீட்டுக்குச் சென்றதும் ஆரத்தி எடுத்து "வலதுகால உள்ள வச்சு வாப்பா" என்றார்கள். உள்ளே சென்றதும் அனைத்துக்கும் மேலாக தூக்கம் அலைக்கழித்தது.

தூக்கம் தெளிந்தபிறகு நடந்ததெல்லாமே மயக்கமூட்டு வனவாகத் தோன்றியது. ரொம்ப நேரத்திற்கப்புறமும் வந்து நிற்கும் முகங்கள். காதுக்குள் ரீங்கரிக்கும் ஓசைகள். அவற்றிட மிருந்து தப்பித்துக்கொள்ள எவ்வளவுதான் முயற்சி செய்தாலும்

முடியவில்லை. எல்லாமே கனவில் நடப்பதைப் போல இருந்தது. என்னென்னவெல்லாம் நடந்துவிட்டன என நினைத்தபடி சுற்றிலும் பார்வையிட்டான். சற்றே தொலைவில் சின்னத்தம்பி இந்தப் பக்கம் முதுகைக் காட்டியபடி படுத்துக்கிடந்தான். புகைக்க வேண்டும் போலத் தோன்றியது. பைக்குள் அங்கும் இங்கும் தேடியும் கிடைக்கவில்லை. எல்லாமே எங்கெங்கே இருக்கின்றன என்பது மெல்ல மெல்லப் புரியத் தொடங்கியது. தம்பியின் பக்கம் பார்த்து "ஷ்" என்றான். அவன் ஓடோடி வந்து கண்களை உருட்டியபடி நின்றான். ஆனந்தன் அவன் தோள்களைத் தட்டிக்கொடுத்து, "பைக்குள் சிகரெட் டப்பா இருக்குது. எடுத்துட்டு வரியா" என்று கேட்டதற்கு "ம்" என்றபடி ஓடினான் பையன். நொடிப் பொழுதுக்குள் சிகரெட் பெட்டியையும் வத்திப் பெட்டியையும் கொண்டுவந்து கொடுத்தான். அதை வாங்கிக்கொண்ட ஆனந்தன், "வெளிய கொஞ்ச தூரம் போயிட்டு வரலாமா" என்று எழுந்தான். அண்ணனின் கையைப் பிடித்துக்கொண்டு தம்பி நடந்தான்.

வீடுகளின் ஜன்னல்களிலிருந்து கண்கள் தன்மீது பதிந்திருக்கின்றன என்பது அவனுக்குப் புரிந்தது. கும்பலாய் இருந்த இடமெல்லாம் குசுகுசுப் பேச்சு. சில சமயங்களில் மொத்தமாகக் கூடிப் பார்த்தார்கள். அப்போதெல்லாம் நேராக நடப்பதே ஆனந்தனுக்குச் சிரமமாக இருந்தது. ஊருக்கு வெளியே வந்து பெரிய ஏரிக்கரையில் உட்கார்ந்து நிம்மதியாக மூச்சு விட்டான். சிகரெட் பற்றவைத்துக்கொண்டு எல்லாவற்றையும் ஒரு பக்கத்தில் இருந்து பார்த்தான். எல்லாமே மறந்துபோனதைப் போலத் தோன்றியது. செவ்வானத்தைக் கண்டு பூரித்த தம்பியின் இளைய முகம் அதே மண்ணில் அந்தத் தருணத்தில்தான் அரும்பியதைப் போல இருந்தது.

இன்னொரு சிகரெட்டைப் பற்றவைத்த ஆனந்தன், "நீபோய் வெளையாடு, போ" என்றதும் தம்பிக்காரன் வேறு பக்கம் நடந்தான். போகும் அவனைப் பார்த்தபடியே ரொம்ப நேரம் உட்கார்ந்திருந்தான். தனக்குள் மூழ்கியபடியே இருந்துவிட்டான். தம்பிக்காரன் கையைப் பற்றி இழுத்து, "அம்மா கூப்புடறாங்க" என்று சொன்னபோது சுற்றிலும் இருள் கவிந்திருந்தது. அம்மா தொலைவிலிருந்து கைவீசி அழைத்துக் கொண்டிருந்தாள். அருகில் சென்றதும், "பொழுது இருட்டுனப்பறம்தான் வீட்டுக்கு வரணுமா?" என்று பார்த்தாள். "சரி.. சரி நடங்க" என்றபடி கூடவே வந்தாள்.

நள்ளிரவு வரைக்கும் ஆனந்தனுக்குத் தூக்கம் இல்லை. தவித்தான். நிறைய சிகரெட்டுகளைப் புகைத்தான். சுவரில்

இந்தப்பக்கத்தில் இருந்து அந்தப்பக்கம் வரை பார்த்த இடமெங்கும் ஏதேதோ தாவி வருவதைப்போலத் தோன்றியதால் இரண்டு கைகளாலும் தலையைத் தாங்கிப் பிடித்துக்கொண்டு கவிழ்ந்தவாக்கில் படுக்கையில் படுத்தான்.

...ஆட்டம், சாப்பாடு, படிப்பு. ஒன்றாகவே வளர்ந்தோம். ஓட்டலுக்குள் சென்று ஒரு மூலையில் உட்கார்ந்தோம். "நீ என்னதான் சொன்னாலும் சரி, எனக்கு என்னமோ சரின்னு தோணல" என்று சந்து சொன்ன வார்த்தை கோபத்தை மூட்டியது. சிகரெட் பற்றவைத்துக்கொண்டே "என்ன விஷயம்' என்றேன். சட்டென்று 'அப்படியென்றால்...?" என்று நிறுத்திவிட்டு "குடிச்சுட்டு ரோட்டுல அலையறது" என்று சொல்லிவிட்டு அளப்பதைப்போலப் பார்த்தான்.

அவ்வளவாக அதைப் பொருட்படுத்தாமல் "அப்புறம்?" என்றேன். விசித்திரமான வகையில் என்பக்கம் பார்வையைத் திருப்பி, "வேறென்ன...? அப்பா செத்ததுக்கு உன்னால காரியம் கூடச் செய்ய முடியல. அது போவட்டும். அம்மா என்னமோ சொன்னாங்கங்கறதுக்காக வீட்ட விட்டு வெளிய வந்துடறதா? அவங்களுக்கு அது மானப் பிரச்சனை. ஒழுங்கா நல்லபுள்ளயா ஒரு கல்யாணத்தப் பண்ணிக் கொண்டு வீட்டுல இரு. முடிஞ்சா படி. இல்லன்னா அதுவும் வேணாம். சும்மா இரு" என்றான். ரொம்பவும் உஷ்ணமாகி விட்டான்.

மெதுவான குரலில் "உன் புத்திமதி எனக்கொன்றும் வேணாம்" என்றேன். என்னை உற்றுப் பார்த்தவன் சட்டென்று எழுந்து நின்று எதுவும் பேசாமல் தடதடவென்று நடந்து போனான். அவன் போன திசையையே பார்த்தபடி உட்கார்ந்த சமயத்தில் அவன் மீண்டும் அருகில் தோன்றினான். நெருங்கி வந்து மேசையின்மேல் கையை ஊன்றியபடி, "எனக்குக் கோபம் வந்தாலும்கூட உன் நல்லதுக்குத்தான் சொல்றேன். மத்தவங்க என்ன நெனச்சுக்கறாங்க தெரியுமா" என்றான். ரொம்பவும் வேதனையோடு இருப்பதைப்போலத் தோன்றியது. "தெரியும்" என்றேன். "அப்பாவுக்கு காரியம் செய்யலை. சொன்ன பேச்சு கேக்கறதில்ல. குடிக்கறான். பொம்பள பழக்கம் வேற. என்னதான் இருந்தாலும் வளர்ப்புப்புள்ளைதான... இவ்ளோதான்." சந்து உதட்டைக் கடித்துக் கொண்டு தலையைக் கவிழ்த்தபடி முன்பு போலவே விடுவிடுவென்ற நடந்து சென்றான். மீண்டும் அவன் வரக்கூடும் என்று தோன்றவே இல்லை. ஸ்டிராங்கான காப் பிக்குச் சொல்லிவிட்டு ஒரு சிகரெட்டை எடுத்துப் பற்றவைத்துக் கொண்டு வெளியே பார்த்தால் பஸ்களும் லாரிகளும் ரிக்ஷாக் களும் ஓடிக்கொண்டிருந்தன...

வீட்டில் இருந்தவர்கள் எல்லாரும் திண்ணையில் உட்கார்ந்திருந்தார்கள். கையைப் பற்றி "வெளியில போவலாம் வா" என்று கூப்பிட்டான் தம்பி. எழுந்திருக்க விருப்பமில்லை. இதுவரைக்கும் மூன்று நான்கு முறை மட்டுமே பெரிய தம்பி யோடு பேசியிருந்தான். எல்லாவற்றிற்கும் 'ஆங்' 'உம்'. அத்தோடு சரி. தான்பட்ட கஷ்டங்களை ஒரு புராணத்தைப் போலச் சொன் னாள் அம்மா. "உன்னக் கொடுக்கும்போது நெருப்பு முன்னால சத்தியம் பண்ணி வாங்குனாங்க, அவங்க சாகற வரைக்கும் உன்னப் பார்க்கக்கூடாதுன்னு" நிறையச் சொன்னாள். தங்கைக் காரி வந்து அங்கே எல்லாம் என்னென்ன, எப்படி, எதெது என்று மெல்ல விசாரித்தமுறை மிகவும் பிடித்திருந்தது.

வீடு முழுக்கக் கலகலப்பாக இருந்தது. ஆனந்தனுக்குக் கலவரமாக இருந்தது. தங்கை உள்ளுக்குள் சிரித்துக் கொண்டாள். அருகில் அழைத்துக் கேட்டபோது ஒரு மாதிரி உதட்டைச் சுழித்துவிட்டுச் சென்றாள். அப்பா அழைத்தபோது பக்கத்தில் சென்று உட்கார்ந்தாள். "கடவுள் கருணை. நான் நெனச்ச மாதிரியே நடந்திடுச்சு. இந்த வட்டாரத்துலயே பெரியவர் அவரு. வீடு, நெலபுலன் நிறைய இருந்திச்சு. தங்கம் மாதிரி ஒரே பொண்ணு. என்னமோ பெரிய மனசு வச்சு உன்னத் தத்தெடுக்க ஒத்துக்கிட்டாங்க."

ஆனந்தனுக்குக் குழப்பமாக இருந்தது. உடம்பில் ஒரு வேகம் எழுந்தது. மூச்சு வாங்குவதை நிறுத்தி உறுதியான குரலில், "இதெல்லாம் முடியாது" என்றபடி எழுந்து நின்றான். அப்பா "உக்காருப்பா..." என்றபோதும் கேட்கவில்லை. ஆனந்தன் பேசும் முறையைக் கண்டு, "நீ ஒண்ணும் சின்னப்புள்ளை இல்லை. மூத்த புள்ளை. உனக்கும் கீழ மூணு புள்ளைங்க இருக்குது. நீயே பாரு" என்று ஒரே மூச்சில் சொல்லி முடித்தார். குழப்பத்தில் பேசவும் முடியாமல் நிற்கவும் முடியாமல் ஆனந்தன் திரும்பிக் கூடப் பார்க்காமல் அறைக்கு நடந்தபோது, பின்னாலயே அம்மா வருவதைப் பார்த்துக் கோபம் வந்தது. சட்டெனப் பின்னால் திரும்பி, "தூக்கம் வருது. போ" என்று உரத்த குரலில் சொன்னான். எல்லாரும் அடங்கினார்கள்.

மறுநாள் ஆனந்தன் போகவே இல்லை. என்ன ஆயிற்று, ஏன் என்றெல்லாம் தங்கை மிகவும் வருத்தத்தோடு விசாரித்தாள். அப்பா முகத்தையே காட்டவில்லை. தம்பிக்காரனும் தொலை விலேயே இருந்தான். அம்மா வந்தபோதெல்லாம் ஆத்திரம் பொங்கப் பேசிவிட்டுச் சென்றாள். "பணக்காரப் புத்தி இருந் திச்சுன்னா, அங்கயே இருக்க வேண்டியதுதான... அப்பறம் எல்லாம் உன் இஷ்டம்." சகித்துக்கொள்ளவே முடியவில்லை

தலையை உடைத்துக்கொள்ளும் அளவுக்கு. அம்மா வந்து நேருக்கு நேர் பார்த்து, "இப்படியெல்லாம் நீ இருந்தா என்னப்பா அர்த்தம்? ஒரு வார்த்தகூட பேச மாட்டற. நாங்க ஒன்னும் உன் கழுத்துமேல உக்காந்திரலை" என்றாள். வெறுமையாகப் பார்த்தான் ஆனந்தன். அவள் மீண்டும் பேச்சைத் தொடங்கினாள். சட்டெனக் குறுக்கிட்டு "சும்மா போம்மா" என்றான். அம்மா முறைத்துவிட்டுப் போனாள்.

வெளியே கால்வைத்தபோது அவனைப் பார்த்த அம்மா, "இன்னையோட நீ வந்து ஒன்பது நாளு ஆய்டுச்சு" என்றாள். ஆனந்தனுக்கு ஒன்பது மாதங்கள் என்று சொல்ல வார்த்தைகள் எழுந்தன. வெளியே செல்லப் பிடிக்கவில்லை. பின் கதவைத் திறந்துகொண்டு, தோட்டத்துக்கு வந்தவன் சிவப்புப் புடவை கட்டிக்கொண்டு செடிகளுக்குத் தண்ணீர் ஊற்றிக் கொண்டிருந்த தங்கையைக் கண்டான். சிரிக்க முயற்சி செய்தான். நிழல் இருந்த பக்கம் சென்று உட்கார்ந்து சிகரெட் பற்ற வைத்தான்.

தங்கையைப்போல எப்போதும் குலுங்கிச் சிரிக்கத் தெரியவில்லை. தம்பியைப்போல இந்த மண்ணிலேயே பிறந்தவனைப் போல பொருந்தி இருக்கவும் முடியவில்லை. அப்பா, அம்மா போலவும் இருக்க முடியவில்லை. அவர்கள் அனைவரைப் பற்றியும் ஒன்றும் நினைக்கத் தோன்றவில்லை. இவர்கள் அனைவருமே இந்த மண்ணுக்கு ஏற்றவண்ணம் வார்க்கப்பட்டவர்கள் எனத் தோன்றியது.

தங்கை 'ஸ்ஸ்' என்று கூப்பிடுவது கேட்டது. திரும்பிப் பார்த்தபோது அருகில் வரும்படி சைகை செய்தாள். நெருங்கிப் போனதும் கையை நீட்டி "பார்" என்றாள். ஒரு சிறுமி அழகாகத் தலைவாரிக்கொண்டு தண்ணீர் மொண்டு கொண்டிருந்தாள். தங்கை கீச்சுக்குரலில் 'இவளே... இவளே' என்ற கூப்பிட்டாள். இவள் கூப்பிடுவதைப் பார்த்து பயந்துகொண்டு தலையைக் கவிழ்த்தபடி விடுவிடுவென்று சென்றுவிட்டாள் அவள்.

"இவளத்தான் ஒனக்குப் பாத்து வச்சுருக்குது. புடிச்சிருக்கா?" என்றாள். போகும் அவளைப் பார்த்துவிட்டு, "புடிச்சிருக்குது" என்றான். உதட்டைக் கடித்தபடி சிரித்தாள் அவள். "அப்புறம் ஏன் கல்யாணம் செஞ்சிக்க மாட்டான்னு அறைக்குள்ள உக்காந்திருக்கே" என்றாள். "கல்யாணமே வேணாம்" என்று மேற்கொண்டு பேசாமல் முதலில் உட்கார்ந்திருந்த இடத்துக்குச் சென்று உட்கார்ந்தான் ஆனந்தன். தங்கை செடிகளுக்குத் தண்ணீர் ஊற்றத் தொடங்கினாள். சிறிது நேரத்திற்கப்புறம் "ஸ்..ஸ்" என்று சத்தமெழுப்பினாள். உட்கார்ந்த இடத்தில் இருந்தபடியே, "நீயே வா இங்கே" என்றான். அவள் அருகில்

நடந்து வந்தாள். "என்ன?" என்று கேட்கும் வகையில் அவன் முகத்தைப் பார்த்தாள்.

"ஒரு விஷயம் கேப்பேன். தப்பா நெனச்சுக்கக் கூடாது"

எதுவும் பேசாமல் பார்த்தாள்.

"என்னப் பாத்தா உனக்கு அண்ணன் மாதிரி தோணுதா?"

"நீ எனக்கு அண்ணன்தான..."

"அது சரி... ஆனா அண்ணனா நினைக்க முடியுதா..."

தங்கை தடுமாறினாள்.

"இது என்னப்பா.. நீ கேக்கறதே புரியலை."

அப்படியே உட்கார்ந்திருந்தார்கள்.

"உன்கூட உக்காந்திட்டிருந்தா வேல ஆயிடுமா?"

எழுந்து நின்று சிரித்தபடி கேட்டாள்.

அதிகாலை எழுந்து அண்ணனைப் பார்ப்பதற்காக வந்த தம்பியின் பார்வையில் படும் வகையில் ஒரு கடிதம் விழுந்து கிடந்தது. அருகில் சென்று எடுத்துப் படித்தான். "உங்கள் மகன் உங்களைப் பொறுத்தவரையில் இல்லை." அப்பா ஓடோடி வந்தார். அம்மாவும் தாவி வந்தாள். பாயைச்சுற்றி நிறையச் சிகரெட் துண்டுகள் நசுக்கப்பட்டு கிடந்தன. அப்பா, அம்மாவின் பக்கம் பார்த்தார். அம்மா சட்டென அறைக்குள் சென்று பெட்டியின் பூட்டைத் திறந்து பார்த்து "பணம் ஒண்ணும் காணாமப் போகல" என்று வேகமாகச் சொன்னாள். பெரிய தம்பி வந்து "என்ன என்ன?" என்றான். வீடு முழுக்க ஒரு சலசலப்பு எழுந்தது. தங்கை இன்னும் தூக்கத்திலிருந்து விழிக்காமல் இருந்தாள்.

# தாரின் வருகை

வண்டிகள் மட்டுமே வந்து போகத் தகுதியான சின்னக் குறுகலான பாதை ஊரிலிருந்து தொடங்கி மூன்று மைல் தூரத்துக்கு நீண்டு பஸ்களின் நடமாட்டம் மிகுந்த பெரிய பாதையில் இணைந்து கொள்ளும். பெரிய பாதையிலிருந்து அதே வழியில் திரும்பும்போது இரு பக்கங்களிலும் அடைத்துக்கொண்டு நின்றிருக்கும் கள்ளிச் செடிகளைக் காணலாம். ஊர் வரைக்கும் அதே நிலைமை. பேய்கள் வாழும் அரசமரங்கள் வரைக்கும் நீளும் அப்பாதை மூன்று பிரிவுகளாகப் பிரிந்து ஊருக்குள் விரிகிறது. கிளைப்பாதைகளில் அக்கம் பக்கத்தில் நெருக்கியடித்து முளைத்துக்கொண்டிருந்த சிறு குடிசைகளின் தோற்றம் எடுப்பாகத் தெரிகிற்து. எந்தவொரு சிறப்புமற்ற கிராமம் அது. எண்ணிப்பார்த்தால் அதிகபட்சமாக எண்பது வீடுகள் இருக்கும். எல்லா இடங்களிலும் இருப்பது போன்ற ஒரு சிறிய ஓட்டல்கூட அங்கு இல்லை. இதிலிருந்தே ஊரின் நிலைமையைத் தெரிந்துகொள்ளலாம். நஞ்சன் கோட்டிலோ அல்லது மைசூரிலோ எஸ்.எஸ்.எல்.சி படித்து முடித்த நாலைந்து ஆட்களும் அந்த ஊரில் இருக்கிறார்கள். அவர்கள் பெயர்கள் லட்சுமண், ராஜப்பா, மாது, சம்பு.

இனிமேற்பட்ட கதைக்கும் இந்தப் பெயர்களுக்கும் சம்பந்தம் உண்டு. ஊர் படேலுக்கு (கிராமத் தலைவர்) இந்தப் பெயர்கள் கட்டோடு பிடிப்பதில்லை. இன்றைக்குப் பிறந்த இந்தப் பிஞ்சுகள் தலையெடுத்துத் தமக்கு எதிராக நடமாடுவதைச் சகித்துக் கொள்ள இயலவில்லை. இந்தக் காலத்தைப் போல அப்பாவின் காலத்தில் இல்லை. மேல்சாதி, கீழ்சாதி வித்தியாசம் எதுவும் இன்றி என்னமோ ஒரே தாயின் வயிற்றில் பிறந்தவர்கள் போல புலையனான லட்சுமணோடு சேர்ந்து மற்றவர்களும் திரிவதை முன்னிட்டு, அவரவர்களின் அப்பாக்களுக்கும் விஷயத்தைத் தெரியப்படுத்தி வசை வாங்கித்தந்தார். அப்பாக்களின் வார்த் தைகளை மதிக்கிறவர்களா அவர்கள்? அந்த விடலைகள் என்றைக்காவது கூட்டாகக் கையில் அகப்பட்டால் பஞ்சா யத்துக்கு இழுத்துக் கோவணத் துணியோடு கம்பத்தில் கட்டி உதைக்கிற ஒரு சந்தர்ப்பத்துக்காகக் காத்துக்கொண்டிருக்கிறார்!

என்றாவது ஒருநாள் அவர்கள் அகப்படுவார்கள் என்கிற நம்பிக்கையும் இருக்கிறது.

### பாதை போடுவதற்கு ஆர்டர்

இந்தச்சூழலில் ஊரில் பாதை போடுவதற்காக மேலிடத்தில் இருந்து ஆர்டர் வந்தது. படேல் பூரித்துப்போனார். ஊருக்குள் செய்தி நெருப்பைப்போல பரவியது. இத்தருணத்தில் ஏழெட்டு வருஷங்களுக்கு முன்னால் ஊருக்கு வருகை தந்த அமைச்சரைப் பற்றியும், படேல் அவர்களே முன்னின்று அமைச்சருக்கு மாலை அணிவித்து எலுமிச்சம்பழம் கொடுத்து வரவேற்றதையும், இந்தக் கிராமமும் ஒரு ஊராகத் தலைநிமிர்ந்து வாழவேண்டுமானால் ஒரு பாதை போடவேண்டியது அவசியம் என்றும், அதற்கு மதிப்புக்குரிய அமைச்சர்தான் மனம் வைத்து ஒத்துழைக்க வேண்டும் என்று பேசியதையும் ஞாபகப்படுத்திக்கொள்ளலாம். உடனே நஞ்சன்கோட்டுக்குப் புறப்பட்டுப்போன படேல் சாயங் கால வேளையில் திரும்பினார். பாதை போடுவதற்கான காண்ட்ராக்ட் படேலுக்கே கிடைத்திருக்கிறது என்றும், மாதக் கணக்கில் இனிமேல் வேலைக்காக அங்கே இங்கே அலைய வேண்டாம் என்றும், அரசாங்கப் பணத்தில் மிச்சப்படுத்தி ஊருக்குக் கோயில் ஒன்று கட்டித்தர இருக்கிறார் என்றும் குடிசை வாசல்கள் எங்கும் பேச்சாகிவிட்டது.

### ஊரின் தோற்றம்

அதெல்லாம் நடந்து பல நாள்களாகி விட்டது. இப்போது ஊரே முழுக்க மாறிவிட்டது. முன்பு மிக உயரமாய் வளர்ந்து வானில் கிளை பரப்பிய அரசமரங்கள் எல்லாம் தரைமட்டமாகிவிட்டன. முன்பு மரங்களின் பின்னணியில் ஊரைப் பார்த்தவர்களுக்கு இப்போது மரங்களற்று ஊரே வெறிச்சென்று தோன்றியது. மரங்கள் இருந்தன என்பதற்கான அடையாளமே இப்போது இல்லை. அவை இருந்த இடத்தில் இப்போது ரோடுரோலர்கள் ஓடுகின்றன. ஆள் உயரத்திற்கான சக்கரங்கள் உருண்டு கற்களை நசுக்கிக்கொண்டு முன்னேறும் ரோலர்கள் விடும் புகையைக் கண்டு பள்ளிச்சிறுவர்களிலிருந்து பெரியவர்கள் வரை ஆச்சரியத்தில் தம்மை மறந்து நின்றார்கள். அங்கே எழுந்த சத்தம் ஊரைத் தாண்டியும் கேட்டது. தொலைவில் இச்சத்தத்தைக் கேட்பவர்களுக்கு முதலில் என்னமோ ஏதோ என்று பயம் வரும். நெருங்கிப் பார்க்கும்போதுதான் அதே ஊர், அதே மக்கள் என்று புரியும். அடையாளம் தெரியாத அளவுக்கு அவர்கள் உருவமே மாறிவிட்டது. புழுதியும் தாரும் பூசிக் கறுத்து அலைந்தார்கள்.

ஓரமாக ஓரிடத்தில் கூடிய பத்துப்பதினைந்து பெண்கள் தலையில் முந்தானையைச் சுற்றிக்கொண்டு ஜல்லி உடைத்துக் கொண்டிருந்தார்கள். கும்பலில் ஒருத்தி சின்னக் குழந்தையைத் தூங்க வைத்துக் கொண்டிருந்தாள். மற்றவர்கள் உற்சாகத்தில் போடும் சத்தம் தொலைவில் வேலை செய்பவர்களையும் தாண்டிக் கேட்டது. ஒரு பர்லாங் தூரத்திற்கு வேலை நடந் திருந்தது. தரைமட்டம் அளந்து பார்ப்பது, மேடான இடங்களை இடித்துக் கரைப்பது, அப்புறம் நீர் தெளிப்பது, ஈரத்திலேயே கைவண்டியில் வைத்து இழுத்து வந்த பதப்படுத்தப்பட்ட ஜல்லியையும் தாரையும் கொட்டுவதுமாக வேலை மும்முரமாய் நடந்துகொண்டிருந்தது. முன்னும் பின்னுமாய் நகர்ந்து சரி செய்தது ரோலர். நெருப்பு உலையின்மேல் தாரையும் ஜல்லி யையும் பொடி மணலையும் மிஷின் கலந்து கொண்டிருந்தது. எல்லாவற்றிற்கும் மிஷின்கள். எதையென்று சொல்வது? எல்லாமே கன்னங்கரேலென வேஷம் பூண்டு நின்றன.

ரோட்டை அளக்கும்போது படேல் கைகட்டி நின்றிருந்தார். திடுமெனப் பின்னால் திரும்புவதும் கொஞ்சதூரம் முன்னால் நடந்து திரும்புவதுமாய் இருந்தார். திருப்தியாய் வேலை நடந்துகொண்டிருப்பதை அவர் முகக் குறிப்பிலிருந்து ஒரு குழந்தையால்கூடப் பார்த்துச் சொல்லமுடியும்.

## கையிலும் வாயிலும் தார்

எந்த ஊரானாலும் விடலைகள் ஒரே மாதிரிதான். பள்ளிக்கூடம் விட்டதும் நேரே அங்கே கூடிவிடுகின்றனர். யாராவது பெரிய வர்கள் பார்க்க நேர்ந்தால் தொலைவில் விலகிப் பறக்கிறார்கள். மீண்டும் அவர்களின் தலை மறைந்ததும் கூடிவிடுகிறார்கள். இருட்டத் தொடங்கியபிறகும்கூட அவர்கள் வீட்டுக்குத் திரும்புவ தில்லை. பெரியவர்களே அங்கே வந்து முதுகில் நாலு அடி கொடுத்து தம்முடனேயே வீட்டுக்கு அழைத்துச் செல்ல வேண்டும். அப்படி வருபவர்களும் பாதை உருவாகும் விதத்தை ஒரு நிமிடமேனும் நின்று பார்க்காமல் செல்ல மாட்டார்கள். வீட்டுக்குத் திரும்ப பிள்ளைகளின் கையைப் பிடித்து இழுத்தால் அவர்களின் கைகளில் இருக்கும் கறுப்புத்தாரின் கறை இவர்களின் கைகளிலும் ஒட்டிக்கொள்ளும்.

ரங்கப்பா என்பவன் தன் மகனை இழுத்துக்கொண்டுபோக வந்தபோதுதான் இது நடந்தது. கோபம்கொண்ட அவன், "இதத் தான் பள்ளிக்கூடத்துல வாத்தியார் சொல்லித் தராறா" என்று சொல்லிக்கொண்டே நான்கு அடிகள் கொடுத்தான். பெரிசாய் குரலெடுத்து அழ ஆரம்பித்த அவன் பிள்ளை அழுவதை

நிறுத்தவே இல்லை. பொறுமை எல்லை மீறியதும் வாயிலேயே இரண்டு அடி கொடுத்தான் ரங்கப்பா. இன்னும் வேகமாய் அழுதபடி அந்தப் பிள்ளை தன் கையை வாய்ப்பக்கம் கொண்டு போனது. கையில் இருந்த தார் வாயிலும் ஒட்டிக்கொண்டு வாய் திறக்கமுடியாத நிலை உருவானது. அழுகையும் நின்றது. இருட்டவும் தொடங்கியது.

இன்னொரு விஷயம் என்னவென்றால் யம்க்கா என்பவள் வேலைமுடித்து எழும்போது தாரை கருப்பு உருண்டையாக்கி எடுத்துச்செல்வது பழக்கம். உடைப்புக்கண்ட பானையில் தாரை வைத்து அழுத்தியதும் ஒழுகுவது நின்றுவிட்டது என்று இன்னொருத்தி சொன்னாள். இதற்குப் பின்பு இப்படிப்பட்ட சந்தர்ப்பங்கள் நேர்ந்த போதெல்லாம் முதலில் அங்கே தார் வந்தது. அல்லது ஏற்கெனவே சேர்த்து வைத்திருப்பவர்களிடம் கடன் வாங்கிக் கொள்ளப்பட்டது.

### வாசகர் கடிதத்துக்குப் பதில் கடிதம்

பெரிய ரோலரை இயக்கும் ஓர் ஆபரேட்டர் அங்கே உண்டு. நஞ்சன்கோட்டில் இருந்து தினந்தோறும் அவன் வந்து செல்வான். அன்றைக்கு அவன் கையோடு கொண்டு வந்திருந்த செய்தித் தாளில் தம் ஊரைப்பற்றியும் செய்தி வந்திருப்பதை அறிந்த எல்லாரும் வேலைகளை எல்லாம் அப்படி அப்படியே போட்டு விட்டு ஆபரேட்டரைச் சுற்றி நின்று கொண்டனர். படேலுக்கு ஏகக்கோபம். வெளியாகி இருந்த செய்தி இதுதான்:

"ஐயா, எங்கள் ஊரில் பாதை வேண்டும் என்பதற்காக அரசாங்கம் மனமிரங்கி நிதி ஒதுக்கி வேலை நடந்து கொண்டிருப்பது என்னமோ உண்மைதான். ஆனால் இந்த வேலையைக் காண்ட்ராக்ட் எடுத்திருக்கும் படேல் இதிலிருந்து பணத்தை மிச்சப்படுத்திக் கோயில்கட்ட இருப்பதாகத் தெரிய வந்துள்ளது. எதுவாக இருந்தாலும் இது அரசாங்கப் பணத்தைத் தவறான வழியில் பயன்படுத்துவதே ஆகும். இது நடக்காமல் தடுக்க வேண்டும் என்று சம்பந்தப்பட்டவர்களிடம் கேட்டுக் கொள்கிறோம்.

—பாதிக்கப்பட்டவர்கள்

### நியாயம்பேச அழைப்பு

அன்றைய தினம் ரோடுவேலை நடந்ததென்றும் சொல்ல முடியாது; நடக்கவில்லை என்றும் சொல்ல முடியாது. நடந்தாலும் கூட வழக்கமான சந்தடி எதுவுமின்றி நடந்ததென்று சொல்லலாம்! என்ன ஆகுமோ என்று ஊரில் எல்லாரிடமும் பயம் பரவியது.

மாலை வேளை நெருங்க நெருங்க பயத்தின் அடர்த்தி அதிகமானது. வீட்டுக்கொருவராக பஞ்சாயத்துக்கு நியாயம் பேச வரவேண்டுமெனத் தண்டோரா அடித்துச் செய்தியைச் சொல்லச் செய்தார் படேல். அப்பொழுதுதான் இருள் கவியத்தொடங்கிய நேரம். ஒருவர் முகம் அடுத்தவர்க்குத் தெரியாது. எரியும் திரியை இழுத்து அணைத்ததும் விளக்கு அணைந்து குடிசைகளில் இருள் கவிந்தது.

## பஞ்சாயத்து

பஞ்சாயத்து மேடையில் லாந்தர் விளக்கு புகையுடன் எரிந்து கொண்டிருந்தது. இதற்கும் தமக்கும் எந்தச் சம்பந்தமும்இல்லை என்பதுபோலச் சிலர் அப்போதே படுத்துத் தூங்கிவிட்டார்கள். ஒவ்வொருவராய் கூட்டம் சேர்ந்தது. கூட்டம் அதிகமாக அதிக மாகப் பேச்சுச் சத்தமும் அதிகமானது.

சிறிது நேரத்தில் படேல் அங்கு வந்து சேர்ந்தார். நடுவில் உட்கார்ந்துகொண்டார். லாந்தர் விளக்கு வெளிச்சம் நேராக அவர் முகத்தில் விழுந்தது. அவரது முகத்தில் வேர்வை படர்ந் திருப்பதைப் பார்க்க முடிந்தது. தூரத்தில் உட்கார்ந்திருந்தவர் களைப் பீடி வெளிச்சத்தில் பார்க்கலாம். அவ்வளவு கூட்டம்.

| | |
|---|---|
| ஒருவன்: | ஆரம்பிங்களேம்பா... |
| இன்னொருவன்: | எல்லாருக்கும் தெரிஞ்ச விஷயம்தான. இன்னும் எத ஆரம்பிக்கிறது. பூஜை செய்ய வேண்டியதுதான் பாக்கி. |
| ராஜப்பா: | என்னண்ணா, அப்படிச் சொன்னா என்ன அர்த்தம்? |
| இன்னொருவன்: | அர்த்தமெல்லாம் ஒங்களுக்குத்தான தெரியும். நாங்க என்ன பள்ளிக்கூடத்தக் கண்ட ஜனங்களா? |
| கணக்குப்பிள்ளை: | கொஞ்சம் சும்மா இருங்கப்பா. நீங்க பேசுங்க படேல்... |
| படேல்: | பேசறதுக்கு என்ன இருக்குது, சொல்லுங்க. |
| கணக்குப்பிள்ளை: | லெட்டர் போட்டு ஊரு மானத்த அழிச் சவங்க நீங்கதான்னு எல்லாருக்கும் தெரியும். ஒத்துக்கிட்டிங்கன்னா நல்லது. (லட்சுமண், ராஜப்பா, சம்பு, மாது ஆகியோர் இருக்கும் திசையைப் பார்த்தார் கணக்குப்பிள்ளை. 'அப்படித்தானே' என்கிற மாதிரி அவர் தலை அசைந்தாடியது. சுற்றிலும் பேச்சுச் சத்தம் அதிகமாய்க் கேட்கிறது.) |

படேல்: அதில் என்ன அநியாயத்த நீங்க கண்டு புடிச்சீங்க? (படேலின் பேச்சுச் சத்தம் மட்டுமே கேட்கிறது. மற்றவர்கள் அமைதி யாகப் பார்க்கிறார்கள்)

ராஜப்பா: எந்தப் பணத்தயோ எடுத்து எதுக்காகவோ செலவு செஞ்சா அநியாயம்தானே. (சத்தம் எழுகிறது. கணக்குப்பிள்ளை அமைதி காக்கும்படி சைகை செய்கிறார். சலசலப்பு அடங்குகிறது.)

ஒருவன்: உங்களுக்கெல்லாம் கடவுள் கிடவுள்னு எதுவுமே கெடையாதா?

இன்னொருவன்: இருந்தா இப்படி ஒரு வேலையை இந்தப் பசங்க செய்வானுங்களா?

மற்றொருவன்: போதும் போதும்.. சும்மா இருங்கப்பா. ஆளாளுக்கு எதுக்குப் பேச்சு?

அடுத்தவன்: புடிச்சு நாலு சாத்து சாத்துங்கய்யா.. தானா சரியாவும்...

ராஜப்பா, சம்பு, சம்புவின் தந்தை: யார் அது? வாங்க, வந்து அடிங்கப்பா... அதயும் பாத்துடலாம்.

படேல்: (குரல் உயர்த்தி) நீங்க செஞ்சதெல்லாம் ரொம்ப ரொம்ப சரி... போதுமா..

சம்பு: நீங்க செய்யறதுதான் ஒங்களுக்குச் சரி.. அதில் என்ன பிரச்சன?

படேல்: என்னய்யா, அவ்வளவு திமிராப் பேசறீங்க.. அவ்வளவு எளக்காரமா நெனச்சீட்டங்களா என்ன?

சட்டெனக் கையை முறுக்கிக்கொண்டு எழுந்தார் படேல். வேகத்தில் லாந்தர் தலை இடித்துக் கீழே விழுந்து கண்ணாடி யெல்லாம் உடைந்து, விளக்கு அணைந்தது. பஞ்சாயத்தில் இருந்து எழுந்து வெளியேற எல்லாரும் பரபரத்தார்கள். கண நேரம் நடந்த இந்தச் சம்பவத்திற்குப் பிறகு எல்லாமே நின்றுவிட்டது.

## ஒசூரின் புதிய விஷயம்

ஊரே இன்னும் உறக்கத்தில் ஆழ்ந்திருந்தது. நேற்று இரவு நடந்ததைப் பற்றிக் கனவில் மூழ்கி இருக்கக் கூடும். கனவைக் கலைப்பதைப்போலப் பக்கத்தில் இருந்த ஓசூரைச் சேர்ந்தவன். அந்த ஊர் வழியே நடந்து சென்றான். அவன் விட்டுச்சென்ற வார்த்தைகள் ஊர்த்தெருக்களில் பரவிவிட்டது.

"ஐயா, நான் ஒசூரைச் சேர்ந்தவன். எங்கள் ஊரில் ஒரு கல்கத்தாக்காரி இருந்தாள். ஊர் வயசுப் பிள்ளைகளை மயக்கிக் கெடுத்துக்கொண்டிருந்தாள். அவளுக்கு எத்தனையோ பேர் எடுத்துச் சொன்னார்கள். ஆனால் அவளுக்கு அவளுடைய காரியமே பெரியதாக இருந்தது. திட்டிக்கூடப் பார்த்தார்கள். ஒன்றும் மசியவில்லை. கடைசியில் பஞ்சாயத்துக்கூட்டி அவளை இழுத்து வந்தார்கள். அங்கும் அவள் செருக்குடன் பேசினாள். கோபம் கொண்டவர்கள் அமைதி இழந்தார்கள். அவள் துணியைப் பற்றி இழுத்து நிர்வாணமாக்கிப் புளிய மிலாரால் அடித்துத் துவைத்தனர்.

"அப்போதும் அவள் சும்மா இருக்கவில்லை. அதே கோலத்துடன் போலீஸ் ஸ்டேஷனுக்குச் சென்றாள். நடந்ததையெல்லாம் சொன்னாளாம். வேனில் வந்து இறங்கிய போலீஸ் அங்கிருந்த பெரிய மனிதர்களையெல்லாம் தள்ளிக்கொண்டு போனது. அடுத்து நடந்த கதையைப் பற்றி ஒரு விவரமும் தெரியவில்லை."

நேற்று இரவு நடந்த சம்பவத்தோடு ஒசூரின் இந்த விஷயமும் சேர்ந்துகொண்டு ஊரில் பரபரப்பு ஆரம்பித்தது. ஆளாளுக்கு என்னென்னமோ பேசினார்கள்.

## இரவோடு இரவாகப் பள்ளத்தில் ஊற்றிய தார்

விஷயம் அதோடு முடியவில்லை. காய்ச்சிய தார் டிரம்கள் ஊரின் முன்னால் வைக்கப்பட்டிருந்தன. காலையில் பார்க்கும்போது ஒன்றுகூட அங்கே இல்லை. தேடிக்கொண்டு போனால், ஊருக்கு வெளியே ஒரு பெரிய பள்ளத்தைச் சுற்றித் தார் டிரம்கள் கவிழ்க்கப்பட்டிருந்தது தெரிந்தது. அகலமாய் வாய் திறந்து கிடந்த டிரம்கள் கொஞ்சம் கொஞ்சமாய்த் தாரைப் பள்ளத்தில் ஒழுகும் படி கிடந்தன. கறுப்புத்தார் கோடாக இறங்கிக் கொண்டிருந்தது. வெயில் ஏறஏறத் தார் உருகி வழிந்தது. சுற்றி நின்று பார்த்துக் கொண்டிருந்தவர்கள் பார்த்தபடியே நின்றிருந்தார்கள். பார்க்காதவர்கள் கும்பலைத் தலையால் முட்டி விலக்கியபடி முன்னால் வந்தார்கள். கண்களில் கருமை படர்ந்தது. யாரும் பேசவில்லை.

படேலும் பேசவில்லை. ஒருவன் படேலை நெருங்கி, "நீங்க சரின்னு ஒரு வார்த்தை சொல்லுங்க. அவனுங்கள ஒரு வழி பண்ணிடறேன்" என்றான். உதட்டைக் கடித்தபடி நின்றாரே தவிர, படேல் பேசவில்லை. அங்கிருந்து நேராக போலீஸ் ஸ்டேஷனுக்குச் சென்றார்கள். சாயங்காலம்தான் திரும்பினர். மறுநாள் காலை விசாரணைக்காகப் போலீஸ்காரர்கள் வருவார்கள் என்றும், அடுத்து என்ன நடக்குமென்பது குறித்து யாராலும் சொல்லமுடியவில்லை என்றும் தெரிய வந்தது.

## பள்ளிக்கூடம் சென்றவன் திரும்பவில்லை

ஒன்றன்பிறகு ஒன்றாக நடந்த சம்பவங்கள் ஊரையே இருட்டுக்குள் தள்ளிய தருணத்தில் இன்னொரு சம்பவமும் நடந்தது. சாயங்காலம் எல்லாரும் வீடு திரும்பிய நேரம் தெருவில் ஆள்நடமாட்டம் கூடஇல்லை. அந்நேரம் ஆகியும் ரங்கப்பனின் பையன் மட்டும் வீட்டுக்குத் திரும்பவில்லை. நண்பகலுக்கு வந்து சாப்பிட்டுவிட்டுப் பள்ளிக்குப்போன பிள்ளை. ஆசிரியரைப் பார்த்து விசாரித்தார்கள். வீட்டுக்குக் கிளம்பிப்போனதைத் தானே கண்ணாரக் கண்டதாய்ச் சொன்னார் ஆசிரியர். லாந்தர் விளக்கு எடுத்துக்கொண்டு எல்லாருடைய வீட்டுக் கதவுகளையும் தட்டி விசாரித்தாயிற்று. எல்லாருமே "பார்த்தேன்" என்றுதான் சொன்னார்கள். அவன் விளையாடக்கூடிய வீதி, ஏரி, தோப்பு எல்லா இடங்களிலும் பார்த்தாயிற்று. இப்படி ரொம்ப நேரம் கழிந்தது. அச்சிறுவனின் தாயாருடைய அழுகைக் குரல் சந்தடியடங்கிய ஊரில் நடுஇரவைக் கடந்தபிறகும் ஒலித்துக் கொண்டிருந்தது.

### விசாரணை

அதிகாலை வேளையில் போலீஸ் வேன் வெகு சிரமத்திற் கிடையே ஊருக்கு வந்து சேர்ந்தது. படேலைக் கூப்பிட்டு அனுப்பினார் இன்ஸ்பெக்டர். படபடப்புடன் வந்து சேர்ந்தார் படேல். எல்லாரும் ஊருக்கு வெளியே தார் நிரம்பிய பள்ளத்தை நெருங்கினர். அவர்களின் பார்வை ஓரிடத்தில் நிலைத்தது. ரங்கப்பாவின் மகனுடைய கால்கள் தாரில் அமிழ்ந்திருந்தன. இரண்டு கைகளும் தார் டிரம்மில் ஒட்டிக்கிடந்தன. கை, கால், முகம் என்று எல்லாப் பாகங்களிலும் கறுத்த தார் அடர்ந்திருந்தது. அருகில் நெருங்கிப் பார்த்தபோது அச்சிறுவனின் உடலுக்குள் உயிர் இயங்கிக்கொண்டிருப்பது தெரிந்தது.

# மூடலசீமையில் கொலை கிலை முதலியன

## I

கொலைக்கும் கொள்ளைக்கும் மூடலசீமை பேர்போன ஊர் என்பது மிகவும் பிரபலமான விஷயம். அந்த ஊர்க்காரர்கள் மிகவும் முரடர்கள் என்று யாரைக் கேட்டாலும் சொல்வார்கள். அந்த ஊருக்கு அருகிலேயே இன்னொரு ஊர் இருக்கிறது. அங்கே ரங்கப்பா என்பவன் இருந்தான். அவனை ரங்கன், ரங்கப்பா, ரங்கசாமி என்று தத்தம் விருப்பப்படி அந்த ஊர்க்காரர்கள் அழைத்து வந்தார்கள். அவனுடைய அம்மா, அப்பா எந்தப் பக்கத்தைச் சேர்ந்தவர்களோ என்னமோ. ஆனால் அவன் மிகச் சிறிய பிள்ளையாய் இருந்த காலத்திலிருந்தே அந்த மண்ணிலேயே ஓடியாடி வளர்ந்தவன். அவனுடைய அப்பாவுக்கு அப்பாவின் காலந்தொட்டு சொத்து என்பதே இருந்ததில்லை. ஒரு குடிசை, ஒரு மனைவி, ஆறேழு வயசுள்ள ஒரு குழந்தை. அவ்வளவுதான் அவனுடைய சொத்து. அதாவது, கொண்டுவந்தால் உண்டு. இல்லையெனில் இல்லை. அவனுக்கு நினைவு தெரிந்த நாள்முதல் அந்த ஊர் கௌடரின் நிலத்தில் வேலை செய்துவந்தான். அவன் செய்யும் ஊழியத்தைப் பார்த்து விட்டு மற்றவர்கள் "கௌடரின் குடும்பத் தூண் நிக்குது பாருங்க" என்று சொல்வதுண்டு. அதேபோல் அவனது குடிசையும் அவன் மனைவியும் மகனும்கூட அவன் தோள்பலத்தை நம்பித்தான் இருந்தார்கள். ஆனால் அவன் அப்படியெல்லாம் நினைத்துக் கொள்ளவில்லை. "கௌடர் கண்ணைத் தெறந்து பாத்தாலே போதும், வயிறு கலங்குது" என்று சொல்வான் அவன்.

ரங்கப்பாவின் குடிசை, ஊரிலிருந்து கொஞ்சம் தள்ளி இருக்கிறது. அங்கேயே அவன் நிலைகொண்டு விட்டான். அவன் எதிரில் மகனின் கிழிந்த கால்சட்டையை ஊசிநூல் கொண்டு

தைப்பதில் முழுகியிருந்தாள் அவன் மனைவி. குரங்குக் குட்டி யைப்போல அவளுடனேயே ஒட்டிக் கொண்டிருந்தான் அவளுடைய ஏழு வயது மகன். பொழுதடைவதற்கு இன்னும் கொஞ்சம் நேரமிருப்பினும் அவன் குடிசை கூடாரம்போல இருந்ததால் அதற்குள்ளேயே இருள் கவியத் தொடங்கிவிட்டது. திடுமென யாராவது உள்ளே நுழைந்தால் இவர்கள் இருப்பது யார் கண்ணுக்கும் தெரியாது. இருட்டைக் கிழிப்பதைப்போல யாராவது பார்த்தால்தான் அவனும் அவன் மனைவியும் மகனும் தெரிய வருவார்கள். அங்குமிங்கும் தேடிக் கொண்டு வந்த செத்தைகளை வைத்து ஒரு மூலையில் அடுப்புப்பற்ற வைப்பாள் அவன் மனைவி. அந்த வெளிச்சம்தான் குடிசைக் குள் நாலுபக்கங்களிலும் பரவும். "மழைக்காலம் வரப்போகுது. படுக்கறதுக்கு வழிஇல்ல. கொஞ்சம் வைக்கோல் கொண்டு வந்து போடுங்க" என்று அவள் சொல்லச் சொல்ல அவனும் "ம்..ம்.." என்று சொல்லிக்கொண்டே இருந்தானேயொழிய கொண்டுவந்த பாடில்லை. கடைசியில் கேட்பதை அவளும் கைவிட்டாள்.

ரங்கப்பா தன் பையைத் தடவிப்பார்ப்பது வழியாக அந்தக் குடிசைக்குள் அசைவு தொடங்கியது. கணவனின் தடுமாற் றத்தைப் புரிந்துகொண்ட அவன் மனைவி, தன்னோடு ஒட்டி யிருந்த குழந்தையைக் கீழே படுக்கவைத்துவிட்டு பீடி பற்றவைக்க நெருப்பு கொடுக்கலாம் என்று எழுந்தாள். முன்னும் பின்னும் ஆடிக்கொண்டிருந்த குழந்தையின் கழுத்து அப்போது ஆட்டம் எதுவுமின்றி அமைதியாய்ப் படுத்திருந்தது.

குழந்தையின் பக்கம் பார்த்தபடியே, "என்ன உன் பிள்ளைக்கு சாயங்காலமே தூக்கம் புடிச்சுட்டுது" என்றான்.

அவன் மனைவி, "ஒரு டவுசர் வேணுமின்னு அழுதுட்டே தூங்கிட்டான்" என்று சொல்லி நிறுத்திவிட்டு நெருப்பை எடுத்துவந்து அவன் முன் நீட்டினாள். "அடுத்தவாரம் சந்தைக்குப் போனா ஒண்ணு வாங்கிட்டுவா" என்றாள். அதற்கு அவன் சரி என்றும் சொல்லவில்லை. இல்லை என்றும் சொல்லவில்லை. அதற்குள் எவ்வளவு தேடியும் கிடைக்காத பீடியை எண்ணி எரிச்சலுடன் 'தூ' என்றான். "இல்ல. நெருப்ப எடுத்துட்டுப் போ" என்றான். முனகிக்கொண்டே நெருப்பை எடுத்துச் சென்றுவைத்துவிட்டு பழைய இடத்தில் பழைய நிலையிலேயே உட்கார்ந்தாள்.

மகனின் பக்கம் பார்த்தபடியே "ஏதாவது சாப்புட்டானா?" என்று கேட்டான்.

"மத்தியான மிச்சம் சாப்ட்டுது" என்றாள் அவள். "செய்யற துக்கு என்ன இருக்குது" என்று முகத்தைச் சுருக்கிக் கொண்டு

சொல்லவேண்டிய அவசியம் எதுவும் இல்லை. அவன் வாசல் பக்கம் பார்த்தபடி உட்கார்ந்துவிட்டான். மீண்டும் திரும்பிய போது மனைவி தன்னையே பார்த்தபடி இருந்தது புரிந்தது. அவளை அவன் பார்க்கத் தொடங்கியதுமே வேறு பக்கம் பார்வையைத் திருப்பிக்கொண்டாள். “போய் கௌடரயாவது பாத்துட்டு வரேன்” என்று எழுந்தான் அவன்.

## II

நஞ்சன்கூட்டுக்குப் போயிருந்த கௌடர் திரும்பிவிட்டாரோ இல்லையோ என்கிற சந்தேகம் ரங்கப்பாவுக்கு இருந்தது. போனவாரம் ‘நர்ஸம்மாவ வேற ஊருக்கு மாத்தியிருக்காங்க’ என்று ஒரே பேச்சாக இருந்தது. இப்போது கௌடர் திரும்பி வந்தால் அவள் மாற்றல் விஷயம் என்ன ஆனது என்று தெரியும்.

ஒரு வருஷத்துக்கு முன்னால் இந்த ஊருக்கு ஒரு நர்ஸ் வேண்டும் என்று மேலே இருப்பவர்களோடு வாதாடி வரவழைத்துக் கொண்டவர் அவர்தான். கிராமத்தில் கௌடரைப் போன்றவர்கள் மிகவும் முக்கியமானவர்கள் என்பதால், இவ் விஷயத்தை மற்றவர்கள் சகித்துக் கொண்டனர். முதன்முதலில் நர்ஸம்மா இந்த ஊருக்கு வந்தபோது அவள் கிறிஸ்துவ மதத்தைச் சேர்ந்தவள் என்பதால் அவளுக்கு வீடு தரக்கூட யாரும் முன்வரவில்லை. கௌடர் தம் வீட்டுத்திண்ணையில் இருந்த அறையையே வாடகை எதுவும் வேண்டாம் என்று சொல்லி விட்டுக்கொடுத்தார்.

அவள் வந்ததுமே அந்த ஊரோடு மிகவும் அந்நியோன்ய மாகிவிட்டாள். அதற்கப்புறம் அந்த ஊர்மக்கள் சாதி வித்தியாசம் இன்றி அவளைப்போல ஆக வேண்டுமென்று ஆசைப்படத் தொடங்கினார்கள். சரி, அது இருக்கட்டும், இன்று ஊருக்கே விளக்கு வரும் நாள். அதற்குக் காரணகர்த்தா கௌடர். வாரத்தில் ஒருநாள் அவர் ஊரில் இருந்தால் அதுவே பெரிய விஷயம். அவர் போகும் இடங்களில் எல்லாமே தாமாகவே வேலைகள் முளைத்துக் கொள்ளும். இதனால் கௌடர் வந்திருப்பாரோ, மாட்டாரோ...

கௌடர் வந்திருந்தால் பெரிய வீட்டுத் திண்ணையில்தான் உட்கார்ந்திருப்பார். அவர் உட்கார்ந்திருக்கும் தோரணை பார்க்கிறவர்கள் கண்களில் சட்டெனப் பட்டுவிடும். ஒருவாரத்திற்கு

முன்னால் நடந்ததைப் பார்க்கலாம்: வழக்கமான தோரணையில் உட்கார்ந்திருந்தார் கௌடர். அவர் முன்சென்ற ரங்கப்பா உடலை வளைத்துக் குனிந்து வழக்கம்போல நின்றான். நான்கு சேர் சோளத்தைக் கொண்டு வந்த கௌரவ்வா முகத்தைத் திருப்பிக்கொண்டு போனாள். அதைக்கண்டு ரங்கப்பாவின் முகம் வாட்டம் கொண்டது. கௌடர் உறுதியான குரலில், "இனிமே அறுவடை வரைக்கும் கேக்க வரக் கூடாதுடா" என்று சொல்லி விட்டு உள்ளே சர்ரென்று சென்றுவிட்டார். திரும்பும்போது கௌடரின் வார்த்தையும் கௌரவ்வாவின் போக்கும் ரணம் போல மனசை அழுத்தி வருத்தம் உண்டாக்கியது.

இன்று எந்த முகத்தை வைத்துக்கொண்டு அவரைக்கண்டு கேட்பது என்பது ஒவ்வொரு அடி எடுத்து வைக்கும்போதும் கேள்வியாக எழுந்து குடைந்தது. பசியோடு படுத்துக்கிடக்கும் குழந்தை, முகம் வெளுக்க, வாய்ப்பேச்சுகூட இல்லாமல் இருக்கும் மனைவி இருவரும் அவன் மனசுக்குள் சித்திரமாக எழுந்து வதைத்தார்கள். பிறந்ததிலிருந்தே எவ்வளவுதான் உழைத்தாலும் இன்னும் வயிறு நிறையச் சாப்பிட இதுவரைக்கும் வழி பிறக்கவில்லை. அங்கே உழைக்க வேண்டும். இங்கே கொடுக்க வேண்டும். கொடுத்ததை வாங்கி வந்து வயிற்றுப் பாட்டைக் கவனித்துக்கொள்ள வேண்டும். அப்புறம் கண், வாய், கை எல்லாம் இருப்பதுதான். அதைவிட்டுப் பிழைக்க என்ன வழி இருக்கிறது? கேட்டால் இல்லை என்றுதான் சொல்லவேண்டும். ஆனால் ஒருவிஷயம்—பூமி இரண்டாகப் பிளந்து ஒருமுறை இருக்கிற எல்லாவற்றையும் வயிற்றுக்குள் விழுங்கிவிட்டால் எவ்வளவோ நிம்மதி என்று வாழ்நாள் முழுக்க நினைத்துக் கொண்டாலும் அப்படி ஏதும் நடக்கவில்லை. நானும் நீங்களும் இதுவரை கண்டதுவரைக்கும் அப்படி நடந்ததுமில்லை.

## III

கணவன் எழுந்துபோனபிறகு என்ன செய்வது என்று புரியாமல் வெறுமனே உட்கார்ந்திருந்தாள் பார்வதி. அப்போது எல்லா இடங்களிலும் இருள் அடர்ந்து வந்தது. அருகிலேயே படுத்திருந்த மகன் எழுந்து இருட்டில் தடுமாறி அழத் தொடங்கினான். அவன் தலையைத் தடவித் தந்தபடி "என்ன ராஜா.. என்னப்பா.. எதாச்சி கனவு கண்டியா?" என்றாள்.

அவன் கண்ணைத் திறந்து வேறுபக்கம் பார்த்தான். அம்மா எதிரில்தான் இருந்தாள்.

'ம்...' என்றபடி தலையாட்டினான் ராஜா.

"என்னப்பா பார்த்தே, சொல்லு" என்றாள்.

அவன் முகததைச் சுருக்கிக்கொண்டு "பாரும்மா. பாரும்மா. படேல் சம்பப்பா இருக்கறானில்ல, அவன் வந்து என்ன ராஜான்னு கூப்புட மாட்டானாம்" என்றான்.

பார்வதி "எதுக்காம்" என்று கேட்டாள்.

ராஜா, "ஸ்கூல் விட்டதுமே சம்ப்பா அப்படிச் சொன்னான்" என்றான். "நீங்கள்ளாம் பறையங்கடா. அதுக்குத்தான் 'உன்ன ராஜான்னு கூப்புடமாட்டன் கீஜான்னுதான் சொல்வேன்'னு சொன்னான்மா" என்றான். அம்மா தன் கேள்விக்கு என்ன பதிலைச் சொல்லக்கூடும் என்று எதிர்பார்த்துக் கண்களை அகலமாக விரித்தான்.

பார்வதி அவன் கழுத்தைத் தடவித் தந்தபடி, "நீ புத்தி சாலிப்பா. அந்தப் பசங்க பேச்சுக்கெல்லாம் போவாத" என்று சொல்லிவிட்டு வேறு எதுவும் சொல்லத் தோன்றாதவளாக அவன் முதுகைத் தடவித் தந்தபடி உட்கார்ந்தாள்.

அவள் அருகில் நெருங்கி உட்கார்ந்த ராஜா, அவளைத் தழுவிக் காதருகில் வாயை வைத்துக்கொண்டு, "இங்க வா. நா ஒரு விஷயம் சொல்றேன்" என்றான். பார்வதிக்கு அவன் பேசும் முறையைக் கேட்டுச் சிரிப்பு வந்தது. "அது என்னப்பா சொல்லு" என்றாள் அவள்.

"அதாம்மா... எங்க புது வாத்தியாரப் பாத்தியா?"

"ம்..."

"அவரும் நம்ம சாதிதானாம்"

"அது எனக்கும் தெரியும்."

"ஐயோ, உனக்கும் தெரியுமா" ஆச்சரியத்தில் உறைந்துபோய் "அப்பறம் அப்பறம்" என்று ஆரம்பித்தான்.

"அப்பறம் என்ன..."

"அதான்... அவரு" என்றான்.

"ம்..."

"பெரிய வாத்தியார் திண்ணையில..."

"...ம்"

"அவரு கிளாஸ்லயே..." என்று இழுத்தபோது அவள் 'உம்' கொட்டவில்லை. "அது என்ன... சொல்ல வர்றத சரியா சொல்லுப்பா" என்றாள்.

அவன் தடுமாற்றத்துடன், "அதான்... அவுரு கிளாஸ்லயே தண்ணி புடிச்சுக் குடிக்கறாரு. அப்பறம் அவரு உக்கார்ற

எடத்துலயும் உக்கார்றாரு" என்று சொல்லி நிறுத்தி அம்மாவின் முகத்தில் ஏதாவது மாற்றம் தெரிகிறதா என்று பார்த்தான்.

"அதுவும் எனக்குத் தெரியும்" என்றாள் அவள்.

அவள் அப்படிச் சொன்னதுமே உற்சாகத்தையெல்லாம் இழந்து அழும் நிலைக்கு வந்துவிட்டான் அவன். "சீ.. போ.. உனக்கு எல்லாமும் தெரியுது" என்று அம்மாவின் கழுத்தைப் பிடித்துத் தொங்கிக்கொண்டு ஊஞ்சலாடத் தொடங்கினான்.

எங்கே அவன் பசிக்கிறது என்று சொல்லி அழத் தொடங்கி விடுவானோ, அப்படி அழுதால் என்னப்பா செய்வது சிவனே என்று நினைத்தபடி அவனைக் கொஞ்ச ஆரம்பித்த பார்வதி, "இல்ல ராஜா இல்ல.. நீ சொன்னப்போதான் அம்மாவுக்குத் தெரிஞ்சிது. நீ ரொம்ப புத்திசாலி" என்றாள்.

# IV

திரும்பினால் வாத்தியார் வீடு வந்துவிடும் என்னும் நிலையில் 'ஐஸா.. ஐஸா...' என்னும் குரல் ரங்கப்பாவின் காதில் விழுந்தது. என்ன அது என்று பார்க்கும் நோக்கத்துடன் சிறிது தூரம் முன்னே வந்து பார்த்தால் ஏழெட்டு பேர் வாத்தியார் வீட்டு முன்னால் விளக்குக்கம்பம் நட்டுக் கொண்டிருந்தார்கள். ஒருவன் அங்கிருந்தபடியே "வா ரங்கா" என்று கையை அசைத்துக் கூவினான்.

"எல்லாம் ஊரு வேலதான்" என்று மனசுக்குள் நினைத்தபடி அங்கு சென்றான். போனதுமே ஒருவன் "ஒரு கை பிடி" என்று கேட்டுக்கொள்ள ரங்கப்பா தோள் கொடுத்து நின்றான். ஒவ்வொரு அடியாக 'ஐஸா.. ஐஸா..' என்று சொன்னபடி நகர்ந்து நகர்ந்து பள்ளம் இருக்கிற இடத்தைச் சென்று அடைந்தபோது எல்லாருக்கும் வியர்த்திருந்தது. எல்லாரும் கைகளை உதறிக் கொண்டு மேலும் கீழும் மூச்சு வாங்கியபடி நின்றார்கள்.

எதிரில் சாஸ்திரி வாத்தியார் வீடு இருந்தது. மூன்று நாட்களாக வயிற்றுக்கு உணவு இல்லாததால் ரங்கப்பாவுக்குப் பிரக்ஞை தப்புவது போல இருந்தது. "தண்ணி.. தண்ணி..." என்றபடி அந்தப் பக்கம் பார்த்தபோது வாத்தியார் அங்கேதான் உட்கார்ந்திருந்தார். அவர் பக்கம் பார்த்தபடி புது வாத்தியாரும் உட்கார்ந்திருந்தார். அவர் கையில் சிகரெட் புகைந்தபடியிருந்தது. அழகாகத் தலைவாரிக்கொண்டிருந்தார். வெளுத்த வேட்டியும்

சட்டையும் உடுத்தி இருந்ததால் அவருடைய தோற்றத்திலும் ஒருவிதப் பொலிவு இருந்தது. கல்யாணம் எதுவும் நடந்திருக்க வில்லை. அவரைப் பார்த்தபடி ரங்கப்பா அருகில் சென்றான்.

''என்ன ரங்கப்பா எப்படி இருக்கே...'' என்று சாஸ்திரி வாத்தியார் கேட்டார்.

"இப்படி இருக்கேன் பாரு சாமி" என்றான். "கொஞ்சம் குடிக்கறதுக்குத் தண்ணி வேணும் சாமி"

அவர் சற்றே உரத்த குரலில்—''இங்க பாரு சாரதா... கொஞ்சம் தண்ணி வேணும். ரங்கனுக்கு குடிக்கறதுக்கு" என்று வார்த்தைகளை நிறுத்தி நிறுத்திச் சொன்னார். அக்கணமே திரும்பிப் புதிய வாத்தியார் பக்கம் பார்த்து, "இங்க பாருங்க... நம்ம ரங்கப்பா விவசாயத்துல பெரிய ஆளு." என்ற வண்ணம் ரங்கப்பாவை ஒருமுறை திரும்பிப் பார்த்துவிட்டு, ''அப்புறம் என்ன ரங்கப்பா.. இந்த வருஷம் மழை, வெளைச்சல்லாம் எப்படி இருக்கும்?'' என்று கேட்டார்.

''எப்படிச் சொல்ல முடியும் சாமி... எல்லாம் அததும் இஷ்டம்'' என்று சொல்லி நிறுத்திப் பின்னர் தொடர்ந்தான் "போனவருஷம் பாதிக்குப் பாதி கைக்கு வரலை சாமி. இதுல அடுத்தவங்க நெலத்துல ஏதோ கூலி நாழி செஞ்சி பொழைக் கறவங்க நாங்க எங்க போய் நிக்க முடியும் சாமி" என்றான். அப்போதே இந்த வார்த்தையை எதற்கப்பா சொன்னோம் என்று எண்ணிக் கொண்டான்.

பேச்சு எதுவும் இல்லாமல் எல்லாரும் சற்றே மௌனமாக இருந்தார்கள். அப்போது சாஸ்திரி வாத்தியார் மகள் நுங்கி ''நீ சொல்றதும் ஒரு வகையில சரின்னுதான் சொல்லணும்" என்று ரங்கப்பா சொன்ன வார்த்தைகளை ஆமோதித்தபடி உரை யாடலில் நுழைந்தாள். அதற்குள் செம்பில் தண்ணீர் எடுத்துக் கொண்டுவந்து நின்றாள் சாரதா. மிக உயரத்துக்கு வளர்ந்து பொலிந்ததைப்போல அவள் நின்றிருந்தாள். நுனிக்காலில் இருந்து உச்சந்தலை வரை அப்போதுதான் பெண்மை நிரம்பியதைப் போல இருந்தது.

சற்றே தொலைவில் போய்நின்ற ரங்கப்பா இரண்டு கைகளையும் குவித்து வாய்க்கருகில் வைத்துக் குனிந்துநிற்க, சாரதா அவன் கைகளில் தண்ணீரை ஊற்றினாள். அவன் தலை யசைத்து போதும் என்ற பிறகுதான் நிறுத்தினாள். அப்புறம் எந்தப்பக்கமும் திரும்பிப் பார்க்காமல் விடுவிடுவென்று வீட்டுக்குள் நடந்துபோய்விட்டாள்.

தண்ணீர் குடித்தபின்பு ரங்கப்பாவுக்கு தெம்பு வந்ததைப் போல இருந்தது. வாத்தியார் பக்கத்தில் வந்து ''அம்மா

கல்யாணம் எப்ப சாமி" என்று கேட்டான்.

"எல்லாம் கூடி வரணுமேப்பா" என்ற சாஸ்திரி புதிய வாத்தியாரோடு பேசத் தொடங்கினார். அவர் இந்த ஊருக்கு மாற்றலாகி வந்த பிறகுதான் வீட்டைக் கட்டிக்கொண்டார். ஊரில் நல்ல நாள், கெட்ட நாளுக்கு மந்திரம் சொல்லச் செல்வதன் மூலம் கொஞ்சம் வருமானம் இருந்தது. கொஞ்சம் நிலபுலன்களையும் சொந்தமாக வைத்துக்கொள்ள முடிந்தது. அப்படி இப்படி முயற்சி செய்து ஒரு கிணறும் தோண்டியாயிற்று. தாமதத்தை உணர்ந்த ரங்கப்பா, "கொஞ்சம் கௌடரைப்போய் பார்க்கணும். நா வரேங்க சாமி" என்றதும் "நல்லதுப்பா நல்லது" என்றார்கள் அவர்கள்.

## V

ஊருக்கு வெளியே கிணற்றங்கரையில் உட்கார்ந்து கே.. கே.. என்று சிரித்தான் சிவராமன். சிரிப்பை நிறுத்தவே முடியவில்லை. கூட இருந்தவர்களில் ஒருவன் மட்டும் சிரித்தான். நேற்று பொழுதடையும் நேரத்தில் இதே கிணற்றங்கரையில் பீடி புகைத்தபடி உட்கார்ந்திருந்தானாம். அங்கே தண்ணீர் எடுப்பதற்காக நர்ஸம்மாவும் அவள் கூடவே எப்போதும் இருக்கிற இன்னொரு பெண்ணும் வந்தார்களாம். குடத்திற்குக் கயிறு கட்டி உள்ளே விட்டபோது சிவராமன் நர்ஸம்மாவையே பார்த்துக்கொண்டிருந்தானாம். அவள் கிணற்றுக்குள் செல்லும் குடத்தையே பார்த்துக்கொண்டிருந்தாளாம். இவன் சும்மா இருக்கமாட்டாமல் அந்தப்பக்கம் திரும்பிக்கொண்டு "வாராய் அழகிய நிலவே வாராய்..." என்று பாட ஆரம்பித்தானாம். நர்ஸம்மாவால் சிரிப்பை அடக்கிக்கொள்ளவே முடியவில்லை. சிரித்துச் சிரித்து தாங்க முடியாமல் தண்ணீர்கூட எடுக்காமல் சென்றுவிட்டாளாம்.

தன் கதையைக் கேட்டுத் நண்பர்கள் சிரித்தது சிவராமனுக்குச் சரியான விஷயமாய்த் தெரியவில்லை. முகத்தைச் சுருக்கி வைத்துக்கொண்டு, "இப்ப என்னத்தய்யா கண்டுட்டீங்க.. இவ்வளவு சிரிக்கறதுக்கு" என்று சொன்ன போதுகூட அவர்களுக்குச் சிரிப்பே வந்தது. ஆனால் சிரிப்பது நன்றாக இல்லை என்பதால், சிரிப்போடு ஒவ்வொருவரும் ஒவ்வொரு திசையில் பார்க்கத் தொடங்கினார்கள்.

எல்லாரும் இப்படியே சிறிது நேரம் இருந்த பின்பு,

ராமண்ணா, "வாராவாரம் அவ வீட்டுக்கு ஒருத்தன் வரானே, அது அவள் அண்ணன் இல்லையாம். அவனத்தான் அவள் வச்சுருக்காளாம்" என்று சொல்லி பேச்சின் திசையை மாற்றி னான். "அது எனக்குக் கூடத்தான் தெரியும்" என்றான் சிவராமன். தனக்குத் தெரியாமல் இந்த உலகத்தில் எந்த விஷயமும் இல்லை என்னும் பெருமித உணர்வு அவன் குரலில் இருந்தது.

உடனே இன்னொருவன், "அது மட்டும் இல்லப்பா.. கௌடர் வீட்டுலதான அவ இருக்கறா. அவளும் கௌடரும் சரசமாடறத அவரு வீட்டுல வேலை செய்யற ஆளு பாத் தானாம்" என்று தன் பங்குக்குச் சேர்த்தான். அப்புறம், "நாம எவ்வளவு படிச்சாலும் இந்த இங்கிலீஷ் வரமாட்டேங்குதில்ல. அவளுக்கு மட்டும் அந்த இங்கிலீஷ் எவ்வளவு அழகா வருது" என்று பேசிக்கொண்டார்கள்.

"அதெல்லாம் இருக்கட்டும்பா. மாசம் பூராவும் நாலு காசுகூட நமக்கு கைல கெடைக்கமாட்டுது. ஆனா சுளையா எரநூறு முந்நூறு ரூபா வாங்கறாளே, அவ அதிர்ஷ்டத்தை என்னன்னு சொல்றது" என்றும் சொன்னார்கள்.

"அது எப்படியாவது பாழா போவட்டும்பா. இருட்டறதுக்கு முன்னால அவள ஒருதரம் கண்ணால பாத்துட்டுப்போயி தூங்கணும். அப்பதான் நிம்மதியாத் தூக்கம் வரும்" என்று சொன்னான் இன்னொருவன். இவ்வார்த்தைகளுக்கு நிறைய ஆதரவு இருந்தது. எல்லாரும் எழுந்தார்கள். இந்த வாக்கியத்திற்கு ஆச்சரியக்குறி போட்டுக்கொள்ள வேண்டும்.

## VI

ரங்கப்பாவின் கண்முன்னே, பார்க்கிறவர்கள் கண்களை நிறைத்து விடுகிற கௌடரின் வீடு நின்றிருந்தது. அது எந்தத் தலைமுறையில் கட்டப்பட்டதோ என்னமோ. பாதி ஊரையே வளைத்துப் போட்டுக்கொண்டு நின்றது அது. நிற்கிற தோற்றத்தைக்கண்டு இடியும் மின்னலும்கூடப் பயப்படும். அன்றுமுதல் இன்றுவரை அந்த ஊரையே பிடித்துக்கொண்டிருந்தது. அல்லது அந்த ஊர் அந்த மாளிகையைப் பிடித்துக்கொண்டிருந்தது. அந்த வீட்டின் தன்மைக்கு ஏற்றபடி பிறப்பு, இறப்பு எல்லாமே நடந்தன. கௌடரின் தாய் தந்தையரும், பாட்டி பாட்டன்மார்களும் அப்படி இருந்தார்கள். இப்படி இருந்தார்கள் என்று வழங்கப்படுகிற

கதைகளை ஊருக்குள் எந்த வீட்டுக்கதவைத் தட்டிக் கேட்டாலும் சொல்லப்படும். கெளடர் தெருவில் நடந்தால், தெருவே நிறைந் ததைப்போல இருக்கும். அவர் முகத்தில் நிறைந்திருக்கம் அம்மைத் தழும்புகளை மறைத்தபடி புதர் மாதிரி அடர்ந்திருக்கும் மீசை. அவர் சிரித்தால்கூட அது வெளியே தெரியாது. அது இருக்கட்டும்.

அப்போது பொழுதின் மிச்சமாக இருந்த வெளிச்சம் இன்னும் பூமியின் மேல் நிறைந்திருந்தது. திண்ணையில் வாசலுக்குப் பக்கத்தில் ஒரு புத்தகத்தைப் பிடித்தபடி நர்ஸம்மா உட்கார்ந்திருந்தாள். அப்போதுதான் தலையளவு தடித்திருந்த அரிக்கேன் விளக்கைை ஏற்றினார்கள். விளக்கின் வெளிச்சம் அவள் முகத்தின்மேல் விழுந்து, சூரியன் ஒரு பக்கமும் சந்திரன் மறுபக்கமும் மின்னுவதைப்போல இருந்தது. அவள் தலை நிமிர்ந்து பார்த்தபோது ரங்கப்பா பார்வையில் பட்டான்.

"என்ன ரங்கப்பா, அபூர்வமா இந்தப்பக்கம்" என்றாள். பிறகு அவளே பேச்சை ஆரம்பிக்கிற மாதிரி, "என்ன விஷயம் ரங்கப்பா, ஆளு ரொம்ப தளர்ச்சியா இருக்கறே?" என்று கேட்டாள். அவன் ஒரு அசட்டுச் சிரிப்பு சிரித்தான்.

வெளியே பேச்சுச் சத்தம் கேட்டுத்தானோ, அல்லது ஒரு சம்பிரதாயமாகவோ கெளரவ்வா வெளியே வந்தாள். அவள் உடுத்தி இருந்த புதிய பச்சைப்புடவை, அவள் உட்கார்ந்தாலும் நின்றாலும் சரசரவென்ற சத்தமெழுப்பியது. முழங்கை வரைக்கும் அணிந்திருந்த வளையல்களைச் சத்தமெழும் வண்ணம் அசைத்து, "அவரு இல்லயே ரங்கா, வரவே இல்ல. என்னைக்கு வருவரோ தெரியலைப்பா. அன்னைக்கு அவரே எதுக்காக வந்தேன்னு திட்டனாரு." என்றாள்.

"வீட்டுல ஒண்ணும் இல்ல சாமி. ஏதாவது சோளம் கீளம்..."

அவன் கேட்டு முடிக்கும் முன்பேயே "நல்ல கதையா இருக்குதே. எங்கேருந்துடா கொண்டு வர்றது? நாங்களே மானமா வாழறதே பெரிய விஷயமாப் போய்ட்டுது" என்று சொல்லி விட்டுப் பெருமூச்சு விட்டாள். உள்ளத்தில் எழுந்த வார்த்தை களை அவனால் வாய்திறந்து சொல்லமுடியவில்லை.

அவன் சும்மா இருந்தான். ரொம்ப நேரம் அமைதியாகக் கழிந்தது. கெளரவ்வாவிற்கு சட்டெனெ ஞாபகம் வந்தது. "டேய், ஒரு விறகுக்கட்டு இருக்குது. அடுப்புல வைக்க விறகே இல்ல. கொஞ்சம் உடைச்சுக் குடுடா" என்றாள். கோடாலியைக் கொண்டு வந்து கொடுத்துவிட்டு உள்ளே போனாள்.

ரங்கப்பா கோடாலியை எடுத்துக்கொண்டு விறகுக் கட்டுக்கருகில் போனான். அந்த விறகுக்கட்டை முடிச்சு முடிச்சாக இருந்தது. கெளரவ்வாவும் நர்ஸம்மாவும் பேசத்

தொடங்கினார்கள். ஒருவர் என்ன கேட்டாலும் இன்னொருவர் ஏதோ ஒன்றைப் பதிலாகச் சொன்னார். கௌரவ்வா கையைத் தூக்கினாலும் இறக்கினாலும் வளைச்சத்தம் ஜல்ஜல்லென்று கேட்டது. "கிராமமே ரொம்ப அழகானது. எந்தப் பக்கம் திரும்பிப் பார்த்தாலும் பச்சைப் பச்சையா இருக்குது. காய்கறின்னு எங்கயும் போகத் தேவையில்லை" என்று ஏதேதோ சொன்னாள் நர்ஸம்மா. அதற்கு கையை நீட்டி நீட்டி அசைத்தபடி ஏதோ பதில் சொன்னாள் கௌரவ்வா. அவள் சொன்னது எல்லாமே வளைச்சத்தத்திற்குள் அடங்கிப்போய்விட்டது.

இன்னொருபக்கம், விறகுக்கட்டையைப் பிளக்கக் கோடாலி யைத் தூக்கி முயற்சி செய்து கொண்டிருந்தான் ரங்கப்பா. என்னமோ தெரியவில்லை, வரவர அவன் கண்பார்வை மங்கிக் கொண்டே வந்தது. கண் மங்கும் போதெல்லாம் சிற்சில சமயங்களில் சர்க்கஸில் வருவதுபோல கௌடர், கௌரவ்வா, நர்ஸம்மா, சாஸ்திரி வாத்தியார், புதிய வாத்தியார் ஆகிய உருவங்கள் மாறி மாறி எழுந்து சுழன்றன. உடல் முழுக்கச் சோர்வு தாக்கியதால், தாங்க முடியாமல் மெதுவாகக் கையூன்றித் தரையில் உட்கார்ந்தான். வானத்தில் இருந்து வேகவேகமாக இறங்கி வந்த இருள் தரையைத் தொட்டது.

அதே நேரத்தில் சிவராமனும் அவன் நண்பர்களும் விசில் அடித்தபடி அந்தப் பக்கம் கடந்து போனார்கள். பேச்சில் மூழ்கிய கௌரவ்வாவுக்கும் நர்ஸம்மாவுக்கும் பேச்சே அனைத்துமாக இருந்தது. அவர்கள் பேச்சுவாக்கில் திரும்பியபோது தரையில் கையை ஊன்றிக்கொண்டு உட்கார்ந்திருந்த ரங்கப்பாவைப் பார்த்தார்கள். இதைக்கண்ட கௌரவ்வா அங்கிருந்தபடியே, "என்னடா... என்னாச்சுடா இவனே" என்றாள்.

ரங்கப்பா இயலாமை தொனிக்கும் குரலில், "என்னமோ தெரியல சாமி- முடியல சாமி" என்றான். அதைச் சொல்வதற்குள் அவனுக்கு தாயின் வயிற்றிலிருந்து இன்னொருமுறை பிறந்து வந்ததைப்போல இருந்தது.

கௌரவ்வா எழுந்து, "ஐயோ, சிவனே... விறகு இல்லாம இன்னைக்கு என்ன செய்யறது. மாடு தின்னுற சோளத்தட்டை தான் இன்னைக்கும் கதியா" என்றபடி உள்ளே சென்றாள். அவள் வெகுதூரம் உள்ளே நடந்து செல்லும் வரைக்கும் அந்தப் புடவைச் சத்தம் கேட்டது.

ரங்கப்பா தரையில் ஊன்றிய கையை எடுத்து மெல்ல மேலே எழுந்தான். மெல்ல மெல்ல அடியெடுத்து வைக்க நடக்க நடக்க அவன் மகனும் அவன் மனைவியும் அவன் குடிசையும் நெருங்கி வருவது போல இருந்தது.

# அம்மாசி

அம்மாசி என்பது அவன் பெயர். அவன் கறுப்பாக இருந்ததாலோ அமாவாசையன்று பிறந்ததாலோ அவனுக்கு அந்தப் பெயரே நிலைத்துவிட்டது. அம்மாசி என்ற பெயர் ஏன் வந்தது என அவனுடைய அப்பா, அம்மா உயிரோடு இருந்திருந்தால் கேட்க லாம். ஆனால் அவன் பிறந்து வளர்ந்து நடக்கத் தொடங்கு வதற்குள் அவனைப் பெற்றவர்கள் வெவ்வேறு காரணங்களால் மேலே போய்ச் சேர்ந்துவிட்டார்கள். இப்போது அம்மாசி என்றால் மாரியம்மன் கோயில், மாரியம்மன் கோயில் என்றால் அம்மாசி என்றே ஆகிவிட்டது. மாரியம்மன் கோயில்தான் அம்மாசி என்றால் எந்த வழியும் இல்லாதவன் எனப் பொருளில்லை. அம்மாசி போன்ற எத்தனையோ பேர்களுக்கு மாரியம்மன் கோயில் ஆதரவளித்து வருகிறது. கோடைக் காலத்தில் வெப்பம் தாங்காமல் எல்லாரும் அங்கேதான் கூடுவார்கள். அதுபோக, அங்கே அம்மாசியைத் தவிர வேறு ஒரு பழைய தலையும் வசித்து வந்தது. பழைய தலை என்பது உடல், கை, கால், தலை என்று எல்லா இடங்களிலும் முடி இருக்கிற பகுதி முழுக்க வெளுத்துக் காணப்படும் உருவத்தைக் குறிக்கும். இதுவரைக்கும் அவன் உட்கார்ந்த இடத்திலிருந்து எழுந்ததை யாரும் பார்த்ததில்லை. கோயிலின் ஒரு மூலையில் மிகப்பழைய ஒரு கறுப்புக் கம்பளி விரிக்கப்பட்டிருக்கும். அதன்மீது கால் நீட்டியபடியும் பக்கத்தில் இருந்த தூணில் சாய்ந்துகொண்டும் அல்லது கைகளைப் பின்னால் ஊன்றிக்கொண்டும் உட்கார்ந்தே இருப்பான். இந்த மூன்று நான்கு நிலைகளைத் தவிர்த்து வேறு எந்தப்புதிய முறையும் அவனுக்குத் தெரிந்ததாகத் தெரியவில்லை. அப்படி உட்கார்ந்திருக்கும் போதெல்லாம் அரைக்கண்ணை மூடிய நிலையில் உட்கார்ந் திருப்பது ரொம்ப காலமாகவே பழகிவிட்டிருந்தது. அவனை இந்த நிலையில் பார்க்கும்போது ஏதோ தியானத்தில் உட்கார்ந்திருப் பதைப்போலத் தோன்றும். சுருக்கம் விழுந்த முக அமைப்பே மேற்கண்ட விதமாகத் தோன்றக் காரணமாகும். அல்லது சுருக்கம் விழுந்த அம்முகத்திற்குப் பொருந்தும் வண்ணம் கழுத்துவரை தொங்கும் தாடியும் ஒரு காரணமாகும். மொத்தத்தில் அவன்

எதையோ தியானம் செய்தபடி உட்கார்ந்திருப்பதைப்போலத் தோன்றுகிறது. அவனுக்குப் பக்கத்திலேயே அவனுடைய ஆள் உயரக் கைத்தடி ஒன்று இருந்தது. ஆனால் அவன் நடமாட வேண்டிய அவசியம் எழுந்த போதெல்லாம் அம்மாசி துணைக்கு இருந்ததால் அந்தக் கைத்தடியை இப்பொழுதெல்லாம் பயன் படுத்துவதில்லை. ஆனால் கோழி, ஆடு ஆகிய பிராணிகள் அருகில் நெருங்கி வரும்போது அதட்டித் துரத்துவதற்காக கைத்தடி அவ்வப்போது தேவைப்படுகிறது. இவ்வளவும் சொல்லிவிட்டு அவனுடைய பெயரைச் சொல்லாமல் விடுப்பது மிகப்பெரிய தவறாகும். சின்னப்பிள்ளைகள் முதல் பெரியவர்கள் வரை அவனை எல்லாரும் 'குரியைய்யா' (ஆட்டுக்காரய்யா) என்று அழைத்தார்கள். அதுதான் அவனுடைய சொந்தப் பெயரா? அந்தக் கேள்வி நமக்கு வேண்டாம். தெரிந்ததெல்லாம் இவ்வளவு தான்—அவனுக்கு நினைவு தெரிந்த நாளில் இருந்து அவன் கால்கள் நடமாடுவதை நிறுத்திக்கொண்டது வரைக்கும் ஊரில் இருந்த கௌடரின் ஆடுகளை மேய்த்து வந்தான். இப்போதுகூட மேற்சொன்ன முறையில் பாதிக்கண்களை மூடிக்கொண்டு ஆடு களை எண்ணுவதுபோல விரல்விட்டுக் கொண்டே இருப்பான். ஒரு நாளைக்கு ஏழெட்டுமுறை இது தவறுவதில்லை. இது எந்த நாளும் தவறியதில்லை. இவ்வாறாக ஆட்டுக்காரய்யாவின் பார்வையில் அம்மாசி வளர்ந்து வந்தான். ஆட்டுக்காரய்யா "அம்மாசி" என்றதுமே "உம்" என்று குரல் கொடுப்பது அம்மாசியின் பகல்வேலை என்று சொல்லலாம்.

ஊருக்குள் இருட்டத் தொடங்கியதும் அம்மாசியும் ஆட்டுக் காரய்யாவும் மடத்தில் மணி எப்போது அடிக்குமென்று காத்தி ருப்பார்கள். மடத்தில் மணியடித்ததுமே ஆட்டுக்காரய்யாவுக்கு அருகில் இருக்கும் தட்டையும் தம்ளரையும் எடுத்துக் கொண்டு அம்மாசி வேகவேகமாக ஓடுவான். அதற்குள் ஊர் முழுக்கவும் இருட்டி விடுவதால் அம்மாசி ஓடுவது யார் கண்ணுக்கும் தெரியாது. உற்றுப் பார்த்தால் அவன் ஓடுவது நிழல் அசைவது போலத் தெரியும். அப்படி ஓடியவன் திரும்பி எப்போது வந்தான் என்பதும் யாருக்கும் தெரியாது. 'ஐயா' என்று அவன் குரல் கொடுக்கும் போதுதான் இருட்டைக் கிழித்துக்கொண்டு அவன் நிற்பது தெரியும். அப்போது ஆட்டுக்காரய்யா படுத்திருந்தால் எழுந்து உட்கார்வான். அப்புறம் வழக்கம்போல அந்த இருட்டி லேயே மடத்தின் சோற்றையும் குழம்பையும் சாப்பிட்டுவிட்டுப் படுத்துக்கொள்வான். அந்த நேரத்தில் இருளில் ஊரே அடங்கிப் போயிருக்கும். ஆனால் அவ்வப்போது குரைக்கும் நாய்களின் சத்தமும் ஆந்தைகளின் அலறலும் மட்டும் கேட்கும். தூக்கம்

வராத சமயங்களில் கிழவன் கண்களைத் திறந்து பார்வைக்கு எட்டும்தூரம் வரை பார்ப்பான். அல்லது தூக்கம் வரும்வரை தனக்குத்தானே எதையாவது பேசிக்கொண்டிருப்பான். பிறகு "அம்மாசி அம்மாசி" என்று இரண்டு மூன்று தரம் கூப்பிட்டுப் பார்ப்பான். பதில் வராததால் அவனும் படுத்துக்கொள்வான்.

அக்கம்பக்கத்து ஊர்களில் ஆண்டுக்கு ஒருமுறை மாரி யம்மன் கோயில் திருவிழா வருவதைப்போல அந்த ஊரிலும் திருவிழா வரும். அப்போது மட்டும் ஆட்டுக்காரய்யா தன் இருப் பிடத்தை வேறொரு இடத்துக்கு மாற்றிக்கொள்ளவேண்டிய அவசியம் வரும். கோயிலுக்குள் தூசிதும்பு இல்லாமல் பெருக்கி, ஒட்டடை அடித்து, சுண்ணாம்பு அடித்து செவ்வண்ணம் பூசி கண்ணில் அறைகிற மாதிரி வைத்திருப்பார்கள். கோயில் முழுக்கச் சுண்ணாம்பு அடித்து செவ்வண்ணப் பட்டைகளும் இழுத்தபிறகு அவற்றின்மீது வெயில் படும்போதெல்லாம் பளிச் சென்று பளபளக்கும். ஆட்டுக்காரய்யா உட்கார்ந்திருக்கும் இடம் தவிர மற்ற இடங்களிலெல்லாம் ஏற்கெனவே வர்ணப் பளபளப்பு இருக்குமாதலால், இப்புதிய வர்ணமும் சேர்ந்து அந்த இடங்கள் மேலும் பளபளத்தன. கோயில் மண்டபம் முழுக்க பத்துப் பதினைந்து பேர் அங்கிருந்து இங்கும் இங்கிருந்து அங்குமாக ஓடிப் பந்தல் கட்டுவதும் வண்ணக் காகிதங்களை நறுக்கிக்கட்டி அழகூட்டுவதுமாக இருந்தனர். அநேகமாக அங்கிருந்த எல்லாரும் புத்தம்புதிய வெள்ளை உடுப்புகளை அணிந்திருந்ததால் மாரி யம்மன் கோயிலே வெண்மையில் பொலிந்தது. அங்கே பிரெஞ்சு மீசை வைத்துக்கொண்டு கறுப்பாக குள்ளமாக இருந்தவன் பஸண்ணன். அவனும் வெள்ளையுடை உடுத்தியிருந்ததால் அவனுடைய கருமை கண்களில் அடிக்கிற மாதிரி இருந்தது. அவன் வாயைத் திறக்காமல் இருந்தாலும் அவனுடைய மஞ்சள் கறைபடிந்த பற்கள் வெள்ளைச் சட்டை காரணமாக வெளித் தெரியத் தொடங்கின. அவன் கையில் ஒரு துடைப்பம் இருந்தது. அவன் வேகவேகமாக அடியெடுத்து வைத்துச்சென்று ஆட்டுக் காரய்யா இருக்கும் மூலைக்குப்போய் "சாமி" என்று உரக்கக் கத்தினான். ஒருதரத்திற்கு இருதரமாகக் கூப்பிட்டால் மட்டுமே ஆட்டுக்காரய்யா 'ம்' என்பார். அதனால் எல்லாரும் தொடக்கத் திலேயே சத்தம் போட்டுப் பேசுவார்கள். பஸண்ணனின் குரல் கேட்டு ஆட்டுக்காரய்யா மெல்லக் கண்ணைத் திறந்தான். அவன் தன் முன் வெள்ளையுடுத்திக்கொண்டு நடமாடியவர்களைப் பார்த்தபடியே இருந்தான். அப்படிப் பார்க்கப் பார்க்கச் சில பழைய ஞாபகங்கள் மனக்கண்முன்னே அசைந்தன. அம்மன் திருவிழா என்றால் புலியாட்டம். அதாவது அவனேதான்.

வயசுக்காலத்தில் அவன் இல்லாமல் புலியாட்டம் இருந்ததில்லை. கண்முன்னே புலியாட்டம் நடப்பதுபோல் இருந்தது. மேளச் சத்தமும் எழுந்து காதில் அறையத் தொடங்கியது. அப்போது பெரிய கௌடர் உயிரோடு இருந்தார். ஆட்டுக்காரய்யா அம்மாசி யைப்போல இருப்பான். ஆட்டுக்காரய்யனின் புலியாட்டம் ஆடும் ஆசைக்குப் பெரிய கௌடர் உற்சாகமூட்டினார். துணி மணிகளையெல்லாம் பரிசாகக் கொடுத்து, "நீ இருக்கிற காலம் வரைக்கும் நம் வீட்டிலேயே தங்கிக் கொள்ளலாம். சாப்பாடு துணிமணி எல்லாம் கிடைக்கும். இருக்கற ஆடுங்கள பாத்துக் கிட்டா போதும்" என்றார். அவன் சுருங்கிய முகம் கோயில் மண்டபத்தில் பூசப்பட்டிருந்த வெள்ளையையும் அங்கிருந்த ஆட்கள் அணிந்து கொண்டிருந்த வெள்ளை உடைகளையும் கண்டு மலர்ந்தது. பஸண்ணன் மீண்டும் ஒருமுறை உரத்த குரலில் "சாமி..." என்றான். ஆட்டுக்காரய்யா அவனை நிமிர்ந்து பார்த் தான். பஸண்ணன் நின்றிருந்த தோரணையைக் கண்டதுமே அவன் வந்ததற்கான காரணம் புரிந்தது. ஆட்டுக்காரய்யா வலது கையால் மூங்கில் தடியைப் பற்றிக்கொண்டு இடதுகையை உயர்த் தினான். உயர்ந்த கையைப் பஸண்ணன் பற்றிக்கொண்டதும் தடியை ஊன்றி எழுந்து நடந்து வேறு மூலையில் உட்கார்ந்தான். அவனுடைய கம்பளியை பஸண்ணன் உதறி விரித்தபொழுது எழுந்த புழுதி காற்றிலும் இளம்வெயிலிலும் நீந்தியது. பிறகு மெல்ல மெல்ல முதலில் விரிக்கப்பட்டிருந்த இடத்தில் இறங்கி அடங்கியது. அதன்மேல் இளம் வெயில் விழுந்து அதற்கும் வெண்ணிறம் பற்றிக் கொண்டதைப்போல இருந்தது.

எங்கோ விளையாடுவதற்குச் சென்றிருந்த அம்மாசி மதிய வேளைக்குப் பிறகுதான் கோயிலுக்குத் திரும்பினான். அவன் கண்ணால் நம்பமுடியாத அளவுக்கு கோயில் மாற்றத்துக்கு உள்ளாகி இருந்தது. சுண்ணாம்பின் மணமும் செவ்வண்ணத்தின் மணமும் எழுந்து அவன் நாசியைத் தாக்கியது. ஆட்டுக்காரய்யா ஒரு மூலையிலிருந்து இன்னொரு மூலைக்கு இடம்மாறி பழைய மாதிரியே உட்கார்ந்திருந்தான். மண்டபத்தின் நடுவில் வட்ட மாய்ச் சிலர் கூடி எதையோ பார்த்துக் கொண்டிருந்தனர். கும்பலில் ஒருவன் என்னமோ செய்துகொண்டிருந்தான். அந்த இடத்திற்குத் தாவிச்சென்ற அம்மாசி எட்டிப்பார்த்தான். வண்ணத் தாள்களில் வெவ்வேறு வடிவங்களை சிலர் நறுக்கிக் கொண்டிருந்தார்கள். அங்கே செய்து வைத்திருந்ததெல்லாம் பார்ப்பதற்குக் கண்ணைப் பறிப்பதாக இருந்தன. அவர்களைச் சுற்றிலும் நிறைந்திருந்தவர்கள் 'அப்படி இருக்க வேண்டும்', 'ஆ அப்படித்தான்', 'ஆ இப்படித்தான்', 'சபாஷ்' என்றெல்லாம்

ஆளுக்கொரு வார்த்தை சொல்லிக் கொண்டிருந்தனர். பார்த்துப் பார்த்து அவற்றையெல்லாம் நன்றாக மனதில் பதிய வைத்துக் கொண்டபிறகு அம்மாசி அங்கிருந்து நகர்ந்து ஆட்டுக் காரய்யாவின் அருகில் வந்து நின்றான். எதிரில் பெரிய பெரிய சாமி படங்களையெல்லாம் எடுத்து மண்டபத்துச் சுவரில் சாய்ந்த வாக்கில் வைத்திருந்தார்கள். அவற்றுக்கருகில் வானைத்தொடும் அளவுக்கு ஓர் தென்னை மரமிருந்தது. அதன்மீது பார்வையைத் திருப்பினான் அம்மாசி. ஆறேழு குலைகள் கண்ணுக்குத் தெரிந்தன. கைஎட்டும் உயரத்துக்கு அம்மரத்தில் வெள்ளையும் செவ்வண்ணமும் பூசி இருந்தார்கள். அதைக்கண்ட அம்மாசி ஆட்டுக்காரய்யாவின் அருகில் சென்று “சாமி” என்று அழைத்ததும் “என்ன” என்பதுபோலப் பார்த்தான் அவன். “இங்க பாரு சாமி.. உங்க தென்னை மரத்துக்கும்கூட யாரோ வர்ணம் அடிச்சிருக்காங்க” என்றான். ஆட்டுக்காரய்யா பார்ப்பதற்காகக் கையை நீட்டிச் சுட்டிக்காட்டினான். ஒரு காலத்தில் யாரோ மந்திரித்த தேங்காயைக் கொண்டுவந்து சுடுகாட்டில் புதைத்தார்கள். அது சின்னக் கன்றாகப் பூமியைப் பிளந்துகொண்டு முளைத்தது. பிறகு அதைப் பிடுங்கி வந்து தன்னுடையது என்று சொல்லிக்கொள்ள அதுவாவது இருக்கட்டும் என்று கோயில் மூலையில் நட்டான். அது அவன் கண்முன்னாலேயே வளர்ந்து கீற்று விட்டு, காய்ந்த கீற்று உதிர உதிர, புதிய கீற்று அரும்ப அரும்ப, மரம் மிக உயரமாக வளரத் தொடங்கியது.

திருவிழா அன்று பொழுது ஏற ஏற வேறு வேறு இடங்களிலிருந்தெல்லாம் உறவுக்கூட்டம் வந்து ஊருக்குள் இறங்கத் தொடங்கியது. வருபவர்களெல்லாரும் வழக்கம்போல முதலில் கோயில்பக்கம் வந்து பார்த்துவிட்டே மறுகாரியம் செய்தார்கள். சிலர் அங்கே உட்கார்ந்து எல்லாவற்றையும் மறந்து அரட்டை அடித்துக் கொண்டிருந்தார்கள். தத்தம் ஊர்களில் நடந்த மோதல்களில் ‘இப்படி இப்படி ஆகிவிட்டதே, என்ன விஷயம்?’ என்றெல்லாம் பேசுவதே முக்கிய விஷயமாகி இருந்தது. அதே நேரத்தில் வெளியே சோளத்தட்டையைக் குவித்து நெருப்பு மூட்டிய பஸண்ணன் தமுக்கை சூடுபடுத்திக்கொண்டிருந்தான். அவனைச் சுற்றியும் வானரசேனையைப் போல குழந்தைப் பட்டாளம் நின்றிருந்தது. அக்கூட்டத்தில் அம்மாசியும் ஒருவன். பஸண்ணன் தமுக்கை நெஞ்சு உயரத்திற்கு உயர்த்தி தட் தட் என்று அடிக்கத் தொடங்கினான். தமுக்கின் சத்தம் பேரோசையாக எழுந்து ஊரின் நான்கு மூலையிலும் பரவத் தொடங்கியது. சுற்றிலும் இருந்த சிறுவர்கள் சும்மா இருக்க முடியாமல் ஆடத் தொடங்கினார்கள். பஸண்ணனுக்கும் உற்சாகம் கிளம்பியது.

அடித்துக்கொண்டே அவனும் ஆடத் தொடங்கினான்.

சிறுவர்களும் பஸண்ணனும் சேர்ந்து ஆடத்தொடங்கியதும், அந்த ஆட்டம் போகிற வருகிறவர்களின் கவனத்தைக் கவர்ந் திழுத்தது. அவர்களும் அந்த இடத்தை நெருக்கியடித்துக்கொண்டு நின்றார்கள். அம்மாசிக்கு இந்த ஆட்டத்தையெல்லாம் யார் சொல்லிக்கொடுத்தார்களோ தெரியவில்லை, அவன் தாளத் துக்குத் தகுந்தபடி அடியெடுத்து வைத்து ஆடினான். கூடி இருந்தவர்கள் அனைவரும் அவன் ஆட்டத்தைப் பார்த்து, “அட, என்னமா ஆடறான்!” என்று ஆச்சரியத்தோடு புகழ்ந்தபடி தொடர்ந்து பார்த்தார்கள். அதற்குள் பெண்கள் கூட்டமும் அந்த ஆட்டத்தைப் பார்ப்பதற்கு வந்து சேர்ந்தது. பங்காரிக்கு அம்மாசி மீது வைத்த கண்களை எடுக்கவே மனம் இல்லை. அம்மாசியைப் பார்க்கப் பார்க்க அவளுக்குள் தனக்கும் ஒரு குழந்தை வேண்டும் என்கிற ஆசை பீறிட்டெழுந்தது. அவளுக்குத் திருமணமாகி ஆறேழு ஆண்டுகள் கடந்தும் ஒரு பயனும் இல்லை. கண்டவர்கள் பேசும் பேச்சைக் கேட்டுத் தாங்க முடியாமல் ரோஷத்தோடு நாலைந்துபேர்கள் கூடச் சேர்ந்தும் பார்த்தாள். ஆனாலும் எதுவும் பயன்தரவில்லை. மந்திரம், சாமியார் என்று போகவும் முடியாத அளவுக்கு ஏழை. அவளைப் போன்றவர்களுக்கு முப்பது வயதிலேயே முதுமை வந்து தாக்கிவிடும் நிலையில், அவள் மட்டும் இன்னொரு திருமணம் செய்து வைக்கலாம் என்பதுபோல் இருந்தாள். அவளைக் கண்டவர்கள் யாரா யிருப்பினும் ஆசை மூளாமல் இருக்காது. அந்த அளவு கட்டழகு இருந்தது. என்ன இருந்தாலும், எதிர்பார்த்த பலன் இல்லை. அவள் முயற்சியும் அதிக நாள் நீடிக்கவில்லை. இரவானால் போதும், குடிசையின்மேல் கல்விழ ஆரம்பித்துவிடும். கணவன் முதுகு வீங்குகிற மாதிரி அவளை அடித்து வீழ்த்தி விட்டு, தலையில் அடித்துக்கொண்டு வெளியே தலைகாட்ட முடியாமல் உட்கார்ந்திருப்பான். அதற்கப்புறம் கல் விழுவதெல்லாம் நின்று இப்போது அதெல்லாம் மறந்துபோகிற நிலை வந்துவிட்டது. அவள் கண்களில் அம்மாசியின் சித்திரம் குதிக்கத் தொடங்கியது.

இரண்டு எஜமானர்கள் நன்கு கொழுத்த இரண்டு ஆட்டுக் குட்டிகளை அங்கே இழுத்து வந்தார்கள். அப்போது அங்கிருந்த கும்பல் இரண்டாகப் பிரிந்து வழிவிட்டது. சின்னப் பிள்ளைகள் அந்தப்பக்கமும் இந்த பக்கமுமாகச் சிதறி ஓடினார்கள். தமுக்கின் ஓசையைக்கேட்டு ஆடுகள் கண்டபடி இழுத்துக்கொள்ளத் தொடங்கின. இதனால் அவற்றைப் பிடித்திருந்தவர்கள் தடுமாற, கூடி இருந்த வேறு இருவர் சேர்ந்து அதைப்பிடித்து இழுத்து வந்து அம்மன் முன்னால் அசையாமல் நிறுத்தினார்கள்.

வெளியே உற்சாகத்தோடு தப்பட்டைகளின் ஓசை எழுந்தது. ஆடுகள் அசையாமல் ஆடாமல் கண்களை மட்டும் சுற்றிலும் உருளவிட்டு நின்றிருந்தன. எதிரே கோயில் வாசல் திறந்ததும் வெள்ளியானாலான சாமி தெரிந்தது. கோயிலின் உட்பக்கத்திலிருந்து ஊதுவத்திப்புகை மிதந்து வெளியே வந்தது. இடுப்பிலிருந்து முழங்கால் வரைக்கும் துண்டு கட்டிக்கொண்டிருந்த ஒருவன் உள்ளேயிருந்து தீர்த்தமும் மூணுமுழம் பூவும் எடுத்துக்கொண்டு வந்து, ஆடுகளின் முன்னால் நின்று, கணநேரம் கண்களை மூடி முணுமுணுக்கத் தொடங்கினான். அவன் உடலில் ஒரு வேகம் கூடியது. முணுமுணுப்பதற்கு ஏற்றபடி அவன் உடலும் விம்முவதும் தணிவதுமாக இருந்தது. பிறகு அவன் ஆடுகளின் கழுத்தில் மாலையைப் போட்டான். அவற்றின் நெற்றியிலும் பூவைப் பதித்து தீர்த்தத்தை அவற்றின் உடம்பில் தெளித்து "ஏதாவது தப்பு இருந்தா மனசுல வச்சுக்காதம்மா, தாயே, சம்மதம் கொடு" என்றபடி கையெடுத்துக் கும்பிட்டான். அவனுடைய குரல் அந்தக் கோயிலெங்கும் எதிரொலித்தது. எங்கோ தொலைவில் கேட்ட சத்தத்தைத் தவிர, கோயிலுக்குள் அமைதி நிலவியது. அவர்கள் அப்படியே நின்றிருப்பதும் ஆடுகள் கண்களைச் சுழற்றி அவர்களைப் பார்ப்பதும் சிறிது நேரம் நடந்தது. அப்புறம் அவை தலைகளை உதறத் தொடங்கின. ஆடுகளைப் பிடித்திருந்தவர்கள் அவற்றை இழுத்துக்கொண்டு வெளியே நடந்தார்கள். தப்பட்டை ஓசை மற்ற சத்தங்களையெல்லாம் விழுங்கத் தொடங்கியது. அவர்கள் பின்னாலேயே சிறுவர்கள் ஓடினார்கள். அம்மாசியும்தான். பெரியவர்கள் மிரட்டினாலும் அவர்கள் வேறு பக்கம் திரும்பிக் கொண்டதும் இந்தப் பக்கம் பின்தொடர்ந்து ஓடினார்கள்.

கூட்டம் நடந்து நடந்து ஓர் இடத்தைச் சேர்ந்தது. அங்கே வாட்டசாட்டமான ஓர் ஆள் கத்தியோடு நின்றிருந்தான். எல்லாருடைய கவனமும் ஒரே இடத்தில் குவிந்திருந்ததால், தொலைவில் அங்கங்கே இருந்த பிள்ளைகள் நெருங்கி வந்து சூழ்ந்துகொண்டதே மறந்துபோய் விட்டது. இருவர் முன்னும் பின்னுமாக ஆடுகளின் கால்களைப் பிடித்து, அவற்றின் தலைகளைப் பலிபீடத்தில் வைத்து அழுத்த, கையில் கத்தி வைத்திருந்தவன் ஒரே வெட்டில் இரண்டு துண்டுகளாக்கினான். துண்டாகி விழுந்த தலையின் வாய்க்குள் ஒருவன் தண்ணீர் உற்றினான். ஒன்றிரண்டு முறை அது வாயைக் கேவிக் கேவி மூடியது. இன்னொரு பக்கத்தில் முண்டம் துடித்தது. தலை மட்டும் கண்கள் நிலை குத்த அப்போதே அடங்கிவிட்டது. துடிக்கும் உடலிலிருந்து நாலாபக்கமும் ரத்தத் துளிகள் சிதற, தரை எங்கும்

சிவந்தது. யாரோ ஒரு சிறுவன் ஓடிச்சென்று ஆடுகளின் கழுத்தில் சுற்றப்பட்டு ரத்தத்தில் நனைந்து சிவந்த பூச்சரத்தை எடுத்துக் கொண்டு வந்தான். சும்மா இருக்க முடியாமல் அதை அம்மாசியின் கழுத்தில் போட்டுவிட்டு ஆடும்படிச் சொன்னான். கழுத்தில் விழுந்த ரத்த மாலையால் உடல் நடுங்கிய அம்மாசி தன் கழுத்திலிருந்து ரத்தம் சொட்டுவதைக்கண்டு பயந்து அங்கிருந்து ஓடினான். அவனைப் போலவே ஒன்றிரண்டு சிறுவர் களும் ஓடினார்கள். படுத்திருக்கும்போது கூட அம்மாசியின் கண்களில் இக்காட்சியே விரிந்தது. இதனால் பல முறை தூக்கத்தின் இடையிடையே எழுந்து எழுந்து உட்கார்ந்தான். அன்று இரவு முழுக்க விளக்கு எரிந்தது. வெளியூர்க்காரர்கள் எல்லாரும் வெள்ளைப் போர்வைகளைப் போர்த்திக்கொண்டு கோயில் மண்டபத்தில் வரிசையாய்ப் படுத்திருந்தார்கள். எல்லாம் சேர்ந்து கோயிலே வெண்மையாய்த் தெரிந்தது.

அன்று இரவு ரயில்வே கேங்மேனாக இருந்த சித்தப்பன் வயிறு முட்டக் குடித்துவிட்டு வந்திருந்தான். அவனுடைய தவறு இல்லையாயினும் அது அன்று இரவு அவனுக்குள் புகுந்து விளையாடியது. அவனுக்கோ கண்ணை மூடினால் பிரளயம் வந்துவிடும்போல இருந்தது. இதனால் அவன் தூங்காமல் எல்லாரும் நடமாடும் வழியில், கையில் பிடித்திருந்த தடியை ஊன்றியபடி ஏதேதோ திசைகளில் நடமாடத் தொடங்கினான். அப்படி நடந்துகொண்டிருக்கும்போது எரியும் விளக்குக் கம்பத்தைக் கண்டு அவனுக்குள் ரோஷம் பொத்துக்கொண்டு வந்தது. கோபத்தோடு தன் கையில் இருந்த தடியால் கம்பத்தை அடித்தான். அவன் எழுப்பிய சத்தம் சுற்றுமுற்றும் உறங்கு பவர்கள் அனைவரையும் எழுப்புவதாக இருந்தது. அதோடு விடாமல் ஆ..ஊ.. என்று சீறி, கம்பத்தை அரசியல்வாதியாகவும் காண்ட்ராக்டர்களாகவும், ரயில்வே துறையின் தலைவராகவும், கந்துவட்டிக்குக் கடன் தருகிற மாதப்பனாகவும் நினைத்துக் கொண்டு... "தூ... தேவடியா மவனே, வெள்ளச்சட்டை போட்டுக் கிட்டா நாட்டுல பெரிய மனுஷனாய்டுவியாடா நீ? என்னப் பாத்தா மூக்க மூடிக்கறே நீ? நாங்கள்ளாம் பரதேசிங்கப்பா. தெருவா இருந்தாகூட நாங்க எங்க வேணுமின்னாலும் படுத் திருப்பம்—" என்று திட்டிவிட்டுத் திடுமெனப் பெரிதாகக் குரலெடுத்து அழ ஆரம்பித்தான். மறுபடியும் திட்டத் தொடங் கினான். "உங்க காருங்கள எங்க மேல விடவேணாம்பா.. என் பேச்சக் கேட்டுச் சிரிக்கறான் பார். சிரிப்பா சிரி.. உனக்கு சிரிக்கற காலம். சிரிக்காம வேற என்ன செய்வே... சிரிடா சிரி... ஏழைங்களக் காப்பாத்தப் போறவன் நீ... சிரிடா மகனே...

கம்யூனிஸம் வரணும். அப்பதான் நீ சிரிக்கிறது அடங்கும். அது வரைக்கும்தான் ஒன் சிரிப்பு. சிரிப்பா சிரி...'' அங்கேயே தொடர்ந்து ரகளை செய்து கொண்டிருந்தான். அவன் பேச்சும் சிரிப்பும் தெருவில் நிறைந்தன. தூக்கம் வராமல் படுத்துக்கிடந்த அம்மாசி அவற்றையெல்லாம் கேட்டுக்கொண்டு எழுந்து உட்கார்ந்தான். இப்படியே வெகு தொலைவு நடந்துசென்ற சித்தப்பனின் உடல் எங்கே விழுந்ததோ எப்படி விழுந்ததோ தெரியவில்லை. அவன் பேச்சும் சிரிப்பும் நின்றன.

அடுத்த நாள் விடிந்தது. ஊரே கொட்டாவி விட்டுக் கொண்டு அன்றைய தினத்தைக் கழித்தது. எல்லார் வீட்டுத் திண்ணைகளிலும் கூட்டம் நிரம்பி வழிந்தது. இத்தனைக்கும் அவர்களில் பலரும் இன்னும் எழுந்திருக்கவில்லை. உதாரணம்: சித்தப்பா. மதிய நேரத்துக்கெல்லாம் புலியாட்டம் ஆடும் குழு கோயிலுக்கு வந்துவிட்டது. கௌடர் வீட்டு வேலையாள் வந்து "கௌடரு வீட்டுக்குத் தேங்காய் வேணுமாம்" என்று கேட்டதும் ஆட்டுக்காரய்யா தலையை அசைத்துச் சம்மதம் தெரிவித்தார். அவன் நிமிஷ நேரத்தில் மரத்தில் ஏறிக் காய்களைப் பறித்துக் கொண்டு போனான். வீடுகளுக்குள் பெண்கள் அழகாகத் தம்மை அலங்கரித்துக்கொண்டும் பூ முடித்துக்கொண்டும் உள்புறத்துக்கும் வெளிப்புறத்துக்குமாக நடமாடிக்கொண்டிருந்தார்கள். வயதுப் பிள்ளைகள் அடிக்கடிப் பேசும் கிண்டல் பேச்சு அவர்களைச் சீண்டியது. அதனால் அவர்களிடம் திட்டு வாங்கிக் கட்டிக் கொள்ள வேண்டியிருந்தது.

மாரியம்மன் கோயிலில் புலியாட்டம் தொடங்கப் போவதற்கு அடையாளமாகத் தப்பட்டைச் சத்தம் கேட்கத் தொடங்கியது. எல்லாரும் வரப்போகும் புலிகளின் வரவுக்காகக் காத்திருந்தார்கள். அதே வேளையில் புலிக்கூண்டின் கதவு திறந்து கொண்டது. எல்லார் பார்வையும் அதன்மீதே படிந்தது. ஒரு பெரிய புலி எலுமிச்சம்பழத்தை வாயில் கவ்விக்கொண்டு உள்ளிருந்து வெளியே தாவி வந்தது. அது வருவதைக்கண்ட கூட்டம் சிதறி ஓரமாய் ஓடியபின்னர், அங்கேயே வட்டமாகக் கூடி நின்றது. அதைத் தொடர்ந்து நான்கைந்து பெரிய புலிகள் வெளியே வந்தன. வந்தவற்றில் ஒரு புலிக்குட்டியும் இருந்தது. எல்லாம் வெளியேறின பிறகு, எல்லாரும் வரிசையில் நின்று சாமி கும்பிட்டுத் தீர்த்தம் வாங்கிக் கொண்டார்கள். அப்புறம் அங்கிருந்தே ஆட்டம் தொடங்கியது. சிறுத்தைப் புலியாக வேஷம் போட்டிருந்தவன் எல்லாரைக்காட்டிலும் மிக நன்றாக ஆடினான். ஆடுகளை ஒரே வெட்டில் வெட்டிச் சாய்த்தவன் தான் சிறுத்தைப்புலியாக வேஷம் போட்டிருந்தான். தப்பட்டை

அடிக்கிறவன் அருகில் அவன் அடிபோட்டுக் கொண்டு வந்தா னெனில் பார்வையாளர்களுக்குப் பயம்தான். ஒரு பர்லாங்கு தூரத்துக்கு ஓடி நகர்ந்தார்கள். ஆட்டம் தெருவுக்கு இறங்கியதும் பெண்கள் அனைவரும் திண்ணையை விட்டு இறங்காமல் உயிரைப் பிடித்துக்கொண்டு பார்த்தார்கள். ஆட்டம் எப்போ தாவது அவர்கள் பக்கம் நகர்ந்தால்போதும், சட்டென உள்ளே சென்று கதவை மூடித் தாழ்ப்பாள் போட்டுக்கொள்வார்கள். சின்னப் பிள்ளைகள் அனைவரும் வெகுதொலைவில் நின்றபடி ஆட்டத்தைப் பார்த்துக்கொண்டே பின்தொடர்ந்தனர். ஆடிக் கொண்டே வந்த கூட்டம் ஒக்கலிகர்கள் வசிக்கும் தெருவுக்கு வந்து, அங்கிருந்த சத்திரத்தின் முன் நின்றது. ஆட்டத்தைக் கௌடர், கணக்குப்பிள்ளை ஆகிய மேல்சாதிக்காரர்களின் தலைவர்கள் கண்டு ரசித்தார்கள். அவர்கள் தத்தம் நிலைக்குத் தகுந்தபடி எல்லா ஆட்டக்காரர்களுக்கும் அன்பளிப்புகளைத் தந்து பாராட்டினார்கள். ஊர் முழுக்க இருள் கவிந்தது. ஆட்டம் முடிந்தது. என்னும் ஊர்க்காரர்கள் எங்கே போனாலும். தூங்குவதற்குக் கண்ணை மூடினாலும், அல்லது மனைவியின் புடவையை அவிழ்த்து அம்மணமாக்கிப் பார்க்கும்போதும்கூடக் கண்முன்னால் ‘டங்... டங்கு’ என்று ஆட்டமும் தப்பட்டை ஒலியும்தான் தெரியவும் கேட்கவும் செய்தன.

படுத்தும் தூக்கம் வராததால் கௌடர் வெளியே வந்தார். அவர் வீட்டு வேலையாளும் தூக்கம் வராமல் உட்கார்ந்திருந்த தால் கௌடரைப் பார்த்ததும் எழுந்து உட்கார்ந்தான். வாய்க்குள் பீடியை வைத்துக்கொண்டு பற்ற வைப்பதற்காக வத்திக் குச்சியைக் கௌடர் கிழித்தபோது, அந்த வெளிச்சத்தில் அவர் முகம் சிவந்து தெரிந்தது. சிறிது நேரம் புகையை இழுத்து விட்டு வேலையாள் பக்கம் திரும்பிய கௌடர், “குட்டிப்புலி வேஷம் போட்டுகிட்டு வந்தானே, யாருடா அவன்?” என்று கேட்டார். “அவன்தான் சாமி அம்மாசி” என்றான். “அம்மாசின்னா?” என்று மீண்டும் கேட்டார் கௌடர். அதற்கு “அதான் சாமி, அந்த ஆட்டுக்காரய்யா கூட அம்மா அப்பா இல்லாத ஒரு அனாதப் பையன் இருப்பானே, அவன் சாமி” என்றான். அதைக்கேட்டு மிகவும் ஆச்சரியம் கொண்டார் கௌடர். “அடேங்கப்பா, அதுக்குள்ள அவ்ளோ உயரம் வளந்துட்டானா...” என்றார். கௌடரின் கண்முன்னால் அம்மாசி புலி வேஷம் போட்டுக் கொண்டு அழகாக அடி வைத்து ஆடியது போலத் தோன்றியதோ.

# பசித்தவர்கள்

## I

சுவருங்க எல்லாம் மண்ணுக்குள்ள புதைஞ்சிருக்க, கொஞ்சம் ஓடுங்களும் கொஞ்சம் வைக்கோலும் தென்னங்கீத்துங்களும் மட்டும் அரையும் குறையுமா மூஞ்சிய காட்டிக்கிட்டு சாக்கவ்வாவின் நாலு தூண் கொண்ட குடிசை நின்னுக் கிட்டிருந்திச்சி. மூக்கு நுனியில ஏறின கோபத்தோடு குடிசைக்குள்ள உக்காந்திருந்தா சாக்கவ்வா. உக்காந்திருந்தாலும் சாய்மானத்திற்கு தரையில கையை ஊனிட்டிருந்தா. எலும்புக்கும் தோலுக்குமான புடிமானம் அத்துப்போனதால சாக்கவ்வா உடம்புத்தோல் தளர்ந்து சுருங்கித் தனியா ஆடிட்டிருந்திச்சி. அவளுக்குத் துணையா இருந்தா கைத்தடி அனாதையாட்டம் முன்னால விழுந்து கெடந்தது. சாக்கவ்வா இருக்கறதப் பத்திக் கவலப்படாம அந்தக்கோல் மேல கும்பல் கும்பலா ஈ வந்து மொச்சிக்கிட்டிருந்திச்சி.

அவளுக்குப் பிரியமான கோழியொண்ணு நேத்திலேருந்து குடிசைக்கு திரும்பி வரலைங்கறதுதான் முக்கியமான காரணம். அது சாமிக்காக நேர்ந்துவிட்ட கோழிங்கறதால அபசகுனமா நெனைக்கற அளவுக்கு எதுவும் இல்ல. "ராத்திரி பூரா எங்கயாச்சிம் உக்காந்து கெடந்துட்டு இப்ப இல்லன்னாலும் இன்னங்கொஞ்ச நேரம் கழிச்சாவது வந்துடும்"ன்னு ஒரு நம்பிக்கை நேத்து முழுக்க அவளுக்கிருந்திச்சி. தன் குலதெய்வம் தன்ன ரொம்பத்தான் சோதிக்குதோன்னு நெனச்சா. அப்ப சாக்கவ்வாவின் கோபமும் அதிகமாச்சு. கையாலாகாத கிழவியான தான் மட்டும் புலம்பித் துடிச்சாலும்கூட தன் புள்ளைங்களோ, பேரப்புள்ளைங்களோ மருமகளுங்களோ இதப்பத்திக் கொஞ்சமும் கவலப்படாம இருக்கறதப் பாத்து மனசுக்குள்ள ரோஷம் பொங்கிச்சு. ராத்திரியே தட்டுத் தடுமாறி எழுந்து போயி "கூக்-கூக்-"ன்னு சத்தங் கொடுத்துகிட்டே

தெருமுழுக்க திரிஞ்சி பாத்துட்டு ஊரே தூக்கத்துல முழுகனப்பறம்தான் வீட்டுக்குத் திரும்பி வந்து உஸ்னு மூச்சு வாங்குனபடி கால்நீட்டி உக்காந்தா. யாருமே ஏன் என்னன்னு ஒரு வார்த்தகூடக் கேக்கல. அவ இருந்த நிலையப் பாத்து ஐயோ பாவம்ன்னு நெனச்ச நித்திரைக்கன்னி வந்து, சாக்கவ்வா கண்ணுங்களத் தடவி மூடவச்சிட்டு மாயமா மறைஞ்சி போயிட்டா.

ஊரு எழுந்திருக்கறதுக்கு முன்னாலயே முழிச்சிகிட்ட சாக்கவ்வா அப்பவும் கோழி திரும்பி வராததப் பாத்து மனசு துடிச்சிப் போயிட்டா. எந்த மாயத்திலயாவது கோழி ராத்திரியே வந்தாலும் வந்திருக்கலாம்ன்னு நெனச்சி கண்ணுக்கு வெளிச்சம் புலப்படற தூரம் வரைக்கும் உத்துப் பாத்தா. எதுவும் தெரியாததால குடிசைக்குள்ளேயே, "பா... பா... பா.."ன்னு கூப்புட்டுகிட்டே நடந்தா. குடிசைக்குள்ள சோத்துக்கை பக்கமா மூலையில படுத்திருந்த மூத்த புள்ள காளண்ணன் அம்மாக்காரி சத்தத்தால தூக்கம் கலைஞ்சத தாங்க முடியாம 'இன்னம் பொழுது விடியலைம்மா. போய்ப் படுத்துக்கோ'ன்னு சொன்னான். சாக்கவ்வாவுக்கு அம்மா கெடந்த ஒடம்பு நரம்புங்களெல்லாம் முறுக்கேறமாதிரி ஆயிடுச்சி. 'என்னடா சொன்ன மவனே, இன்னும் பொழுது விடியலையா, பொழுது விடிஞ்சி சூரியன் மூஞ்சில குத்தனாலும் நீ எந்திரிக்காத தாலதான்டா என் ஊடே பாழாய்டுச்சி...' என்று சொன்ன வண்ணம் நெற்றியில் அடித்துக் கொண்டாள்.

மேற்கொண்டு ஏதேனும் பேசினால் வெறுமனே பேச்சுதான் வளரும் என்று நினைத்த காளண்ணனின் திசையிலிருந்து பேச்சு எதுவும் வரவில்லை. தூங்குவதுபோலக் கிடந்தான். அம்மாவும் அண்ணனும் பேசற பேச்சுக் கேட்டு எழுந்த ரெண்டாவது புள்ளை சண்ணய்யா பொண்டாட்டி என்னமோ குசுகுசுக்க ஆரம்பிச்சதுமே கண்ண மூடிக்கிட்டான். சண்ணய்யாவின் மூணு புள்ளைங்களும் ஒன்னுமேல ஒன்னு காலப் போட்டுகிட்டு தூங்கிட்டிருந்தாங்க. அவுங்க போத்திகிட்டிருந்த புதுப்போர்வை அந்த மூணுபேரயும் மூடறதுக்குத் தன்னால ஆனமட்டும் முயற்சி செஞ்சிது. இன்னொரு கைக்குழந்தை அம்மாக்காரி செலுவம்மா மாரோட ஒட்டிக் கெடந்திச்சி. இந்தப் பக்கம் நடுவூட்ல சாக்கவ்வாவுடைய பெரிய பொண்ணு கௌரம்மாவுடைய பையன் ஒடம்பு சுகமில்லாத சுவரோட ஒட்டனாப்பல வெள்ளைப் போர்வையை போத்திகிட்டு படுத்துக் கெடந்தான். அவன் பக்கத்திலேயே அவன் அம்மாக்காரி கௌரம்மா. அவ ஒடம்பு

நீளத்துக்குச் சரியான ஒரு பாயப்போட்டு படுத்துக் கெடந்தா. ஒரு பழைய சேலைய போத்திகிட்டு ஒரு கையப் பையன்மேல போட்டபடி தூங்கிட்டிருந்தா. அங்கயே இன்னொரு மூலையில கௌரம்மாவுக்கு தங்கச்சியான சின்ன கௌரி தூங்கிட்டிருந்தா. அவ பக்கத்துல மூணாவது படிக்கற கௌரம்மா புள்ள சிவு படுத்திட்டிருந்தான். ரெண்டுபேரும் ஒரே போர்வையைப் போத்திட்டு படுத்திருந்தாங்க.

கௌரம்மாவின் புருஷன் ஊரூரா அலைய ஆரம்பிச்சதிலேருந்து, அவளும் புள்ளையும் தாய்வீட்டுக்கு வந்து தங்கிட்டாங்க. மூணு மாசத்துக்கு ஒரு தரமோ, ஆறு மாசத்துக்கு ஒரு தரமோ அவ புருஷன்காரன் வந்து மூஞ்சிய காட்டிட்டு கொஞ்சம் பணம் கொடுத்துட்டு போய்டுவான். கூலி வேல ஏதாச்சிம் கெடைக்குமான்னு கழுகு மாதிரி காத்துக்கெடப்பா கௌரம்மா. எந்தவேல கெடைச்சாலும் போய் செஞ்சி கூலி வாங்கியாந்து இருக்கற ரெண்டு புள்ளைங்க வயித்த நெரப்புவா. தங்கச்சிக்காரி சின்ன கௌரி பெரியவளாகி கல்யாணத்துக்குத் தயாராயிருந்தா. அவளுக்கு கெடைக்கற கூலி அவளுக்கும் அவ அம்மாவுக்கும் சரியா இருக்கும். கூலி எதுவும் கெடைக்காம வீட்டுல சும்மா இருக்கற நாள்ல சிவுவுடைய கிழிஞ்ச சட்டைத் துணிங்களயெல்லாம் தச்சி, தொவச்சி, காயவச்சி, இஸ்திரி போட்டு வைப்பா. தெனமும் சிவு மூஞ்சியக் கழுவி, கிராப் வாரி, நெத்திக்கு பொட்டு வச்சி, சின்னகௌரிதான் பள்ளிக்கூடத்துக்கு அனுப்பி வைப்பாள். இன்னும் மிச்சமிருக்கற ஒரு ஆளு குருசித்தன். சாக்காவ்வாவின் சின்னப்புள்ளை அவன் பங்குக்கு நடுவீடுதான் கெடைச்சிது. வீட்டுக்கே விருந்தாளி மாதிரிதான் வருவான். மாரியாத்தா கோயில்லதான் படுக்கறது, தூங்கறது எல்லாம். ஊரூரா போய் எங்கனாச்சும் சித்தாள் வேலை செய்வான். பட்டுநூல் வியாபாரம் செஞ்சி, பெட்டிக்கடை நடத்தி, மாட்டுத் தரகனா வேலை பாத்துட்டு இப்ப சித்தாள் வேலயை செஞ்சிட்டிருக்கான். கையில பணம் வச்சிருந்தா அம்மாக்காரிக்கு வெத்தலபாக்குக்கு ஏதாச்சிம் கொடுக்கறதுண்டு. சின்ன வயசுலேருந்து நாடகமின்னா பிரியம் அதிகம். இப்ப 'கொடைவள்ளல் கர்ணன்' நாடகத்துல கர்ணனோட புள்ளயா நடிக்கறான். வழக்கமா அவன் படுக்கறது மாரியாத்தா கோயில்லதான்.

விடியற நேரம் வெளியே வந்த சாக்கவ்வா தான் வளத்த கோழி நின்ன இடம், உக்காந்த இடம் எல்லாத்தையும் மாத்தி மாத்திப் பார்த்தாள். எங்கயும் அந்த கோழி இல்ல. அதே நேரம் முழுக்க பளபளன்னு வெடிஞ்சிட்டுது. உள்ள இருக்கற கோழிங்க

வெளிய கூவனா, அந்த சத்தம்கேட்டு அது வந்தாலும் வரலாமின்னு, அவ கவுத்தி வச்ச கூடைய எடுத்தாள். உள்ள இருந்த கோழிங்களெல்லாம் வழக்கம்போல உற்சாகமா வெளிய வந்ததுங்க. அதுங்க மூஞ்சில எந்தவிதமான துக்கமோ கவலையோ இல்ல. அதப்பாத்து சாக்கவ்வாவுக்கு கஷ்டமா இருந்திச்சி. 'ஐயோ பாவம் என் புள்ளைங்க' என்று பத்துப் பதினைந்துதரம் திருப்பித் திருப்பிச் சொன்னாள்.

வாசல்ல நின்னுட்டிருந்த சாக்கவ்வா மனசுல அந்தக் கோழியுடைய அழகு லட்சணம் படம் மாதிரி ஓடிச்சி. எந்தப் பாவியோ, சாமி பயம் சுத்தமா இல்லாதவன்தான் தன்னுடைய கோழியப் புடிச்சி சாகடிச்சிருக்கணுமின்னு நெனச்சாள். நேரம் ஆக ஆக அந்த நெனப்பே உறுதியாச்சி. தனக்குப் புடிக்காத ஆளுங்களெல்லாம் யார் யாருன்னு ஒவ்வொருத்தரா ஞாபகப்படுத்திப் பார்த்தா சாக்கவ்வா. அவளுடைய சக்களத்தி கெம்பம்மா ஞாபகம் வந்திச்சி. சாக்கவ்வா புருஷன சுண்டு விரலாலேயே ஆட்டம் போடவச்சி வயசாய்ட்ட கெம்பம்மா குப்பைக்குழி பக்கமா நடக்க ஆரம்பிச்சா.

அந்தக் குப்பைக்குழியின் ஒரு பக்கத்திலேருந்து கொஞ்சம்கூட விடாம உற்று உற்றுப் பாத்தும்கூட சாக்கவ்வாவால் எதயும் கண்டுபுடிக்க முடியல. அங்க ஒன்னு இங்க ஒன்னா கெடந்த கோழி றெக்கையைப் பாத்துட்டு நின்னா. ஆனா அதுங்க அவளுடைய கோழி றெக்கை இல்ல. 'எங்க போய்டுவ, என் கையில அகப்படாம, என் சக்களத்தி' என்றபடி தன் முயற்சியைக் கைவிடாமல் கைத்தடியால் குப்பையைக் கிளறிவிட்டுப் பார்த்தாள். அப்பவும் எதுவும் அவ கையில கெடைக்கல. "தூ... என் சக்களத்தி. மாயக்காரியாச்சே நீ. அவ்வளவு சுலபமா உன் மர்மத்த கண்டுபுடிச்சிட முடியுமா" என்றபடி குப்பையின் பக்கம் பார்த்துத் துப்பிட்டு அடுத்த குப்பைப்பக்கம் போனாள்.

பத்துப்பதினஞ்சி குப்பைக் குழிங்கள தேடி முடிக்கற துக்குள்ள வேர்த்து விறுவிறுத்துப் போய்ட்டாள். ஏறிட்டிருந்த வெயில்ல அவ தெம்பு கொறஞ்சிட்டுது. காத்து அடிச்சா விழுந்துடறமாதிரி ஆயிட்டா. அப்ப அங்க குப்பைய கொட்ட வந்த புட்டி, "இது என்னமா இந்த நேரத்துல..."ன்னு கேட்டா. அதுக்கு சாக்கவ்வா, "குப்பை கொட்டறதுக்கு வந்தியாடி கண்ணு"ன்னு கேட்டா. புட்டி 'ஆமாம்'ன்னு சிரிச்சிட்டே குப்பைய கொட்டிட்டுப் போய்ட்டா. புட்டி நடந்துகிட்ட மொற சாக்கவ்வாவுக்கு மூஞ்சில அடிச்ச மாதிரி இருந்திச்சி. புட்டி கண்ணுக்கு மறைவாகப் போகும்வரைக்கும் வெளிக்கிருக்க

உக்காந்த மாதிரி உக்காந்திருந்துட்டு, அப்பறமா எழுந்து அடுத்த குப்பைக் குழிக்கு வந்தா.

சாக்கவ்வா எங்கே போயிருந்தா, என்ன செஞ்சிட்டிருந்தாங்கற சங்கதி புட்டி மூலமா ஊர் முழுக்க தெரிஞ்சி போயிட்டதால, அங்கங்க உக்காந்ட்டிருந்தவங்களும் நின்னு பேசிட்டிருந்தவங்களும் ''என்ன ஆயா, என்ன விஷயம்?''ன்னு கேக்க ஆரம்பிச்சாங்க. "என் கோழி தம்பி.. என் கோழிடி''ன்னு சொல்லிட்டே ஊட்டுப்பக்கம் பாத்து நடந்தா. கேட்டவங்கள்ளாம் அவ கொஞ்சதூரம் நடந்து போனதுக்கப்பறம் சிரிச்சிட்டே போனாங்க.

எப்படியோ சாக்கவ்வா ஊட்டுக்கு போய்ச் சேர்ந்தா. வாசல்லயே சிவு நின்னுட்டிருந்தான். ''வந்துடிச்சாடா கண்ணு''ன்னு அவனப்பாத்து, கேட்டா சாக்கவ்வா. சிவு "என்னது?"ன்னு கேட்டான். அதக் கேட்டதுமே சாக்கவ்வா மனசுல துக்கம் கோபம் ரெண்டும் பொங்கிச்சி. "ஐயோ என் பேரப்புள்ளையே, வந்துடிச்சான்னு கேட்டதுக்கப்புறம்கூட என்னதுன்னு கேக்கறியே''ன்னு அழுதுகிட்டே வாசல்ல உக்காந்துட்டா. அந்தப் பையன் பயந்துபோய் அவுங்க அம்மாகிட்ட ஓடினான்.

பெரிய பொண்ணு கௌரம்மா வெளிய வந்து பாத்தா. வாசப்படில நின்னு மண்ண வாரி தூத்திட்டிருந்தா சாக்கவ்வா. "என் கோழிய முழுங்கனவங்க ஊடு மண்ணா போவ- என் குலதெய்வம் இருக்கறது உண்மைன்னா என் கோழிய திருடித்துன்னவங்க ஊடு இடிஞ்சி தரைமட்டமா போவ"ன்னு திட்டுவதும் மண்ணை வாரித் தூற்றுவதுமாக இருந்தா. திடீர்னு கொஞ்ச நேரம் அந்த மண்ணு மேலயே உழுந்து பொரளுவா. கைய முரிச்சி காட்டுவா. தாங்க முடியாத பொண்ணு அம்மாவின் கையப் புடிச்சி நிறுத்தி "போதும் ஏந்திரும்மா.. போனது திரும்பி வரவா போவுது"ன்னு தூக்கி நிறுத்தனா. அவ புடியிலேருந்து திமிறி இன்னொரு தரம் மண்ண வாரி எறச்சா சாக்கவ்வா. அப்ப அங்க சின்னப் பொண்ணும் வந்துட்டா. ரெண்டு பொண்ணுங்களும் ஆளுக்கொரு கைத்தாங்கலா புடிச்சித் தூக்கி நிக்கவச்சி நடத்தியே குடிசைக்குள்ள கூப்புட்டுக்னு வந்தாங்க. சாக்கவ்வா உடம்பு பூரா புழுதி மயமா இருந்திச்சி. நிக்க முடியாம தரையில உக்காந்தா.

# II

கௌரம்மா கொண்டு வந்து கொடுத்த தண்ணிய குடிச்சப்பறம் சாக்கவ்வாவுக்கு கொஞ்சம் தெம்பு வந்தமாதிரி இருந்திச்சி. சாக்கவ்வா மகளின் தலைய தடவிக்கொடுத்து, "நீ நல்லா இருக்கணும்மா என் செல்லம். கடைசி காலத்துல நீதான் எனக்கு கதி. என் ஆஸ்தியயெல்லாம் உன் சின்னப்புள்ளை பேருக்கு எழுதிக்கொடுத்துட்டு செத்துப் போயிடறேன்..."ன்னு துக்கம் தாங்காம ஒப்பாரி வைக்க ஆரம்பிச்சிட்டா. இன்னும் கொஞ்ச நேரத்துல அம்மா அழுகைய நிறுத்திடுவா. இன்னும் கொஞ்ச நேரத்துல அழுகைய நிறுத்திடுவான்னு நெனச்ச ரெண்டாவது புள்ள சண்ணய்யா அவ அழுவறத நிறுத்தாததப் பாத்ததும் தாங்கிக்க முடியல. பொண்டாட்டிக்காரி சைகை செய்யறதக்கூட பொருட்படுத்தாம "என்ன சொல்ற நீ"ன்னு கேட்டுகிட்டே வெளியே வந்தான்.

சண்ணய்யா கொஞ்சம் மெலிஞ்ச திரேகக்காரன். அவன் கையும் காலும் காய்ஞ்ச மிளார் மாதிரி இருந்தாலும் நார் மாதிரி கெட்டியா இருக்கும். குழந்தைகள் இல்லாத அண்ணன்காரன் சொத்துக்கு ஆசைப்பட்டு, அதன்மேல் ஒரு கண் வைத்திருந்த அவன் மனசுல அம்மாவுடைய வார்த்தைகள் நேரா போயி தச்சிது. வெளியில கொஞ்சம் வேகமா பேசற ஆளா இருந்தாலும் பொண்டாட்டிக்காரி முன்னால அடக்கித்தான் வாசிப்பான். அப்படிப்பட்டவனே கொண்டாட்டிக்காரி கண்ணால சைகை செய்யறதக்கூட கண்டுக்காம அம்மா முன்னால ராவுளாசுரன் மாதிரி வந்து நின்னான்.

சாக்கவ்வாவின் மங்கலான கண்ணுக்கு சண்ணய்யா நிக்கறது ராவுளாசுரன் நிக்கறமாதிரி தெரிஞ்சிது. நேத்துலேருந்து கோழியத் தேடித்தேடி அலுத்துப்போன சாக்கவ்வா தொண்டையிலிருந்து எந்த வார்த்தையும் வரலை. இன்னும் கொஞ்சம் தண்ணீர் குடித்து தொண்டையை நனைத்துக்கொண்டு, "அதக் கேக்க நீ யாருடா?"ன்னு கேட்டா. அதுக்கு சண்ணய்யா "நான் உரிமைக்காரன்"ன்னு சொன்னான். சாக்கவ்வா ஒண்ணும் சட்டம் தெரியாத பொம்பள இல்ல. "என்னடா சொன்ன... இன்னொருதரம் சொல்லு... உரிமைக்காரனா நீ? பொண்ணா பொறந்திருந்தாக்கூட ஆம்பளைக்கு சமமா நின்னு உழைச்சி சம்பாதிச்சதுல வாங்கன சொத்து இது.. சுயார்ஜித சொத்து தெரிமா.."ன்னு சொன்னா. ஒரு வினாடி அதுவும் உண்மைதான்னு நெனச்ச சண்ணய்யா

சம்மா இருந்தான். உடனே குரலை இரக்கமுண்டாகும் வண்ணம் மாத்திக்கிட்டு "அப்படின்னா என் புள்ளைங்கள நீயே கொண்டும்போயி நடுத்தெருவுல உட்டுடு.."ன்னு பிள்ளைகளை இழுத்துவந்து அவள் முன்னால நிறுத்தினான்.

சண்ணய்யா மெதுவான குரல்லதான் பேசனான்னு சொன்னாலும் கோழியத் தேடி அலைஞ்சி அலைஞ்சி அலுத்துப்போயிருந்த சாக்கவ்வாவுக்கு கத்தணும்போல இருந்தது. உடனே அவளும் பேச்சு முறைய மாத்தி, "ஏண்டா.. உன் பங்குக்கு ஓடு போடாம ஓலைக்கூரை போட்டு வச்சிருக்கியே.. வயித்துல ஈரத்துணிய சுத்திகிட்டு இந்த ஊட்ட கட்டிவச்சவ நானு.." பாக்கறவங்க மூக்குமேல விரல வக்கறமாதிரி முடிவே இல்லாம அவ பேசிட்டே போவறத பாத்து அப்படியே பூமிக்குள்ள எறங்கிட்ட மாதிரி இருந்திச்சி சண்ணய்யனுக்கு. குடிசையின் ஒரு மூலையிலிருந்து ஆரம்பிச்சி நிதானமா ஒவ்வொண்ணயும் பாத்து, அதப்பத்தி பாட்டுக்கட்டி மெதுமெதுவாக குரல உசத்திப் பாடினா சாக்கவ்வா.

மிளார் மாதிரி எதிரே நின்னுட்டிருந்த சண்ணய்யன் பக்கம் ஓரக்கண்ணால பாத்தபடி, ரெண்டு கையாலயும் தரைய தட்டி, திடீர்னு அந்தக் கைகள புள்ள பக்கம் நீட்டி, "என் வீட்ட இந்த மாதிரி கதிக்கு கொண்டாந்துட்டியே"ன்னு துக்கம் தாங்காம அழுதா. அந்தக் கோலத்துல அம்மாக்காரிய பாக்கப் புள்ள யாலயும் முடியல. "அதுக்கு நான் என்ன செய்றதும்மா"ன்னு கேட்டான். சாக்கவ்வா ஒருதரம் நல்ல காறித்துப்பிட்டு, "எங்கனா ஏரிலபோய் உழு"ன்னு சொன்னா. நெஞ்சில் குதிச்சிட்டிருந்த வார்த்தைங்களயெல்லாம் திரட்டி "இன்னொருதரம் அப்படிச் சொல்லாதம்மா"ன்னு சொல்லி தன் பங்குக்கு உரிய பகுதியின் பக்கம் முகத்தை திருப்பிக்கிட்டான்.

அந்தப்பக்கம் மூஞ்சிய திருப்பனானோ இல்லயோ, அம்பு மாதிரி அங்கேயிருந்து வந்த அவம் பெண்டாட்டி அத்தைக்காரி முன்னால சண்டைக்கு நிக்கறமாதிரி நின்னா. மூணு வேளைக்கும் இல்லைன்னாலும்கூட நாலு புள்ளைங்க இருக்கற ஊட்டுல பொறந்து வளந்து துணிமணி சாப்பாட்டுக்கு எந்தக் கொறயும் இல்லாம வளந்து வந்தவ. செலுவம்மா அம்மா ஊட்லேருந்து இன்னைக்கும் தாய்வழியே ரகசிய வரவு உண்டு. அதுக்காகத்தான் பொண்டாட்டி முன்னால சண்ணய்யன் வாலச் சுருட்டிட்டிருக்கான்னு சொல்றவங்களும் இருந்தாங்க. யாராச்சிம் சுத்தி வளச்சி கேட்டாங்கன்னு சொன்னா, "போங்கப்பா.. எங்க மாமியார்க்காரி கொடுக்கறதத்தான் நான் சாப்புடறன்"னு சொல்லிட்டு சண்டைக்கு வந்துடுவான்.

அண்ணனுக்கு குழந்தை பொறக்கவே பொறக்காதுன்னு நாளாவ நாளாவ உறுதியா தெரிஞ்சிக்கிட்டப்பறம் சந்தோஷமா சண்ணய்யனும் அடுத்தடுத்து நாலு புள்ளைங்கள பெத்துக்கிட்டான். கடைசியா பொறந்தது கைக்கொழந்தை.

அந்தக் கைக்கொழந்தை வெரல் சப்பிட்டே தேமேன்னு பாத்தபடி, அத்தைக்காரிக் சவால்விடற மாதிரி வந்து நின்ன அம்மாக்காரி இடுப்புல உக்காந்திருந்திச்சி. அந்தக் கொழந்த ஓர் இடுப்புலேருந்து இன்னொரு இடுப்புக்கு மாத்திய செலுவம்மா, "அது என்ன அத்தை... பேசத் தொடங்கனா போதும்-- என் ஊடு-- என் ஊடு-- என் ஆஸ்தி-- என் ஆஸ்தின்னு சொல்றியே"ன்னு கேட்டுட்டு அத்தைக்காரி பதிலுக்கு காத்திருந்தா. அழுத்தம் திருத்தமா உடனே சாக்கவ்வா, "அப்படித்தான்டி சொல்வேன். இது என் ஊடு. என் ஆஸ்தி"ன்னு சொன்னா. "அதக் கேக்க நீ யாருடி?"ங்கற அர்த்தம் அந்த வார்த்தைல அடங்கியிருந்ததால செலுவம்மாவுக்கு சுருக்னு இருந்திச்சி. இடுப்புல இருந்த கொழந்தய புருஷன்கிட்ட தூக்கி கொடுத்துட்டு அத்தைக்காரி முன்னால கைய ஆட்டி ஆட்டி, "கேக்கறதுக்கு நான் ஒருத்தி இருக்கறேன்னு தெரிஞ்சுக்குங்க... எவ்ளோ வச்சிருக்கீங்க?"ன்னு ரோஷமாக் கேட்டாள்.

பேசிப் பேசிக் களைச்சிப்போன சாக்கவ்வாவுக்கு வயிறு காய்ஞ்சி போனதால, பானையிலிருந்த தண்ணீர் மொண்டு மொடக் மொடக்னு குடிச்சிட்டு, "உன் கண்ணு குருடா?"ன்னு கேட்டாள். அத்தைக்காரி கேள்வி மருமகள உசுப்பிட்டுது. "என் கண்ணு ஏன் அத்த குருடாவனும்?-- நானும் எல்லாத்தையும் தெரிஞ்சிட்டவதான் பாத்துக்குங்க-- பிச்சைக்காரன் நிக்கறமாதிரி இருக்கற இந்த ஊட்டப் பாக்கலயா-- மழைக் கடவுள் கண் தெறந்தாலும் பயிர்காணாத நாலு ஏக்கர் நெலத்த பாக்கலியா-- இருக்கற மூணு பசங்களுக்குப் பிரிச்சிக்குடுத்தா வேணாமின்னா சொல்லுது--" என்றபடி அத்தை முன்னாலயே உக்காந்துட்டா. புருஷன்காரனான சண்ணய்யன் பெண்டாட்டியின் கையைப் புடிச்சி இழுத்து "நீ வாம்மா-- நீ வாம்மா--"ன்னு சொன்னான். புருஷனபத்தி லட்சியம் பண்ணாம இன்னும் கொஞ்சம் கைய உதறிகிட்டு சண்டைக்குத் தயாராய் உக்காந்தா. "என் ஆஸ்தி உள்ளங்கை அகலமே இருக்கட்டும்டி. மகாராணி... அதுலதான்டி நீ உக்காந்து சாப்புடறது"ன்னு சொன்னா சாக்கவ்வா. செலுவம்மாவுக்கு கழுத்த வெட்டி முன்னால வச்சமாதரி இருந்திச்சி. தரையில ஓங்கி உதைச்சிகிட்டே எழுந்த செலுவம்மா, "இங்க பாரு அத்த-- இது மாதிரியே நீங்க சொல்லிட்டே இருங்க.. என் மூள கெட்டிச்சின்னா பைத்தியக்காரியாய்டுவேன்.

என்னைக்காவது ஒருநாள் ஊட்டுக்கு நெருப்பு வச்சிட்டு உங்க நெலத்துல மண்ண வாரித் தூத்திட்டுப்போய்டுவேன்..."ன்னு சொல்லிகிட்டே மூச்சு வாங்கனபடி தன்னோட அறைக்குச் சூறாவளிக்காத்து மாதிரி திரும்பிப்போனா. அவளுடைய கைக்குழந்தை பாட்டிய சுத்தி ஆடிக்கிட்டிருந்திச்சி.

எதுக்குடா பேச்ச ஆரம்பிச்சோம்ன்னு பெருமூச்சு விடறதத் தவிர வேற எதயும் செய்யத் தோணாம நின்னான் சண்ணய்யன். பெண்டாட்டிக்காரி செலுவம்மா பேசன பேச்சு அவன் மனசுல சரியா பதியல. தரைய ஓங்கி உதைச்சபடி தயராய்ட்டா அம்மா. மூச்சப்புடிச்சிட்டு நின்னுட்டிருந்தான் மகன். கைக்கொழந்த பாட்டிய சுத்திச்சுத்தி வந்திச்சி.

தரையத் தடவறத நிறுத்திட்டு புள்ள பக்கம் பாத்த சாக்கவ்வா, "கேட்டியாடா உன் பொண்டாட்டி பேச்ச"ன்னு கேட்டா. அவளுடைய சீறல் அந்த ஊட்டயே ஒரு குலுக்கு குலுக்கிச்சி. மகனால எந்தப் பதிலும் சொல்ல முடியல. துக்கமே வாயைப் பிளந்துகொண்டு உக்காந்திருக்கற மாதிரி அம்மா உக்காந்திருந்தா. மகனிடமிருந்து எந்தப் பதிலும் வராததப் பாத்து, இன்னொரு தரம் அவளே "கேட்டியாடா உன் பெண்டாட்டி பேச்ச"ன்னு கேட்டா. வாய கட்டிகிட்டவன் மாதிரி சண்ணய்யன், "சும்மா இரும்மா... சும்மா இரும்மா"ன்னு சொன்னான். சாக்கவ்வாவின் ரோஷம் இன்னும் கொஞ்சம் அதிகமாச்சி. "பொண்டாட்டிக்காரி வாய மூட முடியாதவன் என் வாய மூட வந்தியா.. சபாஷ்டா மவனே.. இன்னைக்கு மட்டும் அவ என் ஊட்ல இருந்தா, அவ அவுங்கப்பனுக்கு பொறந்தவ இல்லன்னு வச்சிக்க.. அவ்ளோதான் நான் சொல்ல முடியும்.. ஆமா... அவ்ளோதான் நான் சொல்ல முடியும்..."ன்னு சொன்னதயே இருபதுதரம் திருப்பித் திருப்பிச் சொல்லிட்டிருந்தா.

அத்தைக்காரி வாய்லேருந்து இந்த வார்த்த வந்ததுமே உள் வீட்லேருந்து கடமுடான்னு சத்தம் வந்திச்சி. சண்ணய்யனால நிக்கக்கூட முடியல. மெதுவா அறைப்பக்கம் நடந்தான். நடு ஊட்ல அவன் தங்கச்சி கௌரம்மா கண்கலங்க நின்னுக்கிட்டிருந்தா. அண்ணன்காரன் முகத்தப் பாத்ததுமே பொல பொலன்னு கண்ணீர் சிந்தி, "அண்ணா, அம்மா எதுவானாலும் சொல்லிக்கட்டும். நான் என்ன இங்க ஆஸ்தில பங்கு வாங்கவா வந்திருக்கேன். அம்மா எழுதிக்குடுக்கறேன்னு சொன்னாலும் நான் என்ன எழுதி வாங்கிகிட்டனா"ன்னு சொன்னாள். கௌரவம்மாவின் மூத்த புள்ளை பொறந்ததிலேருந்து வியாதில படுத்துக் கெடக்கறவன்—வெள்ளப் போர்வைய போத்திகிட்டு

செவுத்தோரமா உக்காந்தபடி அம்மாகாரியயும் மாமன்காரயும் திரும்பிப் பார்த்தான். நடுவீட்டில் இருந்த தூணைச் சுத்தம் செய்துட்டிருந்த சின்ன கௌரி எந்தப் பக்கமும் திரும்பி யாரையும் பார்க்காமலேயே அண்ணனுக்கு உறைக்கற மாதிரி 'என்னைக்குத்தான் நான் இந்த வீட்ட விட்டு போவனோ.. சிவா..''ன்னு சொன்னாள். சண்ணய்யன் கௌரம்மாவைப் பார்த்து "நீ பேசாம உள்ளப்போம்மா''ன்னு சொல்லிட்டு அறைக்குள்ள வேகமா போனான்.

இன்னொரு பக்கத்திலேருந்து வெளிக்கதவத் தள்ளிட்டு கடைசி மகன் குருசித்தன் வந்தான். அவுங்கம்மா தரையில உக்காந்திருந்த கோலம், அக்காக்காரி வாசபடியில நின்னுட்டிருந்த கோலம், அறையிலேருந்து காளண்ணன் குசுகுசுன்னு பேசிட்டிருந்த சத்தம் எல்லாத்தயும் பார்த்தான் அவன். உடனே அங்க நிக்காம திரும்பிட்டான். புள்ள வந்ததப் பாத்த சாக்கவ்வா, அவனே என்ன சங்கதின்னு கேக்கட்டும்னு நெனச்சி சும்மா இருந்தா. ஆனா வந்தவன் அப்படியே திரும்பிப் போவறதக் கண்டு "குருசித்தா'ன்னு கூப்புட்டா. அதுக்குள்ள அவன் வெளில போய்ட்டான். "தோ வரேன் இரும்மா''ன்னு சொன்னவன் திரும்பிப் பாக்காமயே போய்ட்டான்.

அறையில பெண்டாட்டிக்காரி செலுவம்மா சாமான் மூட்டைய கட்டிக்கட்டி வைக்கறதும் புருஷன்காரன் சண்ணய்யன் புடுங்கிப் புடுங்கி வைக்கறதுமா இருந்தான். அவள் தலையில அடிச்சிக்கறத நிறுத்தும்போது இவன் அடிச்சிக்க ஆரம்பிச்சான். கைக்கொழந்த ஆயாகிட்ட ஆடிட்டிருந்திச்சி. இன்னொன்னு எங்கயோ வெளிய போயிருந்திச்சி. மற்ற ரெண்டும் அம்மா அப்பா சண்டைய வேடிக்கை பாத்தபடி சும்மா உக்காந்திட்டிருந்துதுங்க. இவ்வளவு நேரம் சண்டையும் சாடியுமா இருந்த இடத்துல மெதுமெதுவா அமைதி திரும்பி வந்திச்சி.

அப்போது எட்டி எட்டிக் கால்வைத்தபடி உள்ளே வந்தான் மூத்தவன் காளண்ணன். அம்மாக்காரியப் பாத்ததுமே என்னமோ நடந்திருக்குதுன்னு நெனச்சி "என்னாச்சிம்மா?''ன்னு கேட்டான். அம்மா எதுவும் பதில் சொல்லாததால சரசரன்னு தன்னோட அறைக்கப் போய்ட்டான். அவன் உக்காந்து மூச்சு வாங்கறதுக்குள்ள, உக்காந்திட்டிருந்த பொண்டாட்டிக்காரி நடந்தது எல்லாத்தயும் ஒண்ணுவிடாம அவன் காதுக்குள்ள சொல்லிட்டா. காளண்ணன் காலைப் பிடிச்சிட்டு உக்காந்தான். நாலு ஊருக்குப் புத்திமதி சொல்லி ஒத்துக்க வச்சாலும் வச்சிடலாம், ஆனா இந்த ஊட்டுல ஒரு வார்த்தைக்கும்

மரியாதை கெடையாதுன்னு நெனச்சிகிட்டான். பொண்டாட்டிகாரிகிட்ட "என்ன செஞ்சி வச்சிருக்கே?"ன்னு கேட்டான். "டீ போட்டு வச்சிருக்கேன். நேத்து வச்ச பொரிகடல கொஞ்சம் மிச்சமிருக்குது'' ன்னு சொன்னா பொண்டாட்டிக்காரி.

அதே நேரத்தில் சண்ணய்யனிடமிருந்து பிடுங்கிய தன் துணிமணிங்கள தாய்வீட்டு டிரங்க் பெட்டியில போட்டு மூடி எடுத்துக்கிட்டு, இன்னொரு கையில ரெண்டாவது புள்ளைய இழுத்துகிட்டு அறையிலேருந்து வெளிய வந்தா செலுவம்மா. அந்தப் பையன் "விடும்மா விடும்மா"ன்னு கத்தினபடி கைய உதறினான். கோபம் கொண்ட செலுவம்மா அந்தப் பையன புடிச்சித் தள்ளிட்டு, பாட்டி பக்கத்துல ஆடிட்டிருந்த கைப்புள்ளய தூக்கி வேகமா இடுப்புல வச்சிகிட்டா. அந்தக் கொழந்த திடீர்னு அழ ஆரம்பிச்சிது. அவளுக்குப் பின்னால் நின்றுகொண்டிருந்த அவளுடைய கணவன் "என்னடி நீ செய்றது... என்னடி நீ செய்றது"ன்னு கேட்டான். அவள் கால்ல உழாதது ஒண்ணுதான் பாக்கி.

உள்ளே இருந்த காளண்ணன் வெளிய வந்து நின்னதுமே ஒரு வினாடி எல்லாமே அங்கங்கே நின்னுது. எல்லாரயும் ஒருதரம் பார்த்த காளண்ணன் செலுவம்மாவப்பாத்து அறைப்பக்கம் கையக்காட்டி "மொதல்ல நீ உள்ளே போ"ன்னு சொன்னான். கையில் இருந்த ட்ரங்ச் பெட்டிய டொக்குனு கீழ போட்ட செலுவம்மா கொழந்தைய கீழ எறக்கி விட்டுட்டு உக்காந்தபடி, "நீயே கேளு மாமா.. இந்த வீட்டுல நான் என்ன பேசனாலும் தப்பாயிடுதே. நா இருக்கணுமா இல்ல, சாவணுமா...?"ன்னு சொல்லிட்டு முந்தானையால மூஞ்சி மூடிகிட்டு அழுதா. செலுவம்மா அழுவறதப் பாத்து அவளுடைய ரெண்டாவது புள்ளயும் அழுதான். "ஐயையோ... என்ன பேச்சு பேசறா இவ.."ன்னு சொல்லிட்டே சாக்கவ்வா செலுவம்மா பக்கம் கையக்காட்டி நெட்டி முரிச்சா, சாக்கடைப் பக்கம்போன கைக்குழந்தையை கௌரம்மா தூக்கிகிட்டா. செலுவம்மா பக்கத்திலிருந்த டிரங்க் பெட்டிய சண்ணய்யன் எடுத்துகிட்டு அறைக்குப்போனான். அவன் பின்னாலயே முந்தானையால மூஞ்ச மூடிகிட்டு செலுவம்மாவும் போனாள். அறைக்குப் போனதும் கவுந்தடிச்சிப் படுத்துகிட்டா. அங்க நிக்க முடியாம எல்லா இடத்தயும் சுத்திப்பாத்தான் காளண்ணன். "ஏம்மா... ஊட்டுல இருக்கறவங்களயெல்லாம் எங்னா போங்கன்னு வெரட்டிட்டா, சாப்புடறதுக்கு என்ன ஆகாயத் துலேருந்து வருமா"ன்னு கேட்டான். யாரும் எதுவும் பதிலே

சொல்லல. கடைசில தங்கச்சி கௌரம்மா, "யாராவது வேலைக்குக் கூப்புட்டாத்தான போவமுடியும். மேகல சேரி வரைக்கும் நாங்களேகூட தேடிப்போயி கேட்டுட்டுத் திரும்பி வந்துட்டம். அதக் கேக்க நீ யாரு இங்க"ன்னு கேட்டாள். காளண்ணன் நின்ன எடத்துலயே நின்னுட்டான்.

அப்ப அறையிலேருந்து செலுவம்மா கையில கோடாலி எடுத்துகிட்டு வெளிய வந்து காளண்ணன் பொண்டாட்டிய பார்த்து "வரயாக்கா.. வெறவுக்காச்சிம் போய்ட்டு வரலாம்"ன்னு சொன்னாள். அதுக்கு காளியண்ணன் பொண்டாட்டி, "கொஞ்சம் இரு தாயே.. இவரு இப்பத்தான் வந்தாரு. சாப்பட வச்சிட்டு வந்துடறேன். வெறவுதான, சாயங்காலமா போனாகூட கொஞ்சம் கெடைக்கும்"ன்னு சொன்னா. அப்பறம் புருஷன் பக்கம் திரும்பி "வாயேன்... எழுந்து"ன்னு சொன்னாள். காளண்ணன் அங்கயே நின்னபடி "இங்கயே எடுத்தா"ன்னு சொன்னான். காளண்ணனின் பெண்டாட்டி உள்ளே போய் ஒரு பாத்திரத்தில் டீயும் இன்னொரு பாத்திரத்தில் கடலைப் பொரியையும் கொண்டு வந்து சாக்கவ்வாவின் முன்னால வச்சா. உடனே சாக்கவ்வா "ஐயோ எனக்கு வேணாம்மா தாயி"ன்னு சொன்னா. காளியண்ணன் "பேசாம குடிம்மா"ன்னு சொன்னான். கூடவே அவன் பொண்டாட்டியும் சேர்ந்து "அவரு குடிச்சாச்சி அத்த.. நீ குடி"ன்னு சொன்னாள்.

சாக்கவ்வா கொஞ்சம் பொரிய அள்ளி சின்னவன் புள்ளைக்கு கொடுத்துட்டு தன் வாய்லயும் ஒருபுடி அள்ளி போட்டுகிட்டா. "கௌரி- இந்த கொஞ்சம் எடுத்தும்போயி உன் பெரிய புள்ள கையிலயும் கொடு"ன்னு சொன்னா. கௌரம்மாவும் கொஞ்சம் வாங்கிச் சென்று தன் மூத்தவனிடம் கொடுத்தாள். போர்வைய விலக்கிட்டு எலும்புக் கைய நீட்டி அவனும் வாங்கினான்.

கொடுக்கறத வாங்கித் தின்னுட்டு தன் பாட்டுக்கு ஆடிட்டு கெடந்தது கௌரம்மாவின் மூத்த புள்ள. அதுக்கிருந்த காயலா எந்தக் காலத்துலயும் குணமாகாதுன்னு பாக்கறவங்க யாரா இருந்தாலும் சொல்லிடுவாங்க. அதும் அம்மாக்காரியும் அப்படித்தான் சொல்வாள். அது எப்பப்பார்த்தாலும் ஒரு வெள்ளப்போர்வைய தலைய சுத்திப் போத்திகிட்டே இருக்கும். ஒரு வினாடிகூட போர்வை இல்லாம அதனால இருக்க முடியாது. அதனாலேயே அதும் சின்ன மாமன்காரன் குருசித்தன் அதுக்கு 'டெபுடி கமிஷனர்'னு பேருவச்சி கூப்புட்டான். கடைசியா அதுவே பேரா போய்டுச்சி. பொறந்தப்போ வந்த பேரு அந்தப் பையனுக்கே ஞாபகமில்லாம

போச்சி. அந்தப் பிள்ளைக்கு இந்த உலகத்தோடு எந்தச் சம்பந்தமும் இல்லைன்னு எல்லாரும் பேசிக்குவாங்க. அதும்பாட்டுக்கு அது உக்காந்திட்டிருக்கும். மத்த காரியங்களும் அதும்பாட்டுக்கு நடந்துட்டே இருக்கும். விளக்குக் கம்பத்தில இருந்த அழுக்கையெல்லாம் சின்ன கௌரி முழுசா தொடச்சி எடுத்துட்டதால, இப்ப வெள்ளவெளேர்னு இருந்திச்சி கம்பம்.

## III

மத்தியான நேரம் கையில பள்ளிக்கூடத்துல கொடுத்த உப்புமாவ எடுத்துக்கிட்டு பள்ளிக்கூடம் முடிஞ்சி திரும்பி வந்தான் சிவு. வெளில் சுள்ளென்று அடித்தது. அந்தப் புழுக்கத்தில் குடிசையே களைத்துப் படுத்திருந்தது. சாக்கவ்வா உக்காந்த இடத்துலயே தூங்கி விழுந்தா. பெரிய மாமா காளண்ணன் அறிவுகால்ல தலைய வச்சி உள்பக்கமா காலநீட்டிக் கொறட்ட விட்டுத் தூங்கிட்டிருந்தான். மாமா தலைய மாமா பொண்டாட்டி மடிமேல தூக்கிவச்சிகிட்டா. மாமா தலையில முடிய வெலக்கி வெலக்கிப்பேன் பாக்க ஆரம்பிச்சா. நடுமாமா சண்ணய்யன் எங்கயோ போயிருந்தான். அவன் ரெண்டு புள்ளைங்க வாசப்படியிலயே படுத்துக் கெடந்ததுங்க.

அறைக்குள்ள படுத்திருந்த செலுவம்மா குழந்தைய தட்டித் தட்டி தூங்க வச்சிட்டிருந்தா. அவள் தலைமாட்டுல அவ ரெண்டாவது புள்ள உக்காந்திட்டு தட்டுல மிச்சம் மீதி இருந்த சாப்பாட்ட எடுத்து நக்கிட்டிருந்தது. இன்னொரு பக்கத்தில சிவு அம்மா கௌரம்மா தரையில முந்தானையையே விரிச்சி பெரிய புள்ள பக்கத்தில படுத்திருந்தா. சிவுவுடைய அண்ணன் 'டெபுடி கமிஷனர்' வெள்ளைப் போர்வையப் போத்தின கோலத்தோட கொஞ்சம்கூட அசையாம செவுத்தயே பாத்துட்டிருந்தது.

சிவுவிடைய சின்னம்மா சின்னகௌரி பாவாடைக்கு மேல புடவையை அள்ளிச் செருகிகிட்டு ஒரு தம்ளர்ல என்னமோ நீலம்கலந்துட்டிருந்தா. சிவு வந்து அவ எதிர்ல நின்னான். சின்ன கௌரி உதட்டச் சுழிச்சி "மயில் வரையறேன், பாரு"ன்னு சொன்னா. சிவு கண்ண விரிச்சிகிட்டு அங்கயே உக்காந்தான்.

நீலம் கரைச்சப்பறம் சின்னகெளரி சிவு கையில வச்சிருந்த உப்புமாவப் பாத்து "சாப்புடுடா அத''ன்னு சொன்னா. "உனக்கும் கொஞ்சம் வேணுமா"ன்னு கேட்டான் சிவு. அதுக்கு அவ, "எனக்கு வேணாம். உங்க அண்ணனுக்குக் கொஞ்சம் கொடுத்துட்டு நீ கொஞ்சம் தின்னு''ன்னு சொன்னா. அந்த உப்புமாவ ரெண்டு பாகமா பிரிச்சி ஒவ்வொண்ணையும் ஒவ்வொரு கைல வச்சிகிட்டு அண்ணன் டெபுடி கமிஷனர் பக்கத்துல வந்து கைய நீட்டி "அண்ணா... அண்ணா"ன்னு கூப்பிட்டான். அந்த அண்ணங்காரம் ரொம்ப நேரம் உக்காந்திருந்துட்டு அப்பறமா சிவு பக்கம் திரும்பி கைய நீட்டுனான்.

நீல வர்ணத்துல ஈச்சங் குச்சிய நனச்சி மயிலுடைய கால்பாகத்துலேருந்து வரைய ஆரம்பிச்சா. சின்னகெளரி கைப்போக்கயே பாத்திட்டிருந் சிவு, "ஐயோ சின்னம்மா... யாராவது மொதமொதல்ல கால வரைவாங்களா''ன்னு கேட்டான். "நீ கொஞ்ச நேரம் சும்மா இருப்பா. நா வரைஞ்சி முடிக்கற வரைக்கும்"னு சொன்ன சின்னகெளரி ஏதோ பாட்ட முணுமுணுத்தபடி வரைய ஆரம்பிச்சா. கையில இருந்த உப்புமாவச் சாப்பிட்டபடியே சின்னகெளரியின் விரல் போவறபக்கமெல்லாம் கண்ணப்போகவிட்டுக் கவனிச்சான் சிவு. அப்பறமா தன் சிலேட்ட எடுத்து கீழ வச்சி, தன் உடம்பு பாரத்தயெல்லாம் அதும் மேல எறக்கி வச்சி, தலையிலிருந்து ஆரம்பிச்சி மயில் வரையத் தொடங்கினான்.

ரொம்ப நேரம் கழிச்சப்பறம், "இப்ப பாருப்பா''ன்னு சின்னகெளரி சொன்னதும் சிலேட்ல மயில் வரையறதுல கவனமா இருந்த சிவு நிமிந்து பாத்தான். சோத்துக்கைப் பக்கம் இருந்த சுவரில நீல வர்ணத்துல மயில் சிவுவ பாத்து ஆடிட்டிருந்தது. சந்தோஷம் தாங்க முடியாம சிவு, "ரொம்ப ரொம்ப நல்லா இருக்குது"ன்னு கையத் தட்டிக் குதிச்சான். அந்தக் கைதட்டற சத்தத்துல தூங்கி உழுந்த சாக்கவ்வாவுக்கு முழிப்பு வந்திடுச்சு. கண்ணைத் தெறக்காமலேயே "யாரு உள்ள"ன்னு சத்தம் போட்டா. சின்ன கெளரி "நானும்மா''ன்னு பதில் சொன்னா. "உள்ள செவுத்துமேல பாக்கு இருந்தா ஒன்னு எடுத்துப்போடுடி''ன்னு சொன்னா சாக்கவ்வா. "இங்க இல்லம்மா"ன்னு சின்னகெளரி பதில் சொன்னா. அதுக்குள்ள சிவு அவ பக்கத்துல வந்து "சின்னம்மா செவுத்துல மயில் வரைஞ்சிருக்குது.. வந்து பாரு"ன்னு சொன்னான். சாக்கவ்வா கண் தெறந்து "யாரோ ஒருத்தி நெல் குத்தற வேலய விட்டுட்டு எவனோ ஏறி அடிக்கறதப் பாக்கப் போனாளாம். அந்தக் கதயா

இருக்குது"ன்னு சொல்லிட்டு மறுபடியும் தூங்க ஆரம்பிச்சா. அம்மா சொன்னது சின்னகௌளரி காதுல விழுந்துச்சி. "ம்க்கும். இங்க நெல் குத்தறதுக்கு வாங்கிக்கொட்டி வச்சிருக்கு தாக்கும்''ன்னு முணுமுணுத்துக்கொண்டே இன்னொரு பக்கத்தில மயில் வரையறதுக்காக கண்ணாலயே அளந்துகிட்டிருந்தா.

இப்படி இருக்கும்போது சாக்கவ்வா கண்ணிலிருந்து தூக்கங்கறது நழுவிப்போச்சி. பாக்கறப்பவே வானத்திலிருந்து பூமிக்கு இருட்டு எறங்கிச்சி. இருந்த கொஞ்ச நஞ்சம் வெளிச்சத்துல புஸ்தகத்த எடுத்து வச்சி 'நூறு ரூபாய்க்கு ஒரு வருஷத்துக்கு பன்னிரண்டு ரூபாய் வட்டி என்றால் இரண்டு வருஷத்துக்கு எவ்வளவு வட்டி'ன்னு படிச்சிகிட்டே கணக்குப் போட்டான். ஏதோ பழைய நெனப்புல மூழ்கிப்போன சாக்கவ்வா சிவுவ கூப்புட்டு, "இங்க பாரு- நீ அப்ப உங்க அம்மா வயித்துல ஏழு மாசம்... நான் கொள்ளே காலத்திலிருந்து பன்னெண்டு ரூபாய் கொடுத்து வாங்கியாந்திருந்தேன்... அத அந்த பெரிய ஊட்டு ரத்னம்மாவிடம் ஆறு ரூபாய்க்கு அடவு வச்சேன். இப்ப அசலும் வட்டியும் சேர்ந்து எவ்வளவாவுது, சொல்லு பாப்போம்...''னு கேட்டா. ''சொல்றேன் கேட்டுக்கோ"ன்னு சிவு எதஎதயோ கூட்டிக் கழிச்சிப் பாத்தான். பதில் கெடைக்கல. அப்ப மின்னல்போல சிவு, "எவ்வளவு வட்டி"ன்னு கேட்டான். "அதுகூடத் தெரியலயா உனக்கு. ஒரு ரூபாய்க்கு ஒரு மாதத்துக்கு ஓரணா வட்டி"ன்னு சொன்னா சாக்கவ்வா. அப்படியும் இப்படியுமாக என்னென்னமோ செஞ்சி பாத்தான் சிவு. பதில் கெடைக்கல. ''போ ஆயா.. நா படிக்கணும்''னு சாக்கவ்வா கைய உதறிட்டு மொதல்ல உக்காந்திருந்த எடத்துக்கு வந்தா.

சிவு புஸ்தகத்த பாத்தான். அந்த நேரத்துக்கெல்லாம் இருட்டுங்கறது பூமில கொஞ்சநஞ்சம் இருந்த வெளிச்சத்த காலாலயே மெதிச்சித் தொவச்சிட்டுது- அறைக்குள்ள மட்டும் ஒரு வெளக்கு ஏத்தி வச்சிருந்தாங்க. மினுக்மினுக்னு எரிஞ்ச அந்த வெளக்க வெளிச்சம் வாசலத் தாண்டி இந்தப் பக்கம் தெரியவே இல்ல. உக்காந்த இடத்திலிருந்தே சிவு "வெளக்கு ஏத்தும்மா'' என்றான். அதுக்கு உள்ள இருந்தபடியே அம்மாக்காரி கௌரம்மா, "கொஞ்சம் இருப்பா... சித்தி காபி வாங்கியாற போயிருக்காடா- வந்ததும் எண்ணெ வாங்கியாந்து வெளக்கேத்தலாம்"ன்னு சொன்னா. சிவு சும்மா இருக்காம, "இப்ப நான் படிக்கணுமே''ன்னு அழுதான். கௌரம்மா எண்ணெ இல்லாத வெளக்க கையில எடுத்துப்போயி

செலுவம்மாகிட்ட, "கொஞ்சம் எண்ணெ இருந்தா ஊத்திக்குடும்மா.. வாங்கியாந்ததும் குடுத்துடறேன்"னு சொன்னா. "அய்யோ... எங்க இருக்குதுக்கா எண்ணெ... வேணுமின்னா சிவு இங்க வந்து படிக்கட்டுமே"ன்னு செலுவம்மா சொன்னதுமே சிவு சிலேட்டு புஸ்தகத்த எடுத்துகிட்டு அறைக்குள்ள போவ, அவன் அம்மாக்காரி காலி வெளக்க கையில புடிச்சிட்டு தன் அறைக்குப் போனா. சின்ன கௌரி வெறுங்கைய வீசினபடி திரும்பி வந்தா.

# IV

அங்க ஒண்ணும் இங்க ஒண்ணுமா அடுப்பு பத்த வச்ச வீட்டுலேருந்து சோத்துப் பானைங்க உருளற சத்தம் சாக்கவ்வா காதுல விழுந்திச்சி. சாக்கவ்வா சிவுவ கூப்புட்டா. சிவு வந்ததுமே, "என் கண்ணு, கொஞ்சம் என் கோழி எங்க இருக்குதுன்னு போய்ப் பாத்துட்டு வரியாடா"ன்னு கேட்டா. சிவு ஆ ஊன்னு சொல்லிட்டு, "கோழி இருந்தா வந்திருக்காதா.. எனக்கு இருட்ட கண்டா பயமா இருக்குது.. போ ஆயா"ன்னு சொன்னான். கால நீட்டி ஒக்காந்தபடி சாக்கவ்வா சொன்னா.

"நா இருக்கும்போது என்ன பயம்?"

"நீ இருந்தா?"

"எமலோகத்துக்காரங்ககூட ஓடிருவாங்க"

சிவுவால அந்த உருவங்கள மனசுக்குள்ள நெனச்சி பாக்க முடியல. ஆன்னு கண்ண அகலமாக்கிகிட்டு பாத்தான். சாக்கவ்வா சொன்னா::

"அவுங்களக்கு ஆல மரம் மாதிரி மீசை.. கதவு மாதிரி பல்லு.."

"அவுங்க ஒன்ன இழுத்துட்டுப்போய்ட்டாங்கன்னா..."

"என்ன எதுக்குடா இழுத்தும்போறீங்க மூதேவிங்களா... நானே வரேன் உடுங்கடான்னு சொல்லுவன்"

"அப்பறம்.."

"அப்பறம், அவங்களுக்கு முன்னால நானே எமதர்ம ராஜாவப் பாக்கப்போவேன்"

சாக்கவ்வா வாயிலேருந்து வார்த்தைங்க வந்துட்டிருக்கும்போதே.. சுருங்கித் தளர்ந்துபோன அவளுடைய

தோலு, அவ மூஞ்சில பல்லில்லாத வாயி, தலையில இருந்த நரைச்ச முடி எல்லாமே மறைஞ்சி போச்சி- சாக்கவ்வாவுக்குள்ள சின்ன கௌரி தெரிய ஆரம்பிச்சா.

"எம தர்மராஜா என்ன செஞ்சிட்டிருக்கான்?"

"அவனா- நம்ம ஊரு அளவுக்குப் பெரிய சிம்மாசனத்து மேல உக்காந்திட்டு- எமதூதருங்க கூப்புட்டுக்னு வராங்க இல்ல- அவுங்களுக்கெல்லாம் தண்டனை கொடுத்திட்டிருந்தான்..."

"அதப்பாத்துக்கூட ஒனக்குப் பயமாவலையா?"

"ஐய.. இந்த நரலோகத்துல நா பட்ட கஷ்டங்களுக்கு முன்னால அந்தத் தண்டன எல்லாம் எந்த மூலைக்காவும்.. அவங்கிட்டயும் அதயேதான் சொன்னன்..."

சித்தி சின்ன கௌரியாக இருந்த சாக்கவ்வா இப்போது வெள்ளைப்புடவை கட்டிக்கொண்டு தலைமுடியெல்லாம் காத்துல பறக்கப் பறக்க தேவகன்னி மாதிரி இருந்தா..

"அவன் அதுக்கு என்ன சொன்னான்?"

"அதுக்கு அவன்... சரி கெழவி... உன் துணிச்சல்ல மெச்சினேன். என்ன வரம் வேணும் கேட்டு வாங்கிக்கோன்னு சொன்னான்"

வெள்ளைப்பொடவ கட்டிக்கினு தலைமுடி பறக்கப் பறக்க காத்துல அலைய உட்டபடி குலுக்கித் தளுக்கி வந்த தேவகன்னி தன் சுண்டுவிரலாலயே இந்த உலகத்த ஆட்டி வய்க்க ஆரம்பிச்சா..

"வரம் கேளுன்னு சொன்னதுக்கப்பறம்"

"அதுக்கு நானு... பாரு சாமி... என் பேரப்புள்ளை நரலோகத்துல ராஜா மாதிரி இருக்கறதுக்கு வரம் குடு... அது போதும்னு சொன்னன்-"

சிவு அமைதியா உக்காந்திருந்தான்.

சிவுவுடைய அமைதிய சாக்கவ்வா கலச்சி, "இப்ப போயி நம்ம கோழிய தேடிப்பாத்துட்டு வரலாமா.. வா கண்ணு"ன்னு சொன்னா. சிவு எழுந்தான். சாக்கவ்வா, "உங்க அம்மாட்டேருந்து ஒரு க்ளாஸ் வாங்கியா"ன்னு சொன்னா. சிவுவுடைய அம்மா ஒரு க்ளாஸோட வெளியே வந்து, "ஏம்மா.. இந்த இருட்டுல எதுக்கும்மா இங்கயும் அங்கயும் நடந்துகிட்டு... போனது போயாச்சின்னு நெனச்சிக்கினு சும்மா இரு"ன்னு சொன்னா. சாக்கவ்வா தரையில கையை ஊனி மெதுவா எழுந்து கைத்தடிய புடிச்சிகிட்டா. "நீ பேசாம கிளாஸ குடு.. போனது போயாச்சாம் எங்கோ... அது போவட்டும்... அப்பறம் காட்டறம் பாரு.. அந்த குல தெய்வத்துக்கு நல்ல மொளகாத்தூளு பூசைகாட்டி தொடப்பத்தாலயே நாலு சாத்து சாத்துவேன்.."னு சொல்லிட்டு

கிளாஸ புடிச்சிக்கினு நின்னிருந்த சிவு கைய புடிச்சிக்கிட்டே தடியால ஊனி ஊனி ஓன்னு இருந்த இருட்டுக்குள்ள மெதுவா நடந்தா சாக்கவ்வா.

அந்த இருட்டுல சிவு கைய புடிச்சிக்கினு கைத்தடிய ஊனிக்கினு நடந்துபோயி எதித்தாப்புல கண்ணுல பட்ட வீடு முன்னாலபோய்நின்னா. நின்னு மூச்ச நல்லா இழுத்து வாசன புடிச்சா. அப்புறம் மேற்கொண்டு நடந்து போனா. இப்படியே பத்து வீடுங்கள பாத்தாச்சி. இருபது வீடுங்களயும் பாத்தாச்சி; யாராவது பாத்துட்டு ''யாரு?''ன்னு கேட்டா போதும் "நான்தான்"னு சொல்லுவா சாக்கவ்வா. "என்ன ஆயா?"ன்னு கேட்டா, "ஒன்னும் இல்லப்பா"ன்னு சொல்லிட்டு மேற்கொண்டு நடப்பா. காலு வலிக்க வலிக்க அந்த சக்களத்தி கெம்பம்மா வீட்டு முன்னால நின்னு எத்தன தரம் இழுத்து இழுத்து வாசன புடிச்சாலும் ஒன்னும் தெரிஞ்சிக்க முடியல. சோர்ந்து போயி நடந்து போனா சாக்கவ்வா. இப்படியே நடந்து போய்ட்டிருக்கம்போது கமகமன்னு ஒரு வாசன ஒரு வீட்டுலேருந்து வந்து சாக்கவ்வாவ இழுத்திச்சி.

அது பர்வதய்யா வீடு. பர்வதய்யாவுக்கும் சாக்கவ்வாவுக்கும் சுத்தி வளச்சிப்பாத்தா சொந்தமாகணும். சாக்கவ்வா கதவ தட்டி, "யாரும்மா உள்ள"ன்னு கேட்டா. பர்வதய்யா பொண்டாட்டி தேவீரம்மா கதவத் தெறந்து "வா ஆயா உள்ளார.. என்ன விசேஷம்?"னு கேட்டா. வாசனய இழுத்து மூச்சு வாங்கிக்கினே உள்ள வந்தா சாக்கவ்வா. பர்வதய்யா சாப்பிட்டுகிட்டிருந்தான். தேவீரம்மாவ பாத்து சாக்கவ்வா, "மாரியத்தா திருநாவுக்கு வாங்கன அரிசில கொஞ்சம் மிச்சம் இருந்திச்சி. பேரப்புள்ளைக்காக ஆக்கனன். நம்ம சேரில யாரு களி கிண்டி சாப்புடறாங்க. அதுக்காகத்தான் கொழம்பு இருந்தா கொஞ்சம் வாங்கிட்டுப் போவலாமின்னு வந்தன்''னு சொன்னா. தேவீரம்மா சிவு கையில இருந்த கிளாஸ்த கொஞ்சம் கொழம்ப ஊத்தனா. சாக்கவ்வா, ''வரன்டி என் ராசாத்தி''ன்னு சொல்லிட்டு வெளிய வந்தப்புறம் கமகமன்னு வாசன வந்த கிளாஸ மூக்குக்கு கிட்ட வச்சி வாசன புடிச்சா. அப்புறம் கொழம்புல இருந்த ஒரு துண்டை எடுத்து குடுத்து, "தின்னு பாத்துட்டு என்ன கறின்னு சொல்லு பாப்பம்"னு சொன்னா. சிவு அதத் தின்னு பாத்துட்டு, "கறி இல்ல ஆயா இது, காளான்"ன்னு சொல்ல, "அப்படியா"ன்னு சொன்ன சாக்கவ்வா இன்னும் மிச்சமிருந்த வீடுங்களின் முன்னால நின்னு வாசன புடிக்க ஆரம்பிச்சா. கடைசியா களைச்சிப்போயி வீட்டுக்கு வந்தா.

அங்க வீட்டு மூலையில செலுவம்மாவும் பக்கத்து வீட்டுக்காரி காளக்காவும் நின்னுட்டிருந்தாங்க. சாக்கவ்வாவும் சிவும் உள்ள போகறவரிக்கம் சும்மா இருந்த காளக்கா அப்பறமா, "அண்ணி.. ஒரு விஷயம் கேக்கறன். இல்லன்னு மட்டும் சொல்லக்கூடாது"ன்னு சொன்னா. செலுவம்மா, "என்ன வேணும் சொல்லு. வச்சிகிட்டு இல்லன்னு சொல்லப்போறனா"ன்னு கேட்டா. அப்ப காளக்கா, "ஒன்றும் இல்ல அண்ணி, அடுப்புல களி கிண்டறதுக்கு பாத்திரம் வச்சிட்டு வந்தன்.. மாவு பத்தாது போல இருக்குது. ஒரு சேர் மாவு இருந்தா குடு. நாளைக்கு மில்லில அரச்சி கொண்டாந்தப்பறம் கொடுத்துடறேன்"னு சொன்னா, செலுவம்மா நெத்தியிலயே அடிச்சிகிட்டா... "என் மேல சத்தியமா... மாவு இல்ல. வச்சிகிட்டு இல்லன்னு சொல்வானா?"ன்னு சொன்னா காளம்மா மூஞ்சிபோன போக்கு அந்த இருட்டுல ஒன்னும் தெரியல. செலுவம்மா கதவ சாத்திகிட்டு உள்ள வந்தா.

சாக்கவ்வா வழக்கமான எடத்துல உக்காந்து, "கடைசி வரலயும் கெடைக்கலியேப்பா சிவனே.. அத வளக்கறதுக்கு நா எவ்ளோ கஷ்டப்பட்டிருப்பன் கடவுளே.. ஐயோ என் குலதெய்வமே.. இன்னும் நீ பாத்துக்கிட்டுத்தான் இருக்றயா... இல்ல கண்ண மூடிக்கிட்டு இருக்கறயா"ன்னு பெனாத்த ஆரம்பிச்சா. கிளாஸ்ல இருந்த கொழம்ப வியாதி புடிச்ச அந்தப் புள்ள நாக்குல ஊத்தி ருசி பாத்திச்சி.

## V

வியாதிக்காரப் பையன் நாக்கால நக்கி ருசி பாத்துட்டிருக்கும்போது வெளியுலக இருட்டிலேருந்து வீட்டுக்குள்ள இருக்கற இருட்டுக்கு வந்தான் காளண்ணன். வீடு அமைதியா இருந்திச்சி. முதுகுல சுமந்து வந்த மூட்டைச் சுமைய வெளித்திண்ணைல எறக்கி வச்ச காளண்ணன் மெதுவான குரல்ல பொண்டாட்டிய கூப்புட்டான். மூட்டை சுமந்து வந்த பாரத்துல உடம்புல வேர்த்திருந்திச்சி. அறைக்குள்ள மினுக் மினுக்னு எரிஞ்சிட்டிருந்த வெளக்கு தெரிஞ்சது. வந்து நின்ன பொண்டாட்டிகிட்ட, "சோளத்தட்டய போட்டு எரிய வச்சி

சமையல்கட்டுல கொஞ்சம் வெளிச்சம் காட்டு''ன்னு சொன்னான். அவள் சோளத்தட்டைங்கள அறைக்குள்ள எடுத்தும் போயி அங்க இருந்த வெளக்கல பத்தவச்சி எடுத்து வந்து, அந்த நெருப்புல இன்னும் கொஞ்சம் மௌார், சுள்ளி போட்டு எரிக்க, குடிசைக்குள்ள வெளிச்சமாச்சி. அந்த வெளிச்சத்துலு குடிசைக்குள்ள எல்லாத்தயும் தெளிவா பாக்க முடிஞ்சது.

காளண்ணன் மூட்டையைப் பிரிச்சி பாதி அளவுக்கு நெருப்பு வெளிச்சத்துக்கு முன்னால தரையில கொட்டினான். வேர்க்கடல அம்பாரமா குவிஞ்சது. அதுக்குப் பக்கமாத்தான் செவுத்தோரமா சாக்கவ்வா கால நீட்டி நொய்னு தலையை சுத்திச் சுத்தி வந்த கொசுவ அடிச்சிக்கினே படுத்திருந்தா. இங்க எழுந்த வெளிச்சம் அவ மூஞ்சில போய் அடிச்சது. அவ என்னமோ கோபமா இருக்கற மாதிரி தெரிஞ்சிது. காளண்ணன் ரெண்டு கடலய உரிச்சி வாய்க்குள்ள போட்டபடியே "அங்கயே எதுக்கும்மா படுத்திருக்க.. வாம்மா''ன்னு சாக்கவ்வாவ கூப்புட்டான். சாக்கவ்வா கைத்தாங்கலுக்கு "சிவு... இங்க வாப்பா"ன்னு கூப்புட்டா.

கொஞ்சம் கொஞ்சமா கொறஞ்சிகிட்டே வந்த வெளிச்சத்து முன்னால சாக்கவ்வாவும் சிவுவும் வந்து உக்காந்தாங்க. அந்த நெருப்புப் புகை பூமித்தாய் நாக்கு மாதிரி நாலுபக்கமும் பரவி கொசு, பூச்சிகளின் மூச்சக்கட்டி, குடிசை மூலைப்பக்கமா வெரட்டியடிச்சது. வேர்க்கடலத்தோல அந்த நெருப்புலயே போட்டபடி காளண்ணன் பொண்டாட்டி பக்கத்துல இருந்த கௌரம்மாவப் பாத்து, "வாம்மா இங்க.. அங்க என்ன பண்ணிட்டிருக்கே?"ன்னு கூப்புட்டா. அங்க இருந்த கௌரம்மா, சின்ன கௌரி ரெண்டு பேரும் வந்தாங்க. சின்ன கௌரி மூஞ்சில அந்த நெருப்பு வெளிச்சம்பட்டு, அந்த மூஞ்சி லேருந்துதான் வெளிச்சம்ங்கறது கௌம்பி குடிசைக்குள்ள மத்த எடங்கள்ள பரவனமாதிரி இருந்திச்சி. அவுங்க எல்லாருமே வேர்க்கடலய உரிச்சி உரிச்சி தின்னுகிட்டே, தோல எல்லாம் நெருப்புல போட்டிட்டிருந்தாங்க.

காளண்ணன் கண்ணால செஞ்ச சைகைய புரிஞ்சிகிட்ட அவம் பொண்டாட்டி இன்னொரு பக்கம் திரும்பி செலுவம்மா பக்கம் பாத்து, "நீயும் வாம்மா"ன்னு கூப்புட்டா. செலுவம்மா, "புள்ளைங்க படுத்திட்டுதுங்கக்கா. உடுக்கா, நாளைக்கிப் பாத்துக்கலாம்''ன்னு சென்னா. "இருக்கட்டும்டி. பசங்கள எழுப்பி இட்டாம்மா"ன்னு சொன்னபடியே காளண்ணன் பெண்டாட்டி எழுந்து உள்ள போயி அவ ரெண்டாவது

பையன எழுப்பி கையப்புடிச்சி இட்டுக்கினு வந்தா.

தூங்கிட்டிருந்த கைக்கொழந்தை மேல போர்வைய இழுத்துச் சரியா போர்த்திட்டு, மத்த ரெண்டு பசங்களயும் எழுப்பி, கண்ண கசக்கன பசங்க ஒன்னொன்னையும் கையப் புடிச்சிக் கூப்புட்டுக்கினு வந்த செலுவம்மா, காளண்ணன் பெண்டாட்டி பக்கத்துல உக்காரவச்சா. உக்காந்துட்ட செலுவம்மா எழுந்து மறுபடியும் அறைக்குள்ள போயி வெளக்க எடுத்து வந்து பெட்டி மேல வச்சா. “அது எதுக்கும்மா, நிறுத்திடு”ன்னு கௌரம்மா சொன்னா. “இருக்கட்டும் விடு”ன்னு பதில் சொன்ன செலுவம்மா கடலய உரிச்சி வாய்ல போட்டுக்க ஆரம்பிச்சா.

அங்க இருந்த நெருப்பு பொகயாவும் நெழலாவும் வெளிச்சமாவும் சுத்தி இருக்கறவங்க மேல ஆடிச்சி. பெட்டி மேல இருந்த வெளக்கு தன் சக்திக்குத் தகுந்த மாதிரி வெளிச்சத்த அவுங்க முதுகுமேல அடிச்சிது. அப்ப உள்ள வந்த சண்ணய்யன் பெரிய பையன் பக்கத்துல உக்காந்து நெருப்பு முன்னால கைய நீட்டி “என் அப்பனே, சிவனே”ன்னு சொன்னான். அவனும் வேர்க்கடலய எடுத்து உரிச்சிச் சாப்பட ஆரம்பிச்சான்.

கடல உரிச்சி சாப்ட்டவங்க முன்னால அவுங்கவுங்க சக்திக்கு உரிச்சதுக்குத் தகுந்த மாதிரி கடலைதோலுங்க குமிஞ்சு கெடந்துச்சு. அங்கிருந்து பட்டுப்புழுங்க இருக்கற தட்டுல தழைய தூக்கிப்போட்டமாதிரி சத்தம் வந்திச்சி. உள்ள சத்தம் நின்னபோதெல்லாம் வெளியேருந்து சத்தம் வந்திச்சி. வெளியே ஒரு நாயி ஒரேயடியா கொறச்சிட்டே இருந்திச்சி. அதையும் மீறி கோயில்ல ஆர்மோனியம் வாசிக்கற சத்தம் கேட்டுச்சி.

சண்ணய்யன்: மழ கிழ வந்திச்சா?

காளண்ணன்: எந்த ஊருலேருந்துய்யா மழ வரும். பெரிசா மழ வந்திச்சாம் மழ.

சாக்கவ்வா: இந்தப் பாழாப்போன ஊருக்கு மழ ஒன்னுதான் கொறைச்சல், போ.

காளண்ணன்: ஐயோ, நானும் எவ்வளவோ ஊரு சுத்திட்டேன். அந்த எத்தப்பா கட்டி இருக்கற மாட்டுக் கொட்டாவ பாத்தா, பாத்த கண்ண எடுக்க முடியாது.

சண்ணய்யன்: நா பாககலியா என்ன? நடக்க நடக்கப் போய்கிட்டே இருக்குது தேவடியா மவன்து.

காளண்ணன்: நம்ம அம்மாக்காரி அந்த மாதிரி ஏதாவது

ஊடு கட்டியிருந்தான்னு வையி, இன்னம் என்னென்ன பேசுவாளோ...

காளண்ணன் சொன்னதக்கேட்டு எல்லாரும் ரொம்ப நேரம் உழுந்து உழுந்து சிரிச்சாங்க. அந்த எடமே சந்தோஷமா இருந்திச்சி.

அப்ப சிவு வேர்க்கடல நெருப்புல போட்டு சுட்டுச் சாப்புட்டான். புள்ள பேச்சக்கேட்டு சாக்கவ்வா, "நீங்க இருக்கறீங்கல்ல... புலி மாதிரி மூணு புள்ளைங்க.. வாங்கிக்கட்டுங்கடா"ன்னு சொன்னா. அதே நேரத்துல யாரோ வெளியில கதவு தட்டனமாதிரி சத்தம் கேட்டுது. அதனால அவுங்க பேச்சு அ் த்தோட நின்னுது. "அண்ணி- அண்ணி"ன்னு யாரோ வெளியில இருந்து கூப்புறமாதிரி கேட்டுது. காளண்ணன் பெண்டாட்டி கதவு தெறந்து யாரு"ன்னு கேட்டா. காளக்கா "நான்தா"ன்னு பதில் சொல்றது கேட்டுது. இருட்டுல காளக்கா நிக்கறது தெரியல. "அண்ணி, ஊட்டுல பையன் அழுதபடி படுத்திருக்கான். மூணு நாளா கூலி வேலைக்குக்கூட யாரும் கூப்புடல. ஏதாவது இருந்தா கொஞ்சம் கொடுங்க..."ன்னு கேட்டா காளக்கா. காளண்ணன் பெண்டாட்டி திரும்பி வந்து சுட்ட கடலைய நாலு கை அள்ளி முந்தானைல போட்டு எடுத்துக்கினு நிமுந்தா. சாக்கவ்வா அவள கைச்சைகையாலயே கூப்புட்டு அவ மடியில கையவிட்டு ஒரு கை கடலய அள்ளி எடுத்து மறுபடியும் கீழ போட்டா. அதுக்கப்புறம் விறுவிறுன்னு நடந்துபோன காளண்ணன் பெண்டாட்டி கடலய கொடுத்து காளக்காவ அனுப்பிட்டுத் திரும்பி வந்தா.

அங்க இருந்தவங்க தின்னற மும்முரத்துல எதயும் கவனிக்காம இருந்தாங்க. வாய்க்குள்ள கடலயும் நெருப்புல தோலும் விழுந்துகிட்டே இருந்திச்சி. அந்த நேரத்துல—

காளண்ணன்: அந்த எத்தப்பன் மாட்டுக் கொட்டா இருக்கட்டும். அங்க இருக்கற மாடுங்கதான் எப்படி இருக்குது தெரியுமா...

சண்ணய்யன்: ஒவ்வொன்னும் ஆன மாதிரில்ல இருக்குது.

சாக்கவ்வா: அந்த மாதிரி ஒரு எருமை செத்தா, நம்ம சேரில கொஞ்சம் தரித்தரமாவது கொஞ்சம் கொறையும்.

கௌரம்மா: கொஞ்சம் சும்மா இருமா. நீ மூணு காசு கோழி போனதுக்கே அந்தப் பேச்சு பேசற. இன்னும் அவுங்க

எருமை போயிடுச்சின்னா எப்படியெல்லாம் பேசுவாங்க?

காளண்ணன் மனைவி: சரியாச் சொன்ன நீ..

காளண்ணன்: எத்தப்பனே கஷ்டப்பட்டு வேர்வய சிந்தி சம்பாதிச்சி வாங்கி வச்சிருக்கான். போனாலும் அவன் நெலம ஒன்னும் கொறஞ்சிடாது... குவிச்சி வச்சிருக்கிற வட்டிப் பணத்துலயே இன்னம் ஒண்ணும் வாங்கிக்குவான்.

செலுவம்மா: சிவசிவா.. அவுரு பொண்ணு கல்யாணம் இன்னும்கூட என் கண்ணுமுன்னாலயே இருக்குது. அந்த மாதிரி பூந்தி யாரு போடுவாங்க. கை நீட்டனவங்களுக்கெல்லாம் அள்ளி அள்ளிக் கொடுத்தாங்க... இதோ... இவ்வளவு.. இவ்வளவு...

காளண்ணன் மனைவி: நம்ம சின்னகௌரி கல்யாணத்தயும் அப்படியே செஞ்சிடலாம்.. உடு..

கண்ணய்யன்: அந்த அளவுக்கு நம்ம கையால பண்ண முடியுமா.. நம்ம கையால எவ்வளவு பண்ண முடியுமோ அவ்வளவு பண்ணா போதும். நாலு பேரு நல்லா இருக்குதுன்னு சொல்லற அளவுக்கு பண்ணலாம்.

அனல்பட்டு உடம்பு வேர்க்க உக்காந்திருந்தா சின்ன கௌரி.

பிள்ளைகள் பேச்சையெல்லாம் மனசுக்குள் வாங்கி அசைபோட்டபடி கடலையைத் தின்னுகிட்டே, "அவ்வளவு பண்ணுங்கடா என் புள்ளைங்களா.. நான் கண்மூடறதுக்குள்ள அந்தப் புள்ளைக்கு ஒரு வழி காட்டுங்க"ன்னு சொன்ன சாக்கவ்வா. அம்மா பேசனதக் கேட்டு சண்ணய்யா, "அவனுக்கு நாம என்ன கல்யாணம் பண்ணி வைக்கறது... யாரயாவது கட்டிக்கினு வந்தான்னா சரிதான்''னு சொன்னான் காளண்ணன் சிவுவப்பாத்து, "டேய்.. ஒன் சின்ன மாமாவயும் கூப்புட்டுக்கினு வா. அங்க ஆர்மோனிய சத்தம் கேக்குது பாரு.. அங்கதான் இருப்பான். அவனும் கொஞ்சம் சாப்பிடட்டும்"னு சொன்னான். "இந்த இருட்டுல நா எப்படி போவறது"ன்னு கேட்டான் சிவு. சின்ன கௌரி, "நா அங்க நின்னுகிட்டிருக்கேன்.

நீ போய் கூப்புட்டுக்கினு வா"ன்னு சொன்னா. சரின்னு ரெண்டு பேரும் எழுந்தாங்க. செவுத்துப் பக்கம் மூஞ்சிய காட்டிட்டு உக்காந்திருந்த டெபுடி கமிஷனர் நடக்க முடியாம மெதுவா நவுந்து நவுந்து அங்க வந்திச்சி. தனக்கு முன்னால வச்ச உரிச்ச கடலய எடுத்து ஒவ்வொன்னா நிதானமா வாய்ல போட்டு மென்னு சாப்பிட ஆரம்பிச்சிது.

சின்ன கௌரியும் சிவுவும் இருட்டுல எறங்கி நடந்தாங்க. சும்மா கண் பழக்கத்துலயே கல் எங்க, மண்ணு எங்க, சாக்கடை எது, ரோடு எதுன்னு தெரிஞ்சி தாண்டித் தாண்டிப்போயி மாரியாத்தா கோயில் திருப்பத்துல நின்னா சின்னகௌரி. கோயில்ல நாடகப் பயிற்சி எதுவும் நடக்கல. சின்னசாமிங்கறவன் ஆர்மோனியப் பொட்டிய வச்சிகிட்டு "யாருக்குத் தெரியும் உன் தோள் வலிமையும் திறமையும் இந்த உலகில்..."ங்கற சினிமாப்பாட்டுக்குத் தகுந்த மாதிரி வாசிச்சிட்டிருந்தான். ஆர்மோனிய வாத்தியார் தூங்கி வழிஞ்சிகிட்டே வாசிச்சிட்டிருந்தாரு. வாய்ல இருந்த பீடி அணைஞ்சி போயிருந்தாலும் வாய்லயே வச்சிருந்தான். தபலா வாசிக்கற பையன் இன்னும் மோசம். கைக்கு வந்தபடி தப்புத் தப்பா அடிச்சிக்கினிருந்தான்.

மாரியாத்தா கோயில் உச்சில கட்டி இருந்த வெளக்கு வெளிச்சம் கீழ உக்காந்திருந்த பத்து பதினஞ்சி ஆளுங்க மேல விழுந்திச்சி. அதயும் தாண்டி கொஞ்சமா இருட்டு இருந்திச்சி. அதுக்கப்பறம் மூஞ்சிகூடத் தெரியாத அளவுக்கு இருட்டு. அங்கேருந்து வந்த பீடிப்பொக பாட்டுப்பாடறவன் தாளத்துக்குத் தகுந்த மாதிரி உக்காந்திருந்தவங்க தலைமேல நெளிஞ்சிட்டிருந்திச்சி. பாடிட்டிருந்த சின்னசாமி கோயிலே இடிஞ்சி உழற மாதிரி சத்தம் போட்டு பாடுனான். அங்க இருந்த ஜனங்களும் அதே மாதிரி சத்தம் போட்டு பாடுனாங்க. தாளத்துக்கத் தகுந்த மாதிரி அவுங்க உடம்பும் ஆடுச்சி. சின்ன கௌரியும் நாலு அடி முன்னால வந்து நின்னா.

மாமனின் விரலைப்

| | |
|---|---|
| பிடித்தபடி சிவு: | மாமா கூப்புட்டாரச் சொன்னாரு வா. |
| குருசித்தன்: | நீ போ.. நா வரேன்.. |
| சிவு: | வா மாமா போவலாம் |
| குருசித்தன்: | இருடா போவலாம் |
| சிவு: | வா மாமா |
| குருசித்தன்: | இருடா |

இப்படியே பேசிட்டிருந்தாங்க. மத்தபடி பாட்டுக்குத் தகுந்த மாதிரி தாளம்போட்டு ஆடிட்டிருந்தாங்க. பாடிட்டே இருந்த

சின்னசாமி கள்ளச்சிரிப்பு சிரிச்சபடி, குருசித்தன் பக்கம் உத்துப்பாத்து கைய காட்டி, “போ- போடா சிகண்டி”ங்கற பாட்ட ஆரம்பிச்சிட்டு அப்படியே நிறுத்துனான். அவன் நிறுத்தறதுக்கு மொதல்லியே உக்காந்திருந்தவங்க கொல்னு சிரிச்சிட்டாங்க. குருசித்தனும் சிரிச்சிகிட்டே சிவு கையப் புடிச்சி எந்திரிச்சு நடந்தான். போவப்போவ குருசித்தன் முன்னால நடக்க, அவனுக்குப் பின்னால் சிவுவும் சின்னகௌரியும் நடந்தாங்க. கொஞ்சம் தொலைவா குருசித்தன் முன்னால போனப்பறம் சின்ன கௌரி குனிஞ்சி சிவு காதுக்குள்ள, “அது யாருடா பாட்டு பாடுன ஆளு?”ன்னு கேட்டா. அதுக்கச் சிவு, “சின்னசாமி அண்ணன் சின்னசாமி அண்ணன்னு சொல்றாங் கல்ல, அவர்தான் அது”ன்னு சொன்னான். அவனையும் அவன் பாட்டயும் மனசுக்குள்ள நெனச்சிகிட்டே நடந்தா சின்னகௌரி.

குருசித்தன் உக்காந்ததும் சுட்ட கடலய அவன் முன்னால கொஞ்சம் வச்சாங்க. அள்ளி எடுக்க கைய நீட்டனான் அவன். அவன் கையில கட்டி இருந்த வாட்ச் நெருப்பு வெளிச்சத்துல பளபளன்னு மின்னுச்சி. எல்லார் கண்ணும் அதும்மேல திரும்பிச்சி. குருசித்தன் கைபோன பக்கமெல்லாம் சிவு கண்ணு போச்சி. காளண்ணன், “யாருதுய்யா கடியாரம்?”னு கேக்க, குருசித்தன் “என்னதுதான். வாங்குனேன்”னு சொன்னான். “பூ- வாங்கனானாம் இவன்- சூதாட கடன் வாங்கிட்டு திருப்பித் தர முடியாம சைக்கிளயே அடவு வச்சிட்டு வந்த ஆளு இவன்- அதே மாதிரி இவன்கிட்ட யாராவது அடகு வச்சிருப்பாங்க...”ன்னு சொன்னான் சண்ணய்யன். வாய்ல கடலய அடச்சிக்கினே “சும்மா இருண்ணா”ன்னு சொன்ன குருசித்தன் பேச்ச மாத்தி “அண்ணா, நேத்து தகடூர்க்கு போயிருந்தேன். அங்க நம்ம சிவபசப்பா ஓட்டலுக்குப் போனா- அடேங்கப்பா- எவ்ளோ ஜனங்க தெரியுமா- நாங்க போனதுமே காசாவோ கடலயாவோ கையில இருக்கறத குடுத்துட்டு டிபன் காபி குடுங்கன்னு கேப்போம்... சிவபஸப்பா வேர்த்து விறுவிறுத்துடுவாரு.. அப்பறம் போலீஸ்காரங்க வந்துருவாங்க.. நாங்க குடுத்துருவம். சும்மா இருங்க சும்மா இருங்கன்னு சொல்வாங்க. ஜனங்கள்ளாம் என்னமோ வித்தைய பாக்கற மாதிரி வேடிக்கை பாப்பாங்க. நாம எதுக்கு சும்மா இருக்கணும்ன்னு காச குடுத்துட்டு, “தோசயும் டீயும் குடுங்க”ன்னு சொன்னான். என்னயே உர்உர்னு பாத்துக்கினே சிவபசப்பா கொண்டாந்து குடுப்பான்...”னு சொல்லிட்டு எல்லாரயும் பாத்தான். எல்லாரும் அவன் சொன்னதயே காதால கேட்டு, அத கண்ணுக்குள்ள காட்சியா நெனச்சிப்பாத்துக்கினே

கடலய தின்னுட்டிருந்தாங்க. குருசித்தன் வாட்ச்ச பாத்தபடி, "போதும்... என் வேஷம் வர நேரமாய்ட்டுது"ன்னு ஏந்திருந்தான். சண்ணய்யன், "இருடா... வெல்லம் இருந்தா டீ போடலாம்"னு சொன்னான். கைய ஆட்டிக்கினே குருசித்தன் போனதுமே, சின்ன கௌரி, "ஓட்டல டீ குடிக்கற ஆளுக்கு ஊட்டுல போடற கடுங்காப்பிய குடிப்பானா"ன்னு சொல்லிட்டே அவன் பின்னால போயி கதவ மூடி தாழ்ப்பாள போட்டுட்டு வந்து உக்காந்தா.

அப்ப, தின்ன வாக்கிலயே தூங்கித் தூங்கி உழுந்தான் சிவு. ஆனா அவன தூங்க உடக்கூடாதுங்கறதுக்காக, அடிக்கடி "டே சிவு"ன்னு சொல்லிட்டே இருந்தான் அவன் மாமங்காரன். அதனால அவனும் கண்ண முழிச்சிப் பாத்தான். அப்ப மாமங்காரன் "உன் கையில பத்து பைசா குடுக்கறேன்.. ஊருக்குள்ள போயி பால் வாங்கியா. அப்படி வாங்கியாந்துட்டா உன்னப்போல வீரன் உலகத்துலியே இல்லப்பா"ன்னு சொன்னான். சிவு, "ஐயோ, போ... மாமா... ஊருக்குள்ள நாய்ங்க என்னைப் பாத்தா போதும் மேல உழுந்து புடுங்க வரும்"னு கண்ண மூடிக்கிட்டே சொன்னான். வாய் மட்டும் மென்னபடி இருந்திச்சி. அவன் பேசன விதத்தப் பாத்து அங்க இருந்தவங்க எல்லாரும் சிரிச்சாங்க.

அடுப்பு மேல ஒரு பெரிய பாத்திரத்த வச்ச செலுவம்மா, அதுல மூணு கிளாஸ் தண்ணிய ஊத்தி, பத்துபைசா டீ பொடியயும் போட்டு அடுப்ப எரிய வச்சா. பூமித்தாயி ஒரு பக்கத்திலேருந்து இன்னொரு பக்கத்துக்குப் பொரண்டு உஸ்னு மூச்சு வாங்கனபடி படுத்தா.

# VI

அந்த நேரத்துல ஒரு கை வந்து சாக்கவ்வா வீட்ட பூட்டிச்சி. அது போலீஸ் கான்ஸ்டபிள் ரேவண்ணனுடைய கை. கடந்த ஆறு மாசமா மிராசுதாரர் எத்தப்பன் இன்ஸ்பெக்டர் ஐயாகிட்ட சொல்லி வச்சிருந்தாரு. அவரு மில்லிலேருந்து தொடர்ந்து முப்பது நாப்பது சேர் ஆகற அளவு வேர்க்கடல தெனமும் காணாம போய்க்கிட்டே இருந்தது. ஆளு மட்டும் கெடைக்கற வழிய காணோம். ஆனா கொடுக்க வேண்டிய மாமூல் மட்டும்

ஒழுங்கா போய்ட்டே இருந்தது. மறுபடியும் மிராசுதார் இன்ஸ்பெக்டர் ஐயாவ பாத்து "என்ன ஐயா.. நடக்கற திருட்டு நடந்துட்டே இருக்குது"ன்னு சொன்னப்போ, 'சும்மா இருங்க மிராசுதாரரே. அங்க ஒரு பி.ஸியயே டூட்டிக்குப் போட்டுட லாம்"னு சொன்னாரு இன்ஸ்பெக்டர் ஐயா. சொன்ன வார்த்த தப்பாம ரேவண்ணன்னு ஒரு பி.ஸி.ஐ போட்டாரு.

பி.ஸி. ரேவண்ணன் எல்லா வகையிலும் ரிட்டயர் ஆவறதுக்கு காத்திட்டிருந்தான். கடவுள் குடுத்த குச்சி மாதிரியான ரெண்டு கைகளயும் ஆட்டிக்கினு பீடி குடிச்சிகினு இருமிக்கினும் தூங்கி வழிஞ்சிக்கினும் ஸ்டேஷன்லயே இருப்பான். அதத் தவிர அவன யாரும் எங்கயும் அனுப்பனதும் இல்ல. இவனும் போனதும் இல்ல. ரெண்டு பொண்டாட்டியும் பத்து பன்னெண்டு புள்ளைங்களும் இருந்தாங்க. அதுவே அவனுக்கு பெரிய மெரீட்டா இருந்திச்சி. அவன் வயித்துல அடிச்சா, அது அவன் பொண்டாட்டி புள்ளைங்க வயித்துல அடிச்ச மாதிரி ஆயிடும்னு நெனச்சி எல்லாரும் அனுசரிச்சி நடந்தாங்க. இப்படி இருக்கும்போதுதான் ஒரு நாளு இன்ஸ்பெக்டர் ஐயா அவனக் கூப்புட்டு ஸ்பெஷல் டூட்டிக்கு போட்டிருக்கிற விஷயத்தச் சொல்லிப்போடான்னு அனுப் பினப்போ ரேவண்ணனுக்கு நம்பிக்கையே வரல. ஏதோ அறிமுகமே இல்லாத ஒரு வேலய செய்யச் சொன்னமாதிரி ஒரு மாதிரி சந்தோஷமும் பயமும் கலந்து வந்திச்சி. எது என்னமோ, ஒன்னு மட்டும் நெஜம்—பொண்டாட்டி புள்ளைங்க துன்பத்திலேருந்து பெரிய விடுதலை கெடைச்சமாதிரி இருந்திச்சி.

இங்க, ரேவண்ணன் ரெண்டு வேளயும் நல்லா சாப்புட்டு ஒடம்ப வளத்துக்கினு தன்னுடைய டூட்டிய ரொம்பவும் நம்பிக்கையோட தொடங்கனாரு. அவருக்கு இருந்த தன்னம்பிக்கை ஒருநாள் இல்லன்னாலும் இன்னொரு நாளு பலன் கொடுத்திச்சி. ஊரே தூங்கி, மாரியாத்தா கோயில், சத்திரம் எல்லா எடங்களும் அடங்கிட்ட சமயத்துல ரேவண்ணன் கம்பளிய போத்திக்கினு யார் கண்ணுலயும் படாத உக்காந்திருந்தாரு. தடியா, உயரமா ஒரு ஆளு உள்ள வந்தான். கொண்டு வந்த சாக்குல வேர்க்கடலய வாரிப்போட்டான். எடுத்துக்கினு நடந்தான். அவ்வளவு நடக்கறபோதுகூட எழுந்துபோயி ஆளப்புடிக்கற அளவு அவருக்கத் துணிச்சல் வரலை. சத்தம் போட்டு கூவறதுக்கும் துணிச்சல் வரலை. ஆனா தன் காலயே கண்ணாக்கிக்கிட்டு திருடனயே பின்தொடர்ந்து போனாரு ரேவண்ணன். ஆளு ஒரு குடிசைக்குள்ள போனான்.

புடிச்சி கலாட்டா பண்ணனும்னு நெனச்சித் தயாரான சமயத்துல குடிசைக்கு எதித்தாப்புல ஒரு நாய் கொலச்சிது. ரேவண்ணன் அத சமாதானப்படுத்த முயற்சி செஞ்சாரு.

ரேவண்ணன் உக்காந்திருந்தாலும் அவரு போலீஸ் மூள வேல செஞ்சிது. எப்படியும் இனிமே ஆளு தப்பிக்கறதுக்கு வேற வழியே இல்ல. திருடனப் புடிக்கறதோட திருடனுக்குக்கூட இருக்கற கும்பலயும் ஒரே சமயத்துல புடிக்கணும்னு நெனச்சாரு. அதுக்காக அந்தக் குடிசைக்குள்ள யாரு போறாங்க யாரு வெளிய வராங்கன்னு கவனிச்சபடி உக்காந்திட்டிருந்தாரு. அப்ப கெடைச்ச விஷயங்கள். பாய்ண்ட் நெம்பர் ஒன்னு—மெலிசா ஒரு ஆளு உள்ள போனப்பறம் ஒரு வயசு வந்த பொண்ணு வந்து வாசல்லயே நின்னு உள்ளேயிருந்த வந்த பொம்பளையோட பேசிச்சி. இந்தப் பொம்பள அந்தப் பொம்பளைகிட்ட ஒரு சேர் ஆகற அளவு வேர்க்கடலய கொடுத்த மாதிரி இருந்திச்சி. பாய்ண்ட் நெம்பர் ரெண்டு—ஒரு வயசு வந்த பொண்ணும் ஒரு பையனும் (நடைய வச்சிப் பாத்தா அப்படித்தான் தெரிஞ்சிது) மாரியாத்தா கோயில்பக்கம்போயி மறுபடியும் இன்னொரு ஆளக் கையோட கூப்பிட்டுக்கினு குடிசைக்குள்ள போனாங்க. அந்த ஆள அப்பறம் ஒரு மணி நேரம் கழிச்சி திரும்பவும் மாரியாத்த கோயில்பக்கம் போச்சி. அந்த ஆள் பீடி பத்தவச்ச வெளிச்சத்தில பாத்தத வச்சி சொல்லணுமின்னா, அவன் கையில ஒரு வாட்ச் இருக்கணும். இந்தத் திருட்டுல முக்கிய ஆளா அவன்தான் இருக்கணும்னு தோணிச்சி. ரேவண்ணன் அந்த மூஞ்சிய மனசுக்குள்ளயே நோட் பண்ணிகிட்டாரு. இதுக்கப்புறம் பாய்ண்ட் நோட் பண்ணிக்க எந்த விஷயமும் கிடைக்கல. அடுத்த பாய்ண்ட்டுக்காக ரேவண்ணன் காத்திட்டிருந்தாரு.

ஆளப் பாத்ததும் மொதல்ல கொரைக்க ஆரம்பிச்ச நாய் இப்ப வந்து ரேவண்ணன் கால நக்க ஆரம்பிச்சிது. மாரியாத்தா கோயில் பக்கத்திலேருந்து பாட்டுப்பாடற சத்தமும் சிரிப்பும் சுத்தமா நின்னு, குறட்டை விடற சத்தம் கேட்டிச்சி. கண்ண மூடன ரேவண்ணனுக்கு தூக்கம் கயித்த கட்டி இழுக்கற மாதிரி இருந்திச்சி. கடைசியா சுய நெனைவு இருக்கற சமயத்திலயே எழுந்துபோய் வெளிய கதவ இழுத்து சாத்திப்பூட்டு போட்டுட்டு மொதல்ல இருந்த எடத்துக்கு வந்து உக்காந்தபடியே கண்ண மூடுனாரு. அதுக்குள்ள தூக்கம் வேற எங்கயோ போய்ட்டுது. அந்தக் குளிரத் தாங்காம அவர் கைகாலு டகாடகான்னு நடுங்க ஆரம்பிச்சிது. பெரிய பெரிய மீசை வச்சிக்கினு தான்தான் பெரிய போலீஸ்காரன்னு சொல்லிட்டு மினுக்கற கூட வேல

செய்ற பி.ஸிங்களும வாயத் தெறந்தா போதும் திட்டற இன்ஸ்பெக்டர் ஐயாவும் நாளைக்கு இந்த ரேவண்ணன எப்படி அதிசயமாப் பாப்பாங்கன்னு கனவு கண்டுக்கினே அந்தக் குளிரயும் தன்னயும் மறந்தபடி உக்காந்திட்டிருந்தாரு.

## VII

பர்னு ஜீப் வந்து நிக்கவும் விடிஞ்சி வெளிச்சம் விழவும் சரியா இருந்திச்சி. ரேவண்ணன் சட்டைத் துணிய தட்டி ஒழுங்கு படுத்திக்கிட்டு பக்கத்தில இருந்த தொப்பிய எடுத்து தலையில போட்டுக்கினு அட்டென்ஷன்ல நின்னாரு. ஜீப் நின்னதும் பின்னாலேருந்து போலீஸ்காரங்க சட்சட்னு குதிச்சாங்க. முன்னாலேருந்து இன்ஸ்பெக்டர் ஐயா எறங்குனாரு. ஜீப் சத்தம் கேட்டு ரெண்டு மூணு குடிசைலேருந்து யாராரோ எட்டிப் பாத்தாங்க.

இன்ஸ்பெக்டர் எறங்கறனப்பறம் அட்டென்ஷன்ல நின்னுட்டிருந்த ரேவண்ணன் சல்யூட் அடிச்சாரு. புழுவக் கொத்திக்கிட்டு வந்த கோழிக்குஞ்ச பாக்கற கோழி மாதிரி ரேவண்ணனப் பாத்தாரு இன்ஸ்பெக்டர் ஐயா. "சபாஷ்டா- இத்தன வருஷம் வேல பாத்ததுக்கு இன்னைக்குதான்டா சரியான வேல செஞ்ச"ன்ன சொன்னாரு- கூட இருந்த பி.ஸிங்க கண்ணுலயும் ஆச்சரியம். எதுவும் செய்யத் தோணாம புளகாங்கிதப்பட்டு நின்னாரு ரேவண்ணன். இன்ஸ்பெக்டர் "அப்பறம் என்னடா"ன்னாரு. ரேவண்ணன், "ஐயா, பொருளு, திருடன் ரெண்டுமே அந்தக் குடிசைக்குள்ள இருக்குது. குடிசைய சாத்தி பூட்டு போட்டு ராத்திரி பூரா காவல் இருந்தன். கொஞ்சம்கூட தூங்கல சார்"ன்னாரு.

ஒடனே நாலு பி.ஸிங்களும் சேர்ந்து போயி பூட்டத் தெறந்து கையாலயும் காலலயும் கதவ ஒதைச்சாங்க. அதுக்கள்ள பத்து பதினஞ்சி பேரு தூர தூரமா நின்னுக்கினு என்ன நடக்கிதுன்னு கண்ணக்கூட எமைக்காம வேடிக்கை பாத்தாங்க. அந்த சத்தம் தூங்கிட்டிருந்த சாக்கவ்வா காதுல விழுந்திச்சி, "எவன்டா அவன்.. கதவப் போட்டு அந்த அடி அடிக்கறா..னு திட்டிக்கினே எழுந்துபோயி கதவத் தெறந்து பாத்தா. எமதூதருங்க மாதிரி போலீஸ்காரங்க நின்னுட்டிருந்தாங்க. அவ உடம்பு தூக்கிவாரிப்

போட்டமாதிரி ஆயிடுச்சி. நடுங்கிக்கினே, ''என்னாச்சி சாமி''ன்னு கேட்டா. அவளயோ, அவ பேசனதயோ கொஞ்சம்கூட லட்சியம் செய்யாம உள்ள நொழஞ்ச போலீஸ்காரங்க பூட் சத்தம் சரக் சரக்னு கேட்டுது.

பொறுமையா உள்ள வந்த இன்ஸ்பெக்டர் பொறுமையா எல்லா எடங்களையும் உத்து உத்துப் பாத்தாரு. குடிசைக்குள்ள முழுசா பாத்தப்பறம் சாக்கவ்வாகிட்ட, "ஏ கெழவி.. எங்க உன் பசங்க?"ன்னு கேட்டாரு. அவரு கொரல் குடிசை பூரா கேட்டுது. சாக்கவ்வா நாக்கு கொழற, "தூங்கறாங்க சாமி"ன்னு சொன்னா. காளண்ணன் பொண்டாட்டிக்கு முழிப்பு வந்து ஜன்னல் வழியா எல்லாம் தெரிஞ்சிது. ஆனா என்ன செய்யறதுன்னு எதுவும் புரியாம புருஷன எழுப்பறதுக்கும் கை வராம எழுந்து உக்காந்தா.

அறையிலேருந்து எட்டிப்பார்த்தான் சண்ணய்யன். அப்பறம் வெளிய போவலாமா உள்ளயே இருந்துடலாமாங்கற கொழப்பத்தோட அப்படியே நின்னான். அவன் தலய பாத்த பி.ஸி. ''அங்க பாருடா.. ஆளு எட்டி எட்டிப் பாக்கறத... வாடா வெளிய''ன்னு சத்தம் போட்டான். கயித்தப்போட்டு இழுத்த மாதிரி சண்ணய்யன் அடிச்சிபுடிச்சி வெளிய வந்து அவுங்க முன்னால நின்னான். சண்ணய்யன் கொழந்தை அழ ஆரம்பிச்சிது. அந்தக் கொழந்தய ஒரு கையால தட்டறதும் இன்னொரு கையால உயிர புடிச்சிக்கறதுமா வேர்த்து விறுவிறுத்திருந்தா செலுவம்மா. சண்ணய்யன் சுட்டுடற மாதிரி பாத்த இன்ஸ்பெக்டரு ரேவண்ணனுக்கு கண்ணாலயே சைகை காட்டனாரு. ''இவன் இல்ல ஐயா''ன்னு சொன்னாரு. ரேவண்ணன். இன்னொரு பி.ஸி. கால உதைச்சிக்கினே காளண்ணன் அறைக்குள்ள போனான்.

அங்க எந்தக் கவலயுமில்லாம தூங்கிக்கிட்டிருந்தான் காளண்ணன். பெண்டாட்டிக்காரி என்னென்னமோ பெனாத்துனா. தூங்கிட்டிருந்தவன பாத்து முசுமுசுன்னு மூச்சு வாங்கனபடி லட்டித் தடியாலயே ரெண்டு வச்சான். துக்கம் தாங்க முடியாம அழ ஆரம்பிச்சா காளண்ணன் பெண்டாட்டி. எப்ப பி.ஸி கால்பூட்டு தரையில உதைச்சதோ, அப்பவே அவ துக்கம் தொண்டை வரைக்கும் வந்துடிச்சி. கண்ணத் தேய்ச்சிக்கினே எழுந்து உக்காந்த காளண்ணன் ஊடு பூரா போலீஸ்காரங்க நிக்கறதப் பாத்தான்.

கைகாலு எதுவும் ஓடாம வச்ச கண்ணு வச்சபடி பாத்தான் காளண்ணன். பி.ஸி. லட்டியாலயே காளண்ணன் சட்டைக் காலர கிண்டி மேல தூக்கி "உக்காந்துக்கிட்டிருக்கான் பாரு பொறுக்கி... எந்திரிடா''ன்னு சத்தம் போட்டான். அவ

எழுந்திருக்கறதுக்குள்ள லட்டியாலயே ரெண்டு போடு போட்டு தள்ளி இழுத்து வந்து இன்ஸ்பெக்டர் முன்னால நிக்க வச்சான். ஆனந்தம் தாங்க முடியாத ரேவண்ணன், "இவன்தான் ஐயா"ன்னு சொன்னாரு. சுத்தி இருந்த பி.ஸிங்க தோள் துடிக்க பல்ல கடிச்சிகிட்டே மேல உழுந்து புடுங்க தயாரா இருந்தாங்க. காளண்ணன் நடுக்கம் தாங்காம நின்னிட்டிருந்தான்.

ரொம்ப நேரம் அவன் கண்ணயே உத்துப் பாத்துட்டிருந்த இன்ஸ்பெக்டர், "டேய்... எத்தன நாளாடா இந்த வேலய செய்ற"ன்னு கேட்டாரு. காளண்ணனால நிக்க முடியாத அளவு கால் நடுக்கம். பேச முடியாத அளவுக்கு வாய் நடுக்கம். காலருக்குள்ள லட்டித் தடிய செருகிப் புடிச்சிட்டிருந்தவன் அப்படியே ஒரு திருவு திருவி கழுத்துல குத்தினான். காளண்ணன் வலி தாங்காமம "சாமி"ன்னு கத்தினான்.

இன்ஸ்பெக்டர் மீசய திருகனபடி—

"வேர்க்கடல மூட்டய எங்க வச்சிருக்கே?"

"சாமி"

"சொல்லுடா"

"இல்ல சாமி"

"ஏ.." கர்ஜித்தார்.

"இல்ல சாமி" மேல மேல நடுங்குனான்.

"நாங்களே தேடி எடுக்கறதுக்குள்ள நீயே குடுத்துட்டன்னா பொழைச்சிகுக்குவ.. சொல்லு"

"சாமி.." பேச ஆரம்பிக்கும்போதே தொண்ட அடைச்சி. ஒடம்பு வேர்த்துச்சி.

"நாங்களே தேடி எடுத்துட்டம்னா, ஒன் பொண்டாட்டிய ஏலம் போடறியாடா"ன்னு கேட்டுக்னே பின்னங்கழுத்துல லத்தித்தடி நெருக்கிச்சி.

".."

"சொல்லுடா"

"இல்ல சாமி"

கன்னத்தில ஓங்கி ஒரு அறை விழுந்திச்சி.

காளண்ணனக்கு கண்ணுக்குள்ள இருண்டு போன மாதிரி இருந்திச்சி. அப்படியே கீழ ஒக்காந்துட்டான். உக்காந்தவன ரெண்டு போடுபோட்டுட்டு அடுத்து என்ன செய்யணும்ன்னு கட்டளைக்கு காத்திட்டிருந்தான் பி.ஸி. இன்ஸ்பெக்டர் கண்ணாலயே சைகை செஞ்சதுதான் தாமதம், எல்லா பிஸிங்களும் அவன் மேல உழுந்து அடிச்சி நொறுக்கனாங்க. ஒரு போலீஸ்காரன் அவன அடிச்சிக்கினே சேனாதிபதி மாதிரி நின்னான்.

போலீஸ்காரங்க புருஷன போட்டு அடிக்கறதப் பாத்து ரொம்பவும் பயந்து போய்ட்டா காளண்ணன் பெண்டாட்டி. போலீஸ்காரங்க கண்ணுல மாட்டி தப்பிச்சி வெளிய வந்து நடக்கறதுக்கும் தெம்பு இல்லாம முந்தானையால வாய மூடிக்கினு நின்னா. நிக்கறதுக்கும் முடியாம அங்கயே உக்காந்துட்டா. நடு அறையிலேருந்து எழுந்து வந்த சிவு வலைல மாட்டிக்கன மாதிரி நின்னான். அறைக்குள்ள அக்காக்காரி கௌரம்மா தங்கச்சிக்காரி சின்ன கௌரிய பாக்கறதும் தங்கச்சி அக்காவ பாக்கறதுமா, என்ன செய்யறதுன்னு எதுவும் புரியாம உள்ளயும் வெளியயும் பாத்துக்கினே இருந்தாங்க.

## VIII

வெளியில பத்து பத்துப்பேரா நெறய ஜனங்க சேர்ந்துட்டாங்க. பூமியில முழுசா வெளிச்சம் பரவன சமயத்துல டிரைவரப்பத்தி கவலப்படாம நின்னுட்டிருந்தாங்க. கொஞ்சம் தைரியமான ஆளுங்க நேரா ஊட்டுவாசல் பக்கத்துலியே போயி கண்ணால எட்டிப்பாத்தாங்க. முடிஞ்சா தலயயும் உள்ளவிட்டுப் பாத்தாங்க. ஒருதரம் இன்ஸ்பெக்டர் ஐயா எல்லாரயும் விரட்டியடிக்கிற மாதிரி பார்த்ததுமே எல்லாருமே பயந்து பின்வாங்கனாங்க. சேனாதிபதி மாதிரி லட்டித் தடிய வச்சிக்கினு காளண்ணன் பக்கத்துல நின்னுட்டிருந்த போலீஸ்காரன் அந்த ஜனங்க பக்கத்துக்கு தாவி வந்தான். வாசல்ல நின்னிட்டிருந்த ஜனங்க வெளிய இருந்த கும்பல் மேலயே விழுந்தாங்க. கூடி இருந்த ஜனங்களப் பாத்து அந்த பி.ஸிக்கு உள்ளூர பயமா இருந்தாலும்கூட காக்கிச்சட்டை போட்டிருக்கற தைரியத்துல புடிச்சித்தள்ளி "இங்க என்னங்கடா குரங்கா ஆடுது- போய் அவுங்கவுங்க வேலய பாருங்க"ன்னு திட்டி ரெட்டனான்.

அப்ப கும்பல் தானாவே ரெண்டு பக்கமும் விலகி வழிவிட்டுச்சி. அந்த வழியா மிராசுதாரர் எத்தப்பன் எந்த உணர்ச்சியயும் மூஞ்சில காட்டாம கைல சிகரெட்ட புடிச்சிக்கினே வந்தாரு. உள்ள பூந்து தேடித் தேடிப்பாத்தாலும் எதயும் கண்டுபுடிக்க முடியாத ரேவண்ணன பாத்ததுமே எத்தப்பன், "இதுதான் திருடனப் புடிக்கற லட்சணமா"ன்னு நெனச்சிக்கிட்டாரு. அவர்மேல அவருக்கே நம்பிக்கை வரலை.

மிராசுதாரப் பாத்ததுமே போலீஸ்காரங்க அவருக்கு சல்யூட் அடிச்சி வாசப்படி வரைக்கும்கூட வந்தாங்க.

உள்ள காளண்ணன் திருதிருன்னு முழிச்சபடி குத்துக்கால் போட்டு உக்காந்திட்டிருந்தான். அவன் பொண்டாட்டி கண்ணெல்லாம் வெளுத்துப்போயி உக்காந்திருந்தாள். பூமியில நட்ட காய்ஞ்சிப்போன கிளை மாதிரி இருந்தான். சிவுவும் திருதிருன்னு முழிச்சிட்டிருந்தான். அவமானத்தால குன்னிப்போயி உக்கார்ந்திருந்த சாக்கவ்வா மகன் இருந்த திசையையே பாத்துட்டிருந்தா. வீட்டுக்கு வெளிய ஜனங்க கூட்டம் அதிகமாவ அதிகமாவ போலீஸ்காரங்க கெடுபிடியும் அதிகமாச்சி.

காளண்ணன் ஓரமா செவுத்துல செருகி வச்சிருந்த போட்டாவக் கண்டெடுத்தாங்க போலீஸ்காரங்க. அதுல மலைமாதேஸ்வர சாமி புலிவாகனத்து மேல உக்காந்துக்கினு சிரிக்கற மாதி இருந்திச்சி. போட்டாவுக்கு கீழ ஒரு விபூதிப் பலகை இருந்திச்சி. அதுல ஒன்னு ரெண்டு விபூதி உண்டைங்க இருந்திச்சி. துணிக்கொடில ஒரு பழைய பொடவயும் ரெண்டு ரவிக்கையும் ரெண்டு நிக்கரும், அழுக்கு வேட்டியொன்னும் பழைய கம்பளி ஒன்னும் தொங்கிக்கெடந்தது. மூலையில இருந்த கல்உரல் சோம்பேறி மாதிரி கெடந்தது. அதுக்கு மேல ஒரு காலிகூடை கெடந்தது. நடு அறைக்குப் பக்கத்துல ஒரு கல் அடுப்பு இருந்திச்சி. அதுல மாவு வைக்கற பானைன இருந்திச்சி. அங்கயே தண்ணியெல்லாம் புடிச்சி வச்சிருந்தாங்க. அங்கேருந்து கைக்கெட்டும் தூரத்தில கிளாஸ்ங்க ரெண்டு ஜோடியா படுத்துங் கெடந்ததுங்க. செவுத்துக்குப் பக்கத்துல சாய்ஞ்சி ஓய்வு எடுத்துக்கினிருந்த பெரிய பாத்திரத்தின் வயித்துக்குள்ள அரைசேர் அளவுக்கு பயிறு இருந்திச்சி. அதுக்கு மேல ரெண்டு பானைங்க ஒன்னு மேல ஒன்னா கெடந்தது. இனிமேம தோண்டனாகூட திருட்டுப்பொருள கண்டுபுடிக்க முடியாதுங்கற நெலைமைக்கு வந்தப்பறம் போலீஸ்காரங்க வெளிய வந்தாங்க.

ஐயாவப் பாத்து எல்லா விஷயத்தயும் எடுத்துச் சொன்ன பெரிய பி.ஸி. சிரிச்சிக்கினே திண்ணப்பக்கம் தேடிட்டிருந்த மத்த பி.ஸிங்களோட சேந்து தானும் தேட ஆரம்பிச்சான். ஒரு பி.ஸி வெறகுங்கள கலச்சி தேடி ஆரம்பிச்சான். இன்னொருத்தன் திண்ணைல இருந்த பெட்டியையே தலைகீழா கவுத்துட்டு தேட ஆரம்பிச்சான். மாடு கன்னுங்களுக்குத் தீனி போடறதுக்காக வைக்கோல் அதுஇதுன்னு ஒரு மூலையில அடச்சி வச்சிருந்தாங்க. அதுக்குள்ள லட்டித் தடியவிட்டுத் தொழவித்

தேடனாங்க. வைக்கோல்ல இருந்த குப்பை பறக்க ஆரம்பிச்சிது. எறவாணத்துல ஏறன ரேவண்ணன் அங்குலம் விடாம தேடிப்பாத்துட்டு எறங்கனாரு. தண்ணீரு சுடவைக்க வச்சிருந்த பெரிய பானைய தெறந்து பாத்தான் ஒருவன். அதுக்கப்பறம் எல்லாரும் ஒன்னா சேந்து சின்ன அறைக்கு முன்னால எதிரும் புதிருமா இருந்த தொம்பைக்குள்ளயும் தலையவிட்டுத் தேடனாங்க. ஒயரம் பத்தாததால ஒரு பி.ஸி ரேவண்ணன தன் தோள்மேல ஏறித் தேடிப்பாக்கச் சொன்னாரு. அந்த தொம்பைக்குள்ள பழைய கால இருட்டு. தேடும்போது அதுதான் வெளிய வந்தது. பழைய சாக்குங்க எல்லாம் கெடந்தது. தொம்பைக்குள்ள லட்டித் தடிய விட்டு மேலேயிருந்து கீழயும் கீழயிருந்து மேலயுமாவும் வலது கை பக்கத்திலிருந்து எடது பக்கம் வரைக்கும் எடது பக்கத்திலிருந்து வலது பக்கம் வரைக்குமாவும் தேடிப் பாத்தான் ரேவண்ணன். வெறும் டங் டங்குனு சத்தம்தான் கேட்டுது. "ஒன்னும் இல்ல"ன்னு ரேவண்ணன் சொல்றதுக்கு முன்னாலயே, அவரத் தோள் மேல தூக்கி வச்சிட்டிருந்த பி.ஸி. கீழ எறக்கிவிட்டான். "தோ வந்துட்டேன் ஐயா"ன்னு பெரிய பி.ஸிகிட்ட சொல்லிட்டு பின்வாங்கி இன்ஸ்பெக்டர் ஐயா கண்ணுல படாம வெளிய வந்தான்.

வெளிய ஒரே ஜனக்கூட்டம். கூட்டத்த கட்டுப்படுத்திட்டிருந்த பி.ஸிகிட்ட பீடி பத்த வச்ச ரேவண்ணன் குடிசைக்குப் பின்பக்கமா வந்தான். சந்துல எங்கனாச்சிம் திருட்டுப் பொருள வச்சிருக்கலாமோன்னு ஒரு சந்தேகம் அவர் தலையில மின்னல் மாதிரி மின்னிச்சி. அடிச்ச மின்னல் ஆளயே தூக்கிப்போட்ட மாதிரி இருந்திச்சி. எப்படியாவது கண்டுபுடிக்கணும்னு நெனச்சாரு. அந்தத் தெரு முழுக்கத் தேடுனாலும் எந்தச் சந்துலயும் எந்த அடையாளமும் கண்டுபுடிக்க முடியாம நடந்து நடந்து அலுத்துப்போயி கண்ணே பூத்துப்போச்சி. கடைசியா ஒரு சந்துல ஒன்னுக்கிருக்கறதுக்காக ஒக்காந்தாரு.

அங்கங்க செவுத்தோட ஒட்டி நின்னுக்கினு தலய மட்டும் எட்டிப்பார்த்தபடி பொம்பளைங்க நின்னுட்டிருந்தாங்க. ரேவண்ணன் உக்காந்துட்டத பாத்ததும்என்னமோ அங்க இருக்குது போலன்னு நெனச்சி மறைஞ்சிநின்னு எட்டிப் பாத்தாங்க. ரேவண்ணன் இருந்த கோலத்தக் கண்டு சிரிப்பு பொங்கி வந்திச்சி. முந்தானையால வாய மூடி சிரிப்ப அடக்கிக்கினே ஓடி மறைஞ்சாங்க. யாராவது "என்ன விஷயம்"னு கேட்டா சும்மா பொய்க்கோபத்தோட "நீயே போய்

பாத்துக்கோ"ன்னு சொன்னாங்க. போய் பாத்தவளும் அவளப் போலவே மாறிப்போனா. முந்தானயால வாய மூடிட்டிருந்தாலும் அடக்க முடியாம ஒருத்தி சிரிச்சிட்டா. சுத்தி இருந்த பொம்பளைங்க எல்லாருமே சிரிக்கவே அங்க ஒரே சிரிப்பு மயமாய்டுச்சி. இனிமே தொடை நடுக்கம்ல்லாம் கூடாது தைரியமா இருக்கணுமின்னு மனசுல முடிவு கட்டிட்டு எழுந்தாரு ரேவண்ணன்.

ரேவண்ணன் அங்க ஒன்னுக்கு போய்க்கிட்டிருந்த சமயத்தில இங்க இன்னொரு அறைக்குள்ள சோதனை நடந்துட்டிருந்தது. அந்த அறைய அதுவரைக்கும் பாக்காம இருந்த போலீஸ்காரங்க உள்ள நொழஞ்சாங்க. அங்க ஒரே இருட்டு. பயந்துபோன செலுவம்மா அழுதுட்டிருந்த புள்ளைங்களயெல்லாம் வெளிய இழுத்துவந்தா. நா முன்னாடி நீ முன்னாடின்னு போட்டி போட்டுகிட்டு எல்லாரும் வெளிய ஓடி வந்தாங்க. தன்னுடைய எடத்துக்கு நேர்ந்த கதியைக் கண்ணால பாக்க முடியாம தலகுனிஞ்சி குழந்தையை நெஞ்சோட தழுவி தட்டிக்கொடுக்க ஆரம்பிச்சா. அவளச் சுத்தியும் முன்னப் பின்ன இருந்த கொழந்தைங்க ஒன்னு சத்தம்போட்டு அழ ஆரம்பிச்சாங்க.

போலீஸ்காரங்க கஷ்டப்பட்டு உள்ளபோன அந்த அறைக்குள்ள, அது மாதிரி ரெண்டு அறைபுடிக்கற அளவு சாமானுங்க இருந்திச்சி. பெரிய பி.ஸி. ரொம்ப வேகவேகமாக அங்க இருந்ததயெல்லாம் கலச்சிப்போட்டு, தூக்கிப்போட்டு ஒடைச்சாரு. பாக்கற எடத்துல எல்லாம் ஏதாவது ஒரு செம்பு, கிளாஸ்ங்க இருந்திச்சி. ஒன்னு மேல ஒன்னா அடுக்கி இருந்த பெரிய பானைகள்ல ஒரு பானைக்குள்ள ஆறேழு சேர் சோளம் இருந்திச்சி. இன்னொரு பானைக்குள்ள சோளமாவு இருந்திச்சி. நடுவுல அம்போன்னு விழுந்து கெடந்த பொட்டியில சட்டைத்துணிங்க துருத்திக்கினு இருந்திச்சி. இன்னும் மிச்சமிருந்த துணிமணிங்களும் போர்வைங்களும் கொடியிலயும் செவுத்து மேலயும் கெடந்தது. கீழ ஒரு பாய் விரிச்ச வாக்குல கெடந்தது. இன்னொன்ன சுத்தி வச்சிருந்தாங்க. பக்கத்துல ஒரு பித்தள அண்டாவில தண்ணி நெறய இருந்தது. அதச் சுத்தி ரெண்டு மூணு க்ளாஸ்ங்க கெடந்தது. செவுத்துல அடிச்ச ஆணிங்கள்ல தோசைக்கல்லும் பாட்டில்களும் தொங்கிட்டிருந்திச்சி. ஒரு பாட்டில்ல பாதி அளவு மண்ணெண்ணெய் இருந்திச்சி. ஒரு பி.ஸி. ஒரு குடத்து மூடியத் தெறந்து கை உட்டப்போ, சோளமும் நெல்லும் கையோட வந்திச்சி. அதுல கொஞ்சம் சாம்பல் கலந்திருந்தாங்க. அவுங்க

நாலுபேரும் உடற மூச்சுக்காத்தே ஒருத்தர ஒருத்தர் தள்ளற மாதிரி இருந்திச்சி. எல்லாருமே ஒவ்வொருத்தரா மெதுவா வெளிய வந்தாங்க.

வெளிய வந்தவங்க ஒரு கணம்கூட தாமதிக்காம தடதடன்னு பக்கத்துல இருந்த இன்னொரு அறைக்குப் போனாங்க. பயந்தபடியே சாக்கவ்வா, "சாமிங்களா.. பூஜை அறைக்குள்ள பூட்ஸ் காலோடயே வந்துட்டிங்களே"ன்னு சொன்னா. பெரிய பி.ஸி. வேகமாக காலால ஒருதரம் கீழ ஒதைச்சி, "யேய்.. சும்மா வாய மூடிட்டுகெட... இன்னொரு தரம் ஏதாவது பேசனா, பூட்ஸாலயே வாய்ல ஒதைப்பேன்"ன்னு சொல்லிக்கினே அந்த அறைக்குள்ள நொழஞ்சான். வச்ச கண்ணு வாங்காம வாய மூடிட்டு பாத்துகிட்டிருந்தா சாக்கவ்வா.

சாமி அறைக்குள்ள இருந்த அக்கா தங்கச்சி ரெண்டுபேரும் மூச்சு காட்டாம வெளிய வந்து பக்கத்து அறைப்பக்கம் நின்னுகிட்டாங்க. போர்வை போத்திக்கினு செவுத்தோரமா கெடந்த டெபுடி கமிஷனர் "அம்மா அம்மா"ன்னு அழுதுகிட்டே, மெதுமெதுவா தானே எழுந்து நடந்து வந்து பொறுமையா தரையில கைய ஊனிகிட்டு கீழ உக்காந்திச்சி.

## IX

வீட்டு வாசல்ல ஏற்கனவே கூடியிருந்த கூட்டத்தோட இன்னும் கொஞ்சம் ஜனங்க சேர்ந்துகிட்டாங்க. அந்தக் கும்பல்ல ஆளுங்கள ரெண்டுபக்கமும் தள்ளிட்டு யாரோ ஒரு ஆளு முன்னால வந்தான். ஜனங்கள கட்டுப்படுத்தறதுக்காக அங்க நின்னுட்டிருந்த பி.ஸி அவனப் பின்னால தள்ளுனான். கடைசியா அவன் "நானும் இந்த ஊட்டுக்காரன்தான் சாமி"ன்னு சொன்னான். அந்த பி.ஸி. கபக்குனு அவன் தோளப்புடிச்சி "நீதான் வேணும் எங்களுக்கு.. வா வா"ன்னு இழுத்தும்போயி மனக்கஷ்டத்துல இருந்த ரேவண்ணன்கிட்ட ஒப்படைச்சான். மனசுக்குள்ளயே குருசித்தன் மூஞ்சிய நாலுதரம் யோசிச்சிப் பாத்த ரேவண்ணன் அடையாளம் கண்டுபுடிச்சிட்டாரு. அவன் தோளப்புடிச்சித் தள்ளிப்போயி இன்ஸ்பெக்டர் ஐயா முன்னால தள்ளி "இவன்தான் ஐயா ராத்திரி வந்துட்டுப்போன ஆளு"ன்னு சொன்னாரு.

இன்ஸ்பெக்டர் ஒருதரம் கண்ணாலயே சுடற மாதிரி பாத்தாரு.

"நீதான் ராத்திரி வந்துட்டுப்போன ஆளா."

"ஆமாம் சாமி"

"எதுக்குடா வந்திருந்தே?"

"சாப்படறதுக்கு வந்திருந்தேன் சாமி"

"அதுக்கப்பறம் எங்கடா போனே?"

"மாரியாத்தா கோயிலுக்கு படுக்கறதுக்குப் போயிருந்தேன் சாமி"

"தூக்கிவந்த வேர்க்கடலய என்னடா செஞ்சே?"

"இல்ல சாமி"

இன்ஸ்பெக்டருக்கு கோபம் பொத்துக்கினு வந்திச்சி.

அங்கயும் இங்கயும் சுத்திப் பாத்திட்டிருந்த இன்ஸ்பெக்டரு தூரத்தில சின்ன கௌரி பக்கம் வெரலக்காட்டி, "யே... பொண்ணு- வா இங்க"ன்னு சொன்னாரு. சின்னகௌரி நிமுந்து பாத்துட்டு தலைய குனிஞ்சி, அங்கயே நின்னுட்டிருந்தா. இன்ஸ்பெக்டரு வேகமா சத்தம் போட்டாரு. சின்னகௌரி வந்து நின்னா. அவ ஒடம்பு நடுங்கிச்சி.

"யே- பொண்ணு- உண்மையச் சொன்னா உனன ஒன்றும் செய்யமாட்டேன்"

சின்னகௌரி உதட்டக் கடிச்சிகிட்டா.

"வேர்க்கடல மூட்ட எங்கே?"

சின்னகௌரி வாயைத் தெறக்கல.

"ம்- பேசு"

சின்னகௌரி வாய்க்குள்ள முந்தானய வச்சி அடச்சிகிட்டா.

இன்ஸ்பெக்டர் கையில இருந்த தடி சின்னகௌரி கழுத்துல எறங்கி தடவிக் கொடுத்துச்சி. சின்னகௌரியால எதுவும் பேச முடியல. நெஞ்சுக்குள்ளயே அடங்கிப்போச்சி. குருசித்தன் இன்ஸ்பெக்டர் உத்துப்பார்த்தான். இன்ஸ்பெக்டர் ரூல் தடிய சின்ன்கௌரி கழுத்திலேருந்து எடுத்து குருசித்தன் கண்ணுக்குள்ள குத்தறமாதிரி காட்டி, "மொவன் பாக்கறதப் பாரு- கண்ண தோண்டி எடுத்துருவேன்..."னு சொல்லிப் பல்ல நறநறன்னு கடிச்சாரு. அப்பறமா சிகரெட்ட பத்த வச்சிக்கனாரு.

சாமி அறைக்குள்ள வந்த பி.ஸி.ங்க அந்தப்பக்கம் ஒரு கிளி இந்தப் பக்கம் ஒரு கிளி நடுவுல கிருஷ்ணரு இருக்கற செல ஒன்னு கெடக்கறதப் பாத்தாங்க. அந்த செல முழுக்க அழகா அலங்காரம் பண்ணி வச்சிருந்தாங்க. பக்கத்துல ஒரு குத்து வெளக்கு இருந்திச்சி. அந்த வெளக்குல திரிங்க இருந்திச்சி. வெளக்குல எண்ணெய் இருந்ததோஇல்லயோ யாரும் பார்க்கல.

கீழ ஒரு மூங்கில் கூடைக்குள்ள ஒன்னு ரெண்டு பாவாடை, புடவை ரவிக்கை, உள் துணிங்கள மடிச்சி வச்சிருந்தாங்க. அங்க மூங்கிலாலான ஒரு எறவாணம் இருந்திச்சி. அதுல ஒரு கூடை இருந்திச்சி. அதுல கால்படி, அரைப்படியெல்லாம் கெடந்தது. அதத்தவிர மற்ற எடங்களில போன அவுங்க பார்வை அங்க இருந்த பழம்பொடவ, புதுப்பொடவ, வேட்டி மேலல்லாம் போச்சி. தண்ணி அண்டா மேல ஒரு தட்டும் அதும் மேல ஒரு செம்பும் தட்டும் இருந்ததக்கூடப் பாத்தாங்க. அதுக்கு முன்னால மோர் கடையற கோல் தொங்கிட்டிருந்திச்சி. மேலேயிருந்து கயிறு கட்டித் தொங்க விட்டிருந்த உறியில எண்ணெய் இல்லாத எண்ணெய் குடம் நெய் இல்லாத நெய்ப்பல்லா எல்லாத்தயும் ஒன்னுமேல ஒன்னு அடுக்கி வச்சிருந்திச்சி. எறவாணம் பூரா சாமிக்கு வேண்டிக்கினு காசு கட்டிவச்ச மஞ்சள் துணி முடிச்சு தொங்கிட்டிருந்திச்சி. அதுக்குக் கீழ சாமி படங்கள வச்சிருந்தாங்க. அங்கங்க வத்தி செருகி வச்ச அடையாளம் இருந்திச்சி. அடுப்புக்கு பக்கத்திலயும் மேலயும் கீழயும் அந்தப் பான இந்தப் பானன்னு ஏகப்பட்டது சுடுகாட்டுல விழுந்து கெடக்கற மாதிரி கெடந்தது. கூரை மேல பாத்தபடியே போலீஸ்காரங்க திரும்பி நடந்தாங்க.

இன்னும் சாமி அறையில இருந்த ஒரு எறவானம்தான் பாக்கி இருந்தது. பெரிய மீசையும் தொப்பையும் தொந்தியுமா தடியா இருந்த பி.ஸி ஒருத்தன் சாமி அறைக்கதவுல ஒரு காலவச்சி ஊனி எறவாணத்து மேல ஏறினான். அங்க பழைய வேலைக்கு பயன்படாத சாமானுங்க, பழைய பாய், ஒரு பழைய காலத்து பெட்டி எல்லாம் இருந்திச்சி. அங்கேயிருந்து அதக்கீழ தள்ளிட்டு தொப்பை குலுங்க கீழ எறங்கனான் பி.ஸி. புஸ் புஸ்னு மூச்சு வாங்கிக்கினே கொஞ்ச நேரம் நின்னான். அந்தப் பழைய காலப் பொட்டிக்குள்ள பழங்காலத்து செல்லாத காசுங்க கெடந்தது. பொட்டிய கீழ கவுத்து மறுபடியம் ஒருதரம் சோதிச்சான் பி.ஸி. அப்பறம் வெளிய வந்தான். எந்தச் சோதனையிலும் பிடிபடாம சுவர் மேல இருந்த மயில்ங்க ஆட்டம் போட்டுக்கினு இருந்ததுங்க.

பெரிய பி.ஸி வந்து நின்ன நெலைமையப் பாத்ததுமே அங்க எதுவும் இல்லைங்கறது இன்ஸ்பெக்டருக்குப் புரிஞ்சி போச்சி. பார்த்ததயெல்லாம் விவரமா ஐயாகிட்ட சொன்னான் பெரிய பி.ஸி. எறவாணத்துமேல ஏறி எறங்கன பி.ஸி அவன மேலயும் கீழயும் பாத்தான். இன்ஸ்பெக்டர் ஐயா ரேவண்ணனக் கண்ணாலயே பக்கத்துல வரச்சொன்னாரு. நடுங்கனபடியே பக்கத்துல வந்த ரேவண்ணன் அட்டென்ஷன்ல நின்னான்.

"எங்கய்யா...?"

"ஐயா.. எங்க அம்மா மேல சத்தியமா..."

"சொல்லு.."

"நானே என் கண்ணால பாத்தேன்"

"முட்டாள்.. சரியா சொல்லு"

"சரியா பாத்தேன் ஐயா.. அவன்தான் ஒரு மூட்டைய தூக்கிக்கினு..."

"நீ எங்க சாவறதுக்குப் போற..."

"நான் கண்முழிச்சி காவல்காத்துக்கிட்டே இருந்தேன் ஐயா.."

"அப்ப அது எங்க போச்சு..?"

"ஐயா..."

"வீட்டுக்குள்ள இருக்கறவங்களே ஒன்னுக்கு ரெண்டா எல்லாரும் தின்னு முடிச்சிட்டாங்களா..?"

"ஐயா..."

"சீ.. எங்கனா தொலஞ்சி போ.."

குச்சி மாதிரி இருந்த ரேவண்ணன் கையும் காலும் அசைக்க முடியாம ஒன்னோடு ஒன்னு ஒட்டிக்கிச்சி.

அதுக்குள்ள எப்படியோ பத்து பதினஞ்சி ஜனங்க வந்து உள்ள வந்து கப்சிப்னு நின்னாங்க. இன்ஸ்பெக்டருக்கும் ஒன்னும் புரியல. வயித்துல நெருப்பு கட்டி வச்சி இருக்கறவங்க இந்த ஜனங்க. தின்னிருந்தாலும் தின்னிருக்கலாமின்னு தோணிச்சி. இன்ஸ்பெக்டர் ஐயா ரூல்தடியாலயே காளண்ணன் கழுத்த நிமுத்தி "இந்த தடவ பொழச்சிக்கட்டடா மொவனே. நீ முழிச்ச நேரம் நல்லா இருக்குது. இன்னொரு தரம் ஏதாச்சிம் கையில கெடைக்கட்டும். உன் உடம்புத்தோல உரிச்சிடறேன்"ன்னு எச்சரிக்கை கொடுத்தாரு.

அந்த எச்சரிக்கைக் குரல் பக்கத்திலேயே சுவரோரமா இருந்த ரேவண்ணன் காதுலயும் வந்து விழுந்திச்சி. உடம்பு, மனசு, ஆத்மாவின் சக்தியெல்லாம் கூட்டி ஒருதரம் ரெண்டு காலையும் ஒதைச்சாரு ரேவண்ணன். அவரு பாரத்தயும் அவருடைய பூட்ஸ் பாரத்தையும் தாங்காம அவரு உதைச்ச இடத்துல பள்ளமாச்சி. உடனே, "இந்த எடத்துல எனக்கு ஏதோ சந்தேகம் சாமி.. சத்தம் வழக்கத்துக்கு மாறா இருக்குது"ன்னு சொன்னாரு ரேவண்ணன். ரெண்டு கையாலயும் அந்தப் பள்ளத்த தோண்டனாரு. ரெண்டு மூணு எலிங்க வெளிய வந்து வேகவேகமா ஓடி மறைஞ்சிது. ஒரு வளைக்குள்ள கைய உட்டாரு ரேவண்ணன். வெளிய எடுத்தப்போ அவரு கையில பத்துப் பதினஞ்சி வேர்க்கடல இருந்திச்சி. உடனே சாமியே

மேல வந்து எறங்கன மாதிரி "கெடைச்சிடுச்சி ஐயா"ன்னு கைய நீட்டிக்கினே கத்தனாரு ரேவண்ணன். இன்ஸ்பெக்டர் அதப் பாத்துட்டு, "எல்லாத்தயும் ஒரு மூட்டையா வாரி கட்டிக்கோ... போய் உன் பொண்டாட்டி புள்ளைங்களுக்குக் கொடு"ன்னு சொன்னாரு. பயத்தால ரேவண்ணன் கைகாலு நடுங்க, கையில இருந்த கடலைங்க எல்லாம் கீழ விழுந்திச்சி. அங்கயும் இங்கயுமா ஓடிட்டிருந்த எலிங்களயே பாத்தபடி குனிஞ்ச தல நிமிராம நின்னிட்டிருந்தாரு ரேவண்ணன்.

எறவாணத்துல ஏறி எறங்கன அந்த பெரிய பி.ஸி. தடியன் இன்னும் சிரிச்சிட்டிருந்தான். இன்ஸ்பெக்டர் ஐயா மிராசுதார் பக்கம் திரும்பி, "திருடனப் புடிக்கற பொறுப்பு இனிமேல நானே பாத்துக்கறேன்"னு சொல்லிட்டு காளண்ணன் பக்கம் திரும்பி ஒரு மொறைப்பு மொறைச்சிட்டு கௌம்பறதுக்காகத் திரும்பனாரு. அப்ப சாக்கவ்வா சும்மா இருக்கமுடியாம "சாமி"ன்னு கூப்புட்டா. இன்ஸ்பெக்டரு, ஏட்டு, பி.ஸி.ங்க எல்லாரும் திரும்பிப் பாத்தாங்க.

"சாமி..."

"என்ன கெழவி"

"என் கோழி ஒண்ணு முந்தா நாள்லேருந்து காணாம போய்டுச்சி சாமி..."

"எங்க போச்சி...?"

"தெரியல சாமி. இன்னும் வீட்டுக்குத் திரும்பி வரலை சாமி"

இன்ஸ்பெக்டருக்கு சிரிப்பு வந்திருச்சு.

"கோழி எப்படி இருந்திச்சி கெழவி"

"கொஞ்சம் இரு சாமி..."

கைத்தடிகூட இல்லாம எழுந்துபோன சாக்கவ்வா கோழிக்கூண்டு மேல போட்டிருந்த மூடிய தெறந்தா. கொக்கரக்கோன்னு சத்தம் போட்டுக்கினே சேவல், பொட்டக்கோழி, குஞ்சுங்கள்ளாம் வெளிய வந்திச்சி. சாக்கவ்வா நல்லா கொழு கொழுன்னு இருந்த கோழிய காட்டி சொன்னா.

"அதுவும் இதுவும் ஜோடி சாமி"

"ரொம்ப நல்லா இருக்குது கெழவி- அந்தக் கோழிய இப்படி எங்கிட்ட கொடு... இதவச்சி அந்த ஜோடிக்கோழிய புடிச்சிடலாம்"

"அப்படிச் செய் சாமி... என் வாயக்கட்டி வவுத்தக்கட்டி அத வளத்தன்..."

எல்லாரும் உழுந்து உழுந்து சிரிச்சாங்க.

அது சாக்கவ்வாவுக்கு பொறுமையாத்தான் புரிஞ்சிது.

அதுக்கப்பறம் அவள் "ஐயோ- ஐயோ"ன்னு அடிச்சிகிட்டது யாருக்கும் கேக்கலை. உக்காந்துட்டிருந்த காளண்ணன் எழுந்தான். நின்னுட்டிருந்த சண்ணய்யனும் அவனோட சேர்ந்து அந்தக் கோழியப் புடிக்கறதுக்காக நடந்தாங்க. அவுங்களோட மத்தவங்களும் சேந்துகிட்டாங்க. மிராசுதாரு ஒரு ரூபாய் நோட்ட எடுத்து சாக்கவ்வாகிட்ட நீட்டி, "இந்தா வாங்கிக்கோ கெழவி- வெத்தல பாக்கு செலவுக்கு"ன்னு சொன்னாரு. "ஐயோ... வேணாம் சாமி... ஐயோ- வேணாம் சாமி"ன்னு சொல்லிக்கினே வாங்கிகிட்டா சாக்கவ்வா. இன்னொரு பக்கம் அந்தக் கோழிய புடிக்க ஒரு கூட்டமே கௌம்பிச்சி. அந்தக் கோழி நடந்தா அவுங்களும் நடப்பாங்க. அது தாவிப் பறந்தா அவுங்களும் தாவிப் பறப்பாங்க. கடைசியா ஒருவழியா அந்தக் கோழி கெடைச்சிது. கோழி கால்ல ஒரு கயிறு கட்டி அத ஜீப்புல கட்டுனாங்க. அந்த ஜீப்பு புழுதிய வாரி அடிச்சிட்டு புர்ர்ருனு கௌம்பிப்போயிருச்சு. ஜீப்புலருந்து அடிச்ச புழுதி தெருவயே மறைச்சிருச்சு.

Lasertypset at Capital Creations. New Delhi
Printed at Tarang Printers. Delhi